

# நாட்குறிப்பு

# 1970

சௌமிய—சாதாரண

# ஜோதிட முதல் நூல் என்னும்

# சுந்தரசேகரம்

## (முதற் பாகம்)

இஃது

பல சோதிட சாஸ்திரங்களினின்றும் திரட்டி

சோதிட பிரதம்பாலசிக்ஷையாக

டி. எஸ். அய்யாசாமி பிள்ளையவர்களால்

அமைக்கப்பெற்றதை

திரிசிரபுரம்-கா. பொன்னுசாமி பிள்ளையவர்கள்

பதிப்பிக்கப்பெற்ற பிரதிக்கிணங்க

புதுக்கியும், விளக்கியும், திருத்தியும்

செப்பஞ் செய்யப் பெற்று,



சென்னை:

B. R. தேவராஜ நாயகர் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

உ

கணபதியே நம :

சோதிட முதல் நூல் என்னும்

# சுந்தர சேகரம்

(முதற் பாகம்)

இஃது

பல சோதிட சாஸ்திரங்களினின்றும் திரட்டி

சோதிட பிரதம பால சிக்ஷைபாக

டி. எஸ். அய்யாசாமி பிள்ளையவர்களால்

அமைக்கப் பெற்றதை,

திரிசிரபுரம் - தா. பொன்னுசாமி பிள்ளையவர்கள்

பதிப்பிக்கப்பெற்ற பிரதிக்கிணங்க

புதுக்கியும், விளக்கியும், திருத்தியும்

செப்பஞ் செய்யப் பெற்று,

சென்னை:

B. R. தேவராஜ நாயகர் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

---

1980

[விலை ரூ. 3—50

ஸ்ரீ கணபதியே நம :

ஜாதக விளக்கமென்னும்

# சுந்தர சேகரம்

## முதற் பாகம்

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது இவர்கள் 9-பேரும் நவக்கிரகங்களாம். இவர்கள் சஞ்சாரமாக விருக்கின்ற இடத்துக்கு இராசி மண்டலமென்று பெயர். அதில் மேஷம் ஆதியாகவும் மீனம் அந்தமாகவுள்ள 12-இராசிகளுண்டு.

| | | | |
|---|---|---|---|
| 12 மீனம் $4\frac{1}{4}$ | 1 மேஷம் $4\frac{1}{4}$ | 2 ரிஷபம் $4\frac{3}{4}$ | 3 மிதுனம் $5\frac{1}{4}$ |
| 11 கும்பம் $4\frac{3}{4}$ | இராசிகளிற் கண்டிருக்கிறவண்ண அந்தந்த இராசிக்குரிய நாழிகையாம் இராசி 12-க்கு மொத்த நாழிகை-60 இதை இலக்கினமென இராசியான சங்கை என்றும் சொல்லப்படும் | | 4 கடகம் $5\frac{1}{2}$ |
| 10 மகரம் $5\frac{1}{4}$ | | | 5 சிம்மம் $5\frac{1}{4}$ |
| 9 தனுசு $5\frac{1}{2}$ | 8 விருச்சிகம் 5 | 7 துலாம் 5 | 6 கன்னி 5 |

ஒவ்வொரு தினத்திலுமுள்ள பகல் இரவு மொத்த நாழிகை 60-ம் இந்த 12-இராசிகளுக்கு உரிய மொத்த நாழிகையாம். ஒவ்வொரு தினத்திலு மிந்த 12-இராசிகளும் முதலில் உதயமாகு மிராசி முதல் வரிசைக்கிரமமாய் ஒன்றின்பின் னொன்றாக உதயமாகிசெல்லாகிக் கொண்டிருக்கிறது. சூரியஉதயகாலத்தில் சூரியனோடு எந்த இராசி உதயமாகிறதோ அதுதான் முதலில்

உதயமாகு மிராசியாம். அதையறிய வேண்டிய விபரம் சூரியன் சித்திரை மாதத்தில் மேஷத்திலும், வைகாசி மாதத்தில் ரிஷபத்திலும், ஆனி மாதத்தில் மிதுனத்திலும், ஆடிமாதத்தில் கடகத்திலும், ஆவணி மாதத்தில் சிம்மத்திலும், புரட்டாசி மாதத்தில் கன்னியிலும்,ஐப்பசி மாதத்தில் துலாத்திலும்,கார்த்திகை மாதத்தில் விருச்சிகத்திலும், மார்கழி மாதத்தில் தனுசிலும், தைமாதத்தில் மகரத்திலும், மாசி மாதத்தில் கும்பத்திலும், பங்குனி மாதத்தில் மீனத்திலுமிருந்து வருகிறபடியினலே அந்தந்த மாதத்துக்கு அந்தந்த இராசியின் பேருங் கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்த மாதத்தில் எந்த இராசியில் சூரியனிருக்கிறதோ அந்தமாதத்தில் அந்த இராசிதான் சூரியனேடு முதலில் உதயமாகிறது. ஒவ்வொரு மாதத்துக்குரிய இராசி அந்தந்த மாதத்தின் முதல் தேதி முதல் கடைசிதேதி வரைக்கு முதயமாகிக் கொண்டிருக்கிறதில் ஒவ்வொரு தேதியிலும் அதற்கு ஏற்பட்ட பூரா நாழிகையோடும் சூரிய உதயகாலத்தில் உதயமாகிக் கொண்டிருக்கிறதா அல்லது தேதிக்குத் தேதி குறைந்த நாழிகையுடனுதயமாகிறதா வென்பதையும், குறைந்து வருமானல் தேதி ஒன்றுக்கு இத்தனை விகடிகை வீதம் குறைந்து வருமென்பதையும், ஒரு குறிப்பிட்டதேதியின் உதயகாலத்தில் ஷெஇராசியில் செல்லுபோக பாக்கி யிவ்வள வென்பதையும் அந்த தேதிக்கு மொத்தம் 60-நாழிகை எவ்விதமாகு மென்பதையு மறியவேண்டிய விபரம். முதல் தேதியில் மட்டு மதற்குரிய பூரா நாழிகையோடு உதயமாகும். மற்றப்படி அந்தராசியின் பூரா நாழிகையை விகடிகையாக்க அதை அந்த மாதத்துக்கு எத்தனை தேதி என்று கண்டு அத்தனை தேதிக்கும் பங்கிட்டு தேதி ஒன்றுக்கு இத்தனை விகடிகையென்றும் அதைக் குறிப்பிட்டதேதிக்கு முன் தேதியால் பெருக்கி ஷெ இராசிநாழிகையிற் கழித்து மிச்சமான விகடிகை எதுவோ அதுதான் ஷெ குறிப்பிட்ட தேதியின் உதயகாலத்தில் ஷெ இராசியில் செல்லானது போக பாக்கியாயிருந்த விகடிகையென்றும் அத்துடன் மற்ற இராசிகளின் நாழிகைகளையும் சேர்த்துக்கொண்டதை அந்த தேதிக்கு மொத்த நாழிகை யென்றுமறிக. (60-விகடிகைகொண்டது ஒரு நாழிகையாம்.)

## உதாரணம்

கார்த்திகைமீ 25-ந்தேதியை ஒரு குறிப்பிட்ட தேதியாய் வைத்து மேற்சொல்லியதை விவரித்துக்காட்டுவோம். அதாவது கார்த்திகை மாதத்துக்குரிய இராசி விருச்சிகம். அதற்கு

ஏற்பட்ட பூராநாழிகை 5¼-இதை 60-தினுல் பெருக்க வந்தது 315-விகடிகை. இதை அந்தமாதத்துக்கு30உயானுல் 30-தினுல் வகுத்து தேதி ஒன்றுக்கு வந்த விகடிகை -10½ (இந்தவீதம் ஷெ இராசியில் இராசிக்கு தேதிக்குத் தேதி குறைந்தேவரும் அதாவது சூரியன் ஷெ இராசியில் இந்தவீதம் தேதிக்குத் தேதி நடந்துகொண்டே வருகிறது) இதை முந்தின தேதியாகிய 24உ யாலும்பெருக்கவந்தவிகடிகை-252இதைஷெ இராசியின்மொத்த விகடிகையாகிய 315-ல் கழித்து மிச்சம் வந்த விகடிகை 63-இது தான் ஷெ 25 தேதியில் உதயகாலத்தில் ஷெ இராசியில் செல்லானது போக பாக்கியாயிருந்த விகடிகை. இத்துடன் இதற்கடுத்த இராசியாகிய தனுசுமுதல் துலாம் வரையிலுள்ள நாழிகைகளைக் கூட்டிவந்த மொத்த நாழிகை-55, விநாடி-48, இத்துடன் சூரிய உதயத்துக்கு முன் விருச்சிகத்தில்செல்லாக வேண்டியவிகடிகை 252-ம் சேர்க்கவந்தமொத்தநாழிகை60-என்றறிக. 2½-நாழிகை அல்லது 150 விகடிகை கொண்டது கடிகார யந்திரத்தின்படி ஒரு மணிநேரமாகும்.

## ஜன்மலக்கினம் அறியும் வகை

முன் விவரித்த விதமாய் ஜனன மாதத்துக்குரிய இராசிநாழிகையில் ஜனனமான தேதியின் உதயகாலத்தில்பாக்கியாயிருந்த தெதுவோ அதிலிருந்து ஜனன நாழிகைவரைக்கும் அதே இராசியில் சூரியன் சென்றிருக்கும் விகடிகளையும் கழித்துவந்த மிச்சத்தையும் அடுத்த இராசிகளின் நாழிகைகளையும் ஒவ்வொன்றாய் ஜனன நாழிகை வரைக்கும் சேர்த்து வந்த நாழிகை எந்த இராசியில் சேருகிறதோ அந்த இராசிதான் ஜன்ம லக்கினமாம்.

## உதாரணம்.

பங்குனிமீ 15உ பகல் 30-நாழிகைக்கு ஒரு குழந்தை ஜனனமானுல் ஜன்ம லக்கினம் காணவேண்டிய விபரம்.

ஷெ மாதத்திற்குரிய மீனராசியின் மொத்தநாழிகை 4¼-ல் (அந்த மாதத்துக்கு முப்பதுதேதியானுல்) 15உ உதயகாலத்தில் பாக்கியாயிருந்த விகடிகை 136. தேதி ஒன்றுக்கு 8½-விகடிகை விதமாய் ஷெ இராசியில் சூரியன் கடந்து வருவதால் 15உ பகல் 30-நாழிகைக்கும்அரைத்தேதிக்குள்ளவீதமாய் கடந்தவிகடிகை 131-இதையும் இதுமுதல் மேஷம்-4, ரிஷபம்-4¾, மிதுனம்-5¼,

கடகம்-5¾, சிம்மம்-5¼, இவ்வாறு இராசிகளின் தொகைகளேயும் ஒன்று சேர்க்க வந்த நாழிகை-27, விநாடி 11¾-க்குமேல் கன்னி லக்கினம் நாழிகை-5 உடன் சேர்க்கவந்த நாழிகை-32 விநாடி 11¾-வரைக்கும் கன்னிலக்கினம் அதில் குழந்தை ஜனனமான நாழிகை30-தைக்கழித்துவந்த மிச்சநாழிகை-27 விநாடி 11¾-ம் ஷ லக்கினத்தில் செல்லானதுபோக பாக்கியாம், ஜனனமான நாழிகைகன்னிராசியில் சேர்ந்தபடியால்கன்னியேஜன்மலக்கின மாம். இவ்விதமாக ஒவ்வொருவருடைய ஜனனகாலத்தை நிதானித்து லக்கினத்தை யறியவேண்டும்.

## இலக்கினஸ்புடம் (இலக்கின நிச்சயம்)

(இதுவரை அச்சுக்கு வாராதிருக்கும் குமாரசுவாமியம் இரண்டாவது பாகத்திலிருந்து சேர்க்கப்பட்டது.)

### கவி

"ஜெனனம்வரை யுதயாதி செல்கடிகையதனை-திசைத் தொகையிலேத்தியதை தினத்தொகைக் கீய்ந்து, அதிகமுனத் தினநேர்நடத்தில் அதுவும்; அதின்கோண்வருநாள்முற்றுவதும் உதயதினம், மொழிதலாது இதன்மேல், தினமருவுமிலக்குடையோன் கேந்திரகோண, யுவர்பதியி லிதுவுமிதற்கிரவி சுன்சேய் வதியில் புகல்வர் முடியென்ருன் சந்தனப் பொருப்புற்றவனே.",

(இதன்பயன்) சூரிய உதயமுதல் ஜெனனமான நாழிகை வரைக்கும் கூட்டிய நாழிகையை நாலாற்பெருக்கி யத்துடன் மேஷம்முதல் ஜெனனமான நாழிகைக்குவரும் இலக்கினம்வரை எண்ணிவந்த இராசிகளின் தொகையையுஞ்சேர்த்துக்கொண்டு அந்த இலக்கினம் சரவிராசியானல் முன்கூட்டிய இரண்டு தொகையுடன் ஐந்து கூட்டியும் ஸ்திரவிராசியானல்பத்துகூட்டியும் உபயவிராசியானல் பதினைந்துகூட்டியும் வந்த மொத்தத் தொகையை இருபத்தேழுக்கு கொடுத்துவந்த மிச்சத்தை பூர்வ பட்சமானல் அசுபதி முதலாகவும்அமரபட்சமானல்சித்திரைமுதலாகவும் எண்ணிவந்தால் அந்தத்தொகைக்குளந்தநட்சத்திரம் வருகிறதோ அதுஜென்ம நட்சத்திரமாகவாவது அல்லதுஜென்ம நட்சத்திரத்திற்கு திரிகோண நட்சத்திரமாகவாவது வர வேண்டும். அப்படி வராவிடில் எந்த நாழிகையும் இலக்கினமும் வித்தியாசமென்றும் மேற்சொல்லிய கணக்கின்படி எந்த நாழிகையும் இலக்கினமும் ஏற்படுகிறதோ அந்த நாழிகையும்

இலக்கினமும் நிச்சயமென்றும்கொள்ளவேண்டியது.(திரிகோண நட்சத்திர மென்பதைப் பற்றி திசை காண்க.) அன்றியும் சந்திரனிருந்த வீட்டுக்குடையவன் லக்கினத்துக்கு கேந்திரம் அல்லது திரிகோணத்தி லிருக்கவேண்டும் அல்லது சந்திரனுக்கு ஏழாம் இராசிக்குடையவன்சந்திரனுக்கு கேந்திரத்திலிருக்கவேண்டும். அல்லது இலக்கினத்துக்கு குளிகதிருகோணம் வரவேண்டுமென்பதாம். இதனாலு மிலக்கின நிச்சய மறிய வேண்டியது.

## குழந்தை பிறந்த நாழிகையினால் ஆண் பெண் அறிய விபரம்

ஒவ்வொரு தினத்திலும் புருஷகாலம் ஸ்திரீகாலம் 1¼-நாழிகைக்கு ஒருதரம் ஒன்றுக்கொன்று மாறிக்கொண்டே வருகிறதில் ஞாயிறு, செவ்வாய், வியாழன், சனி, இந்த தினங்களில் முதலில் புருஷகாலம்ஆரம்பம். திங்கள், புதன், வெள்ளி இந்த தினங்களில் முதலில் ஸ்திரீகாலம் ஆரம்பமாம். மேற்கண்ட தினங்களில் காலை

| நாழிகை | ஞாயி. | திங்க. | செவ். | புதன் | வியா. | வெள். | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| 1¼ வரை | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 2½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 3¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 5 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 6¼ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 7½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 8¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 10 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 11¼ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 12½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 13¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 15 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 16¼ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 17½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 18¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 20 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 21¼ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 22½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 23¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 25 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 26¼ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 27½ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 28¾ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 30 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |

முதல் காலம் ஒன்றுக்கு 1¼-நாழிகையாக ஜனன நாழிகை வரையில் பார்த்து வந்ததில் புருஷகாலம் வந்தால் புருஷ குழந்தையென்றும், ஸ்திரீகாலம் வந்தால் ஸ்திரீகுழந்தையென்றும் அறிய வேண்டியது. இதற்கு வேறுபட்டாலும் ஜனனமானதாகச் சொல்லப்பட்ட நாழிகையும் பிசகாம்.

ஜனனமான தினத்துக்குரிய இராப்பகலுக்குள்ள அகஸ் நாழிகை எத்தனையோ அத்தனையையும் 24-ல் வகுத்துவந்த யீவை முதல் காலத்துக்குள்ள நாழிகையாக வைத்துக்கொண்டு அது முதற் கொண்டு ஜனனமான நாழிகை வரையிலும் கிரமப்படி நடத்திப் பார்க்கிறது முண்டு. ஒவ்வொரு தினத்துக்குமுள்ள புருஷகாலம் ஸ்திரீகாலங்கள் இதனடியிற் கண்ட அட்டவணையில் தெளிவாய் அறியலாம்.

அன்றியும் ஜன்மலக்கினத்தில் பூர்வபட்சத்துச் சந்திரனிருக்கில் பிறந்த குழந்தை ஆண். அமரபட்சத்துச் சந்திரனிருக்கில் பெண் ஜன்ம லக்கினத்துக்கு ஒற்றிற்ற இராசியில் சனியிருந்தால் ஆண் இரட்டித்த இராசியில் சனி யிருந்தால் பெண் என்றும் காண்க.

அன்றியும் நவாம்சை இலக்கினம் புருட இராசியானுல் புருஷ குழந்தை என்றும், பெண் இராசியானுல் பெண் குழந்தையென்றும் கூறும் நூல்களும் உண்டு.

ஒவ்வொரு இராசியிலும் கிரகங்களிருக்கும் காலம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | ஒரு ராசியில் | ஒரு மாதம் வரையி லிருக்கும் | |
| சந்திரன் | ,, | இரண்டேகால் நாள் | ,, |
| செவ்வாய் | ,, | ஒன்றரை மாதம் | ,, |
| புதன் | ,, | ஒரு மாதம் | ,, |
| சுக்கிரன் | ,, | ஒரு மாதம் | ,, |
| வியாழன் | ,, | ஒரு வருஷம் | ,, |
| சனி | ,, | இரண்டரை வருஷம் | ,, |
| இராகு | ,, | ஒன்றரை வருஷம் | ,, |
| கேது | ,, | ஒன்றரை வருஷம் | ,, |

கிரகங்களினுடைய வக்கிரத்தினுலும் அதிசாரங்களினுலும் இந்த கால அளவுக்குச் சற்றேறக்குறைய சிலசமயங்களில்பேதப்படும். கிரகநிலையை கேரளமென்னும் சாஸ்திரத்தை வாசித்து

உணர்ந்தாலொழிய மற்றப்படி பஞ்சாங்கத்திலுள்ள கிரக சாரங்களையே பார்த்துக்கொள்ள வேண்டியது.

இராகு கேதுக்கள் தவிர மற்றக் கிரகங்கள் அடுத்த இராசிகளுக்கு வலது பாரிசமாய்ச் சுற்றிவரும். இராகு கேதுக்கள் இடது பாரிசமாய்ச் சுற்றி வரும்.

சூரியன்5-நாள், புதன்-சுக்கிரன் 7-நாள், செவ்வாய்8-நாள் சந்திரன் 3-நாழிகை, குரு 2-மாதம், இராகு-கேது 3-மாதம், சனி 6-மாதம், முன்னதாக மற்றொரு இராசியில் பிரவேசிப்பதற்கு முன்பார்வையாம், சந்திரன்-சனிகீழ்ப்பார்வை, சூரியன்-புதன்-வியாழன் சமபார்வை, இராகு-கேது-சுக்கிரன்-செவ்வாய்-மேற்பார்வையுடையவராம். இராகு கேதுக்களுக்கு இடது பக்கமும், மற்ற கிரகங்களுக்கு வலதுபக்கமும் பார்வையாம்.

---

## கிரகசார நட்சத்திரக் கால்கள்

| | | | |
|---|---|---|---|
| மீனம் பூரட்டாதி பின்கால் உத்திரட்டாதி ரேவதி | மேஷம் அசுவனி பரணி கார்த்திகை முதற்கால் | விருஷபம் கார்த்திகை பின்முக்கால் ரோகணீ மிருகசீரிடம் முன்னரை | மிதுனம் மிருகசீரிடம் பின்னரை திருவாதிரை புனர்பூசம் முன்முக்கால் |
| கும்பம் அவிட்டம் பின்னரை சதையம் பூரட்டாதி முன்முக்கால் | இராசியொன்றுக்கு இரண்டே கால் நக்ஷத்திரம், நக்ஷத்திரம் ஒன்றுக்கு நாலுகால் - இதனால் ஒரு இராசிக்கு நக்ஷத்திரக்கால்-9 | | கடகம் புனர்பூசம் பின்கால் பூசம் ஆயிலியம் |
| மகரம் உத்திராடம் பின்முக்கால் திருவோணம் அவிட்டம் முன்னரை | கால்கள் என்பதற்கு பாதங்கள். என்றும் பெயர். | | சிம்மம் மகம் பூரம் உத்திரம் முதற்கால் |
| தனுசு மூலம் பூராடம் உத்திராடம் முதற்கால் | விருச்சிகம் விசாகத்தின் பின்கால் அனுஷம் கேட்டை | துலாம் சித்திரையின் பின்னரை சுவாதி விசாகத்தின் முன் முக்கால் | கன்னி உத்திரத்தின் பின் முக்கால் அஸ்தம் சித்திரையின் முன்னரை |

அசுவனியாதியாக ரேவதி யந்தமாகவுள்ள இருபத்தேழு நட்சத்திரங்களும் மேஷமாதியாக மீனம் அந்தமாகவுள்ள பன்னிரண்டு இராசிகளிலு மடங்கியிருக்கின்றன.

பஞ்சாங்கத்திற் கண்டிருக்கிற கிரகபாதசாரங்களில் இன்னின்ன கிரகங்கள் இன்னின்ன நட்சத்திரத்தின் இத்தனையாவது பாதங்களிலிருக்கிறதென்று கண்டால் அப்படிகிரகமிருந்த நட்சத்திரக் காலானது இந்த இராசிச் சக்கரத்திலுள்ள எந்த இராசியிலடங்கியிருக்கிறதோ அந்த இராசியில்தான் அந்தக்கிரகமிருக்கிறதென்றறியவும். சந்திரன் ஒரு இராசியில் $2\frac{1}{4}$-நாள் மட்டுமிருக்கிறப்படியால் அது ஒரு நட்சத்திரத்தின் நாலு பாதத்தையும் ஒரே நாளில் கடந்துவருகிறது. மற்ற கிரகங்களுக்கு அதிக காலமாகையால் அவைகள் அதற்குத் தக்கபடி மெதுவாய்க் கடந்துவரும். ஒரு குழந்தை ஜனனமான நாழிகையில் சந்திரனிற்கு மிராசியையறிவதற்குவிபரம். ஜன்மநட்சத்திரத்துக்குரிய நாலுபாதங்களில் ஜனனம் வரைக்கும் செல்லானதுபோக எந்தப்பாதம்வருகிறதோ அந்தப்பாதம் இந்த சக்கரத்தில் எந்த இராசியிலடங்கி யிருக்கிறதோ அந்த இராசியில்தான் சந்திரனிற்கும் என்று அறியவும்.

## யுகபேதம்

கிரேதாயுகத்தில் கர்ப்பதானஞ்செய்ய நியமித்த லக்கினமே ஜனனலக்கினமாகவும், திரேதாயுகத்தில் சூல்கொண்டகுறிப்பே ஜனன லக்கினமாகவும், துவாபாயுகத்தில் ஜனனத்தின் தோற்றமே ஜனனலக்கினமாகவும், இந்தக் கலியுகத்தில் குழந்தை பூபதமானதே ஜனன லக்கினமாகவும் கொள்ளுதல் முறைமையாம்.

---

## நவாம்ச லக்கினம் காணும் வகை

1. ஒருவருடைய ஜன்மலக்கினத்தில் மொத்தநாழிகையை ஒன்பது பங்குசெய்து அதில் ஜனனமான நாழிகை எத்தனையாவது பங்காகிறதென்று தெரிந்து மேஷம், சிம்மம், தனுசு இந்த மூன்று இராசிகளில் எந்த இராசியிலாவது ஜனனமானவர்களுக்கும் ஷ ஜனனமான பங்கு எத்தனையோ அத்தனை வரைக்குமுள்ள தொகைப்படி மேஷமுதல் எண்ணிக்கண்ட இராசியே நவாம்ச லக்கினம்.

2. விருஷபம், கன்னி, மகரம் இந்த மூன்று இராசிகளி லெதில் ஜனனமானவர்களுக்கும் மகரம் முதல் ஜனனமான அத் தனையாவது பங்குவரைக்கும் எண்ணிக்கண்ட இராசியே நவாம்ச லக்கினம்.

3. மிதுனம், துலாம், கும்பம் இந்த மூன்று இராசிகளில் எதில் ஜனனமானவர்களுக்கும் துலாம் முதல் ஜனனமான அத் தனையாவது பங்கு வரைக்கும் எண்ணிக்கண்டஇராசியேநவாம்ச லக்கினம்.

4. கடகம், விருச்சிகம், மீனம் இந்த மூன்று இராசிகளில் எதில் ஜெனனமானவர்களுக்கும் கடகம் முதல் ஜனனமான அந் தனையாவது பங்குவரைக்கும் எண்ணிக்கண்டஇராசியேநவாம்ச லக்கினமென்றும் காண்க.

உதாரணமாக ஒருவனுக்கு ஜன்மலக்கினம் கன்னி; அதில் ஜனனமான காலத்தில் செல்லானது விநாடி 15, இதற்குநவாம்ச லக்கினங் காணவேண்டியதெப்படி யென்றால், மேற்படி கன்னி இராசிக்குரிய மொத்தநாழிகை-5, இதை ஒன்பது பங்குசெய்தால் பங்கு ஒன்றுக்கு 33-விநாடியாகிறது ஜனனகாலத்தில் ஷெஇராசி யில் செல்லான விநாடி 45-ல் மேற்படி இராசியில் முதலாவது பங்குக்கு மேற்பட்டும் இரண்டாவது பங்குக்கு உட்பட்டுமிருப்பதி னால் மேற்படி இராசியின் இரண்டாவது பங்கில் ஜனனமானதாக காணவேண்டியது. மேற்கண்ட விதியின்படி கன்னி லக்கினத் தில் ஜனனமானவர்களுக்கு மகரமுதல் மேற்படி இரண்டு பங்குக் கும் எண்ணிக்கண்ட இராசியாகிய கும்பம் நவாம்ச லக்கினமென் றும் காண்க.

நவாம்ச சக்கரத்தில் கிரகங்களைப் போடும் வகை

ஜனனகாலத்தில் ஒவ்வொரு கிரகத்தையும்அதுஎந்தநக்ஷத் திரத்தின் எந்தப் பாதத்திலிருக்கிறதென்று தெரிந்து அசுவனி நட்சத்திர முதற்பாத முதல் அந்தந்த கிரகமிருக்கும் நட்சத்திர பாதம் வரையிலும் உள்ள நட்சத்திரங்களுடைய பாதங்களையெல் லாம் ஒன்றாய்க்கூட்டி 12-ல் கழித்து மிச்சம் எதுவோ அந்தத் தொகையை மேஷமுதல் எண்ணிக்கண்ட இராசிகளில் அந்தந்த கிரகங்களைப் போடுவதேயாம்.

## இராசிகளின் சரம், திரம், உபயம்

மேஷம்-கடகம்-துலாம்-மகரம் ஆக 4ம் சரவிராசிகள்-துரிதம்
விருஷபம்-சிம்மம்-விருச்சிகம் கும்பம் ஆக 4-ம் ஸ்திர விராசி[கள்-தாமதம்
மிதுனம்-கன்னி-தனுசு-மீனம்ஆக4-ம்உபயவிராசிகள்-சமம்

## கிரகங்களின் சரம், திரம், உபயம்

சந்திரன்-செவ்வாய்-ராகு-கேது ஆக 4-ம் சரக்கிரகங்கள்.

சூரியன் சுக்கிரன் ஆக 2-ம் ஸ்திரக்கிரகங்கள்.

புதன் குரு-சனி ஆக 3-ம் உபயக்கிரகங்கள்.

## இராசிகளின் உருவம், ஆண், பெண், நிறம், ஜாதி, நோக்குந் திக்கு, நோய், ஸ்தானம், அங்கம்

மேஷம்—ஆட்டினுருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி, சிகப்பு நிறம், க்ஷத்திரியஜாதி, கிழக்குதிக்கு, உஷ்ணநோய், ஸ்தானம் காடு, அங்கம்-தலை.

விருஷபம்—எருது உருவம், பெண் அல்லது இரட்டையிராசி, வெண்மைநிறம், சூத்திரஜாதி, தெற்குதிக்கு, ஜலாதிநோய், ஸ்தானம்-விளைபுனம், அங்கம்-முகம்.

மிதுனம்—வீணைபிடித்த பெண்ணும் கதைபிடித்த புருஷனுமான உருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி, கறுப்பு நிறம், வைசிய ஜாதி, மேற்கு திக்கு, மேகாதிநோய், ஸ்தானம் சோலையும் பட்டணமும், அங்கம்-கழுத்து.

கடகம்—நண்டு உருவம், பெண் அல்லதுஇரட்டையிராசி,வெண்மைநிறம், பிரமஜாதி, வடக்குதிக்கு, சலவிஷநோய், ஸ்தானம்-வயல், அங்கம்-தோள்.

சிம்மம்—சிங்க உருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி, சிகப்பு நிறம், க்ஷத்திரியஜாதி, தென்கிழக்கு, உஷ்ணவிரணநோய் ஸ்தானம் மலைச்சார்பு, அங்கம்-மார்பு.

கன்னி—கன்னிகையுாகி கதிர்க்குலையும் அக்கினியும் கையில் வைத்திருக்கின்ற உருவம், பெண் அல்லது இரட்டையிராசி,

வெண் கறுப்புநிறம், சூத்திரஜாதி, தென்மேற்கு, வாதாதி நோய்கள், ஸ்தானம்-நகரம் அங்கம்-பக்கம்.

துலாம்—துலாக்கோல் பிடித்த புருடவுருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி, வெண் பொன்னிறம், வைசியஜாதி, வடமேற்கு, நீர் புகைச்சலான ரோகங்கள், ஸ்தானம்-ஆற்றோரமும் கடை வீதியும், அங்கம்-முதுகு-வயிறு.

விருச்சிகம்—தேள் வடிவம், பெண் அல்லது இரட்டையிராசி, கறுப்பு நிறம், பிரமஜாதி, வடகிழக்கு, இரத்தவிரணநோய், விஷ நோய்களாம். ஸ்தானம்-கிணறு; அங்கம்-பீஜம்.

தனுசு—அரைக்குமேல் புருடனுகக் கையில் பிடித்த வில்லுமாகி அரைக்குக்கீழ் குதிரை யுருவமாகவு மிருக்கின்ற வுருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி, செம்பொன்னிறம், க்ஷத்திரிய ஜாதி, தென்கிழக்கு, வாய்வுநோய், ஸ்தானம் - போர்க்களமும் ஊரடுத்த கொல்லையும். அங்கம்-துடை.

மகரம்—மகர மீனுருவம், பெண் அல்லது இரட்டையிராசி, வெண்மைநிறம், சூத்திரஜாதி, தென்மேற்கு, பித்தவாத நோய். ஸ்தானம்-சமுத்திரக்கரை. அங்கம்-முழந்தாள்.

கும்பம்—கும்பஞ்சுமந்த புருடவுருவம், ஆண் அல்லது ஒற்றையிராசி கரும்பசுமை நிறம், வைசியஜாதி, வடமேற்கு, வாத நோய், ஸ்தானம்-ஜலம், அங்கம்-கணுக்கால்.

மீனம்—ஒருமீன்வாலை யொருமீன்கவ்விக்கொண்டுஇரட்டைமீனுகச் சஞ்சரிக்கின்றவுருவம், பெண் அல்லது இரட்டையிராசி, வெண் கறுப்புநிறம், பிரமஜாதி, வடகிழக்கு, ஜலவியாதி நோய், ஸ்தானம்-சமுத்திரம், அங்கம்-பாதம்.

மேஷம்-வேளாளகுலம், ரிஷபம்-இடையர்குலம், மிதுனம்-நீசசாதி, கடகம்-கன்னரசாதி, சிம்மம்-நாவிதஜாதி, கன்னி-ஓடஜாதி, துலாம்-செட்டிஜாதி, விருச்சிகம் - வேடஜாதி, தனுசு-தட்டாரஜாதி, மகரம்-வண்ணரஜாதி, கும்பம்-குயவஜாதி, மீனம்-நீசஜாதி என்று கூறும் பல நூற்களுமுள.

கிரகங்களின் வடிவம்-ஆண்-பெண்-அலி, நிறம், ஜாதி, நோய், நோக்குந்திக்கு, ஸ்தானம் அங்கம்.

சூரியன்—சதுரம், ஆண், சிகப்புநிறம், க்ஷத்திரியஜாதி, சுரம் நேத்திரரோக முதலான உஷ்ணரோகங்கள், கிழக்குதிக்கு, ஸ்தானம் காடு, அங்கம்-தலை.

சந்திரன்—வட்டம்,பெண்,வெண்மைநிறம்,வைசியஜாதி,கபாதி ஜலபாதை நோய்கள்,வடமேற்கு,ஸ்தானம்-ஜலம்,அங்கம்-முகம்.

செவ்வாய்—தமருகம் (உடுக்கு) ஆண், சிகப்புநிறம், க்ஷத்திரிய ஜாதி,இரணரோகாதி,இரத்தரோகம், தெற்குத்திக்கு,ஸ்தானம்-பூமி, அங்கம்-மார்பு.

புதன்—அறுகோணவடிவம், அலி, பச்சைநிறம், வைசியஜாதி, பிரமியாதிமூளைநோய்கள்,வடக்குதிக்கு,ஸ்தானம்-உயர்ந்த இடம், அங்கம்-இடை-முதுகு.

வியாழன்—நெடும்பட்டம், ஆண்,பொன்னிறம், பிராமணஜாதி, சேத்துமாதி நோய்கள், வடகிழக்கு, ஸ்தானம்-நகரம், அங்கம்-வயிறு.

சுக்கிரன்—எண்கோணம், பெண், வெண்மைநிறம், பிராமண ஜாதி, பித்தம்-குளிர்முதலியசன்னிநோய்கள்,தென்கிழக்கு, ஸ்தானம்-ஜலதீரம், அங்கம்-அரை-ஆண் குறி.

சனி-வில்வடிவம்,அலி,நீலநிறம்,சூத்திரஜாதி, பித்தவாதநோய் மேற்குதிக்கு, ஸ்தானம்-புராதனநகரம்,அங்கம்-துடை.

இராகு—மாலை,பெண்,கறுப்புநிறம்,பஞ்சமஜாதி,விஷநோய்கள், தேவதை நோய்கள், தென்மேற்கு, ஸ்தானம்-பறைச்சேரி, அங்கம்-கைகள்.

கேது—முறம், அலி, செங்கறுப்புநிறம், நீசஜாதி, விஷாதி சத்துரு நோய்கள், வடமேற்கு,ஸ்தானம்-பறைச்சேரி,அங்கம்-கால்கள்.

இராகு-ஆண் கிரகமென்றும், கேது-பெண் கிரகமென்றும் கூறும் நூல்களும் சிலவுள. அன்றியும், உச்சம் மூலத்திரிகோண

க்ஷேத்திரம் பெற்ற கிரகம் பிரமஜாதியென்றும், சொக்ஷேத்திரம் பெற்ற கிரகம் க்ஷத்திரிய ஜாதியென்றும், மித்துரு க்ஷேத்திரம் பெற்ற கிரகம் வைசியஜாதியென்றும், சத்துரு க்ஷேத்திரம்பெற்ற கிரகம் சூத்திர ஜாதியென்றும், நீசக்ஷேத்திரம் பெற்ற கிரகம் பஞ்சம ஜாதியென்றும் கூறும் நூற்களும் சிலவுள.

அலியென்பதற்கு நபுஞ்சகம் அல்லது ஆணும் பெண்ணு மல்லாத உருவமென்று பெயர்.

## கிரகநோக்கு

கிரகங்களெல்லாம் நாமிருக்குமிடத்தையும் அதற்கு ஏழாவது இடத்தையும் முழுப்பார்வையாகவும், வியாழன்தானிருக்குமிடத் துக்கு 5-ம் இடத்தைக்கால்பார்வையாகவும்9-மிடத்தைமுக்கால் பார்வையாகவும் செவ்வாய் தானிருக்குமிடத்துக்கு 4-மிடத்தை அரைப்பார்வையாகவும் 8-மிடத்தை முக்கால் பார்வையாகவும், சனி தானிருக்குமிடத்துக்கு 3-மிடத்தை அரைப் பார்வையாக வும் 10-மிடத்தை முக்கால் பார்வையாகவும் நோக்கும். இவற் றில் அந்தந்த நோக்குக்குரிய கிரகம் பலவந்த ரென்பதாம். நோக்கப்பட்ட இடத்தில் கிரகங்களிருந்தாலவர்களேயுஞ் சேர்த்து நோக்குமாம். குளிகனுக்கு 7-ம் இடமும் 12-ம் இடமும் பார்வை யாம். குளிகன் நவக்கிரகத்தைச் சேர்ந்ததல்ல; இராகு கேதுக் கள் இடது பாரிசமாகவும் மற்றக் கிரகங்கள் வலது பாரிசமாகவும் நோக்கும். இதனடியிற்கண்ட கவியின் பிரகாரம் சூரியனுக்கு 3-10-ம் சுக்கிரனுக்கு 6-8-ம் இராகு கேதுக்களுக்கு 3-11-ம் விசேஷ பார்வை.

## கவி

இரவிநிற்கும் ஒன்றுக்குஏழதாகும்,பரவிவரும் செவ்வாய்க்கு நாலெட்டேழு, பகர் வெள்ளி தனக்குமே ஆறெட்டேழு, திரு விருந்த இராஜருக்கு ஐந்தேழ் ஒன்பான், செய்ய சனி பார்வை மூன்றேழு பத்து, மருவிவரும் கரும்பாம்புக்கேதுக்கேழு மருமூன் றும் பதினொன்றும் பார்வையாமே.

இதனால் 2-ம் 12-மிடமும் நவக்கிரகங்களுக்குபார்வையில்லை யென்றறிக. (1-ம் 7-ம் முழுநோக்கு, 8-9-முக்கால்நோக்கு 5- அரைநோக்கு,4-10கால்நோக்கு3-6-11அரைக்கால்நோக்கென் றுங் கூறும் சில நூல்களுமுண்டு) கிரகங்கள் தத்தம் ஆட்சி வீடு

களில் நின்றபோது இதிற் சொன்ன நோக்குத்தொகை முழுப் பலன். நட்பு வீடுகளில் நின்றபோது சொன்ன தொகையில் நாலிலொன்று குறையும். பகை வீட்டில் நின்றபோது சொன்ன தொகையில் நாலில் மூன்றுபங்கு குறையும். மூலத்திரிகோணத்தில் நின்றபோது சொன்ன தொகையில் இருபதிலொன்று ஏறும்; உச்சத்தில் நின்றபோது சொன்ன தொகையில் பத்திலொன்று ஏறும். ஆகையால் இதை புத்தி யுத்தி நுட்பமாய்ப் பார்க்க வேண்டியது.

சுபக்கிரகங்கள் (பொது விதி)

வியாழன், பூர்வபட்சத்து சந்திரன், சுக்கிரன், புதன்.

பாபக்கிரகங்கள் (பொது விதி)

சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது, அமரபட்சத்துச் சந்திரன் சனி பாம்புகளுடன் சம்பந்தப்பட்ட வியாழன்.

சுபக்கிரகங்கள் பாபக்கிரகங்கள் (விசேஷ விதி)

பூர்வபட்சத்தில் ஜனனமான ஜாதகங்களுக்கு

வியாழனும், சந்திரனும் பூரணமான சுபக்கிரகங்கள்.
சுக்கிரன் முக்கால் பங்குவரை சுபக்கிரகம்.
புதன் அரைப்பங்கு சுபக்கிரகம்.
சூரியனும் செவ்வாயும் கால்பங்கு சுபக்கிரகங்கள்.
சனி, இராகு கேது இவர்களுடன் சம்பந்தப்பட்ட வியாழன் முழுப்பாபிகள்.
சூரியன் செவ்வாய் முக்கால்பங்கு பாபிகள்.
புதன் அரைப்பங்கு பாபி.
சுக்கிரன் கால்பங்கு பாபி.

அமரபட்சத்தில் ஜனனமான ஜாதகங்களுக்கு

சனி, இராகு, கேது பூரணமான சுபர்கள்—சூரியன், செவ்வாய் முக்கால் பங்கு சுபர்கள்—புதன் அரைப்பங்கு சுபன்—சுக்கிரன் கால்பங்கு சுபன்—வியாழன், சந்திரன் முழுப்பாபிகள்—சுக்கிரன் முக்கால் பங்கு பாபி—புதன் அரைப்பங்கு பாபி—சூரியன், செவ்வாய் கால்பங்கு பாபிகளாம்,

அன்றியும் அமாவாசையில் புதனோடு சேர்ந்திருக்கும் சந்திரனும் முக்கால் பங்கு சுபனும். க்ஷீணசந்திரனும் பாவர்களுடன் சம்பந்தப்பட்டபுதனும் கால்பங்கு சுபர்களென்று பூர்வபட்சத்தில் சூரியன் முழுப்பாபி யென்றும் கேது முக்கால் பாபி யென்றும் அமர பட்சத்தில் சூரியன் முழுச்சுபனென்றும் கேது முக்கால் சுபனென்றுங் கூறும் நூல்களும் சிலவுள. அநேக நூல்கள் விசேஷ விதியை விட்டுவிட்டுப் பொது விதியை மட்டும் கூறுகின்றன.

---

## இன்ன கிரகத்துக்கு இன்ன இராசிகள் ஆட்சி வீடுகள் மூலத்திரிகோண வீடுகளென்பது

| கிரகங்கள் | ஆட்சி வீடுகள் | மூலத் திரிகோண வீடுகள் | மூலத்திரிகோண ராசியை 30 பங்கு செய்து அதிலித்தனை பங்குவரையில் அதிக பலமென்பது |
|---|---|---|---|
| சூரியன் | சிம்மம் | சிம்மம் | 6—பங்கு வரையில் |
| சந்திரன் | கடகம் | விருஷபம் | 27 ,, |
| செவ்வாய் | மேஷம், விருச்சி | மேஷம் | 12 ,, |
| புதன் | மிதுனம், கன்னி | கன்னி | 5 ,, |
| வியாழம் | தனுசு, மீனம் | தனுசு | 10 ,, |
| சுக்கிரன் | விருஷப, துலா | துலாம் | 5 ,, |
| சனி | மகரம், கும்பம் | கும்பம் | 10 ,, |
| இராகு } கேது } | | விருச்சிகம் | |

ஒரு இராசியை 30-பங்கு செய்வது என்பது அந்த இராசியின் நாழிகையை 30-பங்கு செய்வதாம். அதில் அந்தக் கிரகம் இத்தனை பங்குக்குள் ளிருந்தால் அதிக பலமென்றறிக. கிரகங்க

ளுக்கு ஆட்சி வீடுகளென்று சொல்லியிருக்கிற அந்தந்த ஸ்தா னங்களுக்கு அந்தந்த கிரகங்கள் ஸ்தானாதிபதிகளாம். அதாவது அந்த ஸ்தானங்களுக் குடையவர்களாம். உதாரணம் ஒரு குழந்தை பிறந்த லக்கினம் தனுசானால் அதற்கு லக்கினாதிபதி இன்னாரென்றும் மற்ற பாவாதிபதிகள் இன்னாரென்றும் தெரி வதற்கு விபரம். தனுசு வியாழனுக்கு ஆட்சி வீடு (சொந்த வீடு) என்றும் அதற்கு அவர் அதிபதியாகையால் அவரேலக்கினாதிபதி யென்றும் அதற்கு 2-மிடமாகிய மகரம் சனியினுடைய வீடாகை யால் 2-க்குடையவன் சனியென்றும் இப்படியே மற்ற பாவங் களுக்கும் பார்த்துக் கொள்ள வேண்டியது. இராகு, கேது குளிகன் இவர்களுக்கு ஆட்சி வீடுகளில்லை. இவர்கள் எந்த ஸ்தானத்தில் எந்தக் கிரகத்துடன் சேர்ந்திருக்கிறார்களோ அல்லது எந்தக் கிரகத்தில் பார்க்கப்படுகிறார்களோ அவர்களுக்கு அனுகூலமான சுப அசுப பலன்களைக் கொடுப்பார்கள். சில நூல் களில் இராகுவுக்கு கன்னியும், கேதுவுக்கு மீனமும், குளிகனுக்கு கன்னியும், சில நூல்களில் இராகுவுக்கு மகரமும், கேதுவுக்கு மேஷமும் ஆட்சி வீடுகளென்று பற்பல விதமாய் சொல்லியிருந் தாலும் அவர்களுக்கு ஸ்தானாதிபத்தியம் கிடையாது. இராகு வுக்கு கும்பமும், கேதுவுக்கு சிங்கமும் மூலத் திரிகோண விராசி களென்று கூறும் நூல்களும் சில உண்டு. ஆனால் மற்ற கிரகங் களைப்போல் இவர்களுக்கு மூலத் திரிகோணத்தில் அவ்வள வாய்ப் பலமில்லையாம்.

ஒரு ஜாதகத்தில் மூன்று கிரகம் ஆட்சியானால் ஜாதகன் சில பூமிகளையுடைய ஒரு சிற்றரசனாவான். மூன்று கிரகம் மூலத் திரி கோணமானால் ஒரு பெரிய தேசத்துக்கு அரசனென்க. ஆனால் இலக்கினத்துக்கு 6 - 8 - 12 - மிடங்களுக்கு அதிபரானாலும் நவாம்சையில் நீசமானாலும் பூரணயோகத்தைக் கொடார்கள்.

## இன்ன கிரகத்துக்கு இன்ன இராசிகள் உச்சவீடு, நீச்சவீடு என்பது

| கிரகங்கள் | உச்சம் | உச்ச இராசியை 30-பங்கு செய்து அதிலித்தனை பங்கு வரையில் அதிக உச்சமென்பது | உச்ச ராசிக்கு ஏழாம் இராசி நீச ராசியாம் | நீச ராசியை 30-பங்கு செய்து அதிலித்தனை பங்கு வரையில் அதிக நீசமென்பது |
|---|---|---|---|---|
| சூரியன் | மேஷம் | 10-பங்கு வரையில் | துலாம் | 10-பங்கு வரையும் |
| சந்திரன் | விருஷபம் | 3 ,, | விருச்சிகம் | 3 ,, |
| செவ்வாய் | மகரம் | 28 ,, | கடகம் | 28 ,, |
| புதன் | கன்னி | 15 ,, | மீனம் | 15 ,, |
| வியாழம் | கடகம் | 5 ,, | மகரம் | 5 ,, |
| சுக்கிரன் | மீனம் | 27 ,, | கன்னி | 27 ,, |
| சனி | துலாம் | 20 ,, | மேஷம் | 20 ,, |
| இராகு | விருஷபம் | 22 ,, | விருச்சிகம் | 20 ,, |
| கேது | விருச்சிகம் | 24 ,, | விருஷபம் | 28 ,, |
| குளிகன் | மகரம் | | கடகம் | |

குளிகன் நவக்கிரகத்தைச் சேர்ந்ததல்ல. இராகு கேதுகளுக்கு உச்சவீடுகள் நீச்சவீடுகளிருந்தாலும் அவ்விதவீடுகளினுல்மற்றக் கிரகங்களுக்கு உண்டாகுமவ்வளவு பலமாவது துர்ப்பலமாவது இவர்களுக்குக் கிடையாதாம். இவர்களிருவருக்கும் விருச்சிகம் ஒன்றே. உச்சவிராசியென்றும் விருஷபம் ஒன்றே நீச்சராசி யென்றும் சில நூல்களிலும், இராகுவுக்கு மிதுனம் உச்சமாகவும் கேதுவுக்கு தனுசு உச்சம் மிதுனம் நீச்சமாகவும் சில நூல்களிலும், இராகுவுக்கு கடகம்உச்சம், மகரம் நீச்சமாகவும் கேதுவுக்கு மகரம் உச்சம், கடகம் நீச்சமாகவும் சில நூல்களிலுங் கூறப்பட்டிருக்கின்றன.

ஒரு ஜாதகத்தில் ஒரு கிரகம் உச்சமாகில் அந்த ஜாதகனுக்கு துன்ப நிவாரணம் 2-கிரகம் உச்சம்பெறில் இராஜ்ஜியாதிகாரம் (அரசன்)3-கிரகம் உச்சம்பெறில் இரதகஜதுரக பதாதிகளுக்குத் தலைமை 4-கிரகம் உச்சம்பெறில் லட்சுமி தாண்டவம், 5-கிரகம் உச்சம்பெறில்தேவப்பிறப்பும்நீதியுடன்உலகமுழுமையும்காக்குந் தன்மையுமாம். ஆனால் உச்சமாயிருக்குங் கிரகங்களுள் ஒருவரை யொருவர் பார்க்கலாகாது. பார்த்தால் அவ்வளவுக்கவ்வளவு யோகமுங் குறைவாம். மேலும் இலக்கினத்துக்கு 6-8-12-ம் ஸ்தானங்களில் உச்சமானாலும்,இராசியில் உச்சமாகி அம்சையில் நீசமானாலும் பூரணயோகத்தைக் கொடார்கள்.

சூரியன் உச்சமாகப்பிறந்தவன் அரசுரிமையையும்,மிகுந்தபலாட்டியமும்,பராக்கிரமும்,நோயில்லாமையும், அங்கவீனமில்லாமையும், தனதானியமும், நானாவித வாகனங்களையு முடையவன்.

சந்திரன் உச்சமாகப் பிறந்தவன் நல்ல மனதும், புத்திரவிருத்தியும்சகலமானபேர்களிடத்தில்வாஞ்சையும்,நவதானிய லாபமும், அதிக போகமும், அனேக ஸ்திரீகளைச் சேருதலுமுடையவன்.

செவ்வாய் உச்சமாகப் பிறந்தவன் உலகத்தின்கண் வெகுகாலம் உயிருடனிருத்தலும், அன்னியரிடத்தில் தயவும்,பித்ததேகமும், பராக்கிரமும், மிகுந்த விவேகமும், பிதாபாக்கியமும் பொருந்தி அரசனைப்போ லிருத்தலாம்.

புதன் உச்சமாகப் பிறந்தவன் கலைக்கியானமெல்லாம் அறிதலும் மிகுந்த நற்குணமும், நல்லபுத்தியும், பந்துக்களிடத்திலும் கீதவாத்தியங்களிலும் சந்தோஷமும், கணக்கதிகார மறிதலும், பூமியின்கண் ஒப்பற்ற அரசனைப்போலவும், நூறு வயதுவரை வாழ்வையுடைத்தா யிருப்பன்.

வியாழன் உச்சமாகப் பிறந்தவன் இராஜனுக்கும் அதிக ஐஸ்வரியமும், ஆடையாபராணமும், ஸ்திரிகள் நேசமும், மிகுந்த போகமும், கல்வியும், சகல வாகனங்களும் புத்திரர்களு முடையவன்.

சுக்கிரன் உச்சமாகப் பிறந்தவன் திரவியமும், ஸ்திரீபோகமும், குழந்தைகளும் படிப்புமுடையவன்.

சனி உச்சமாகப்பிறந்தவன் ஆயுள் தீர்க்கமும், சவுக்கியமும், வன்மையும், இன்பமும், பொன், பதி, படை இவைகளையுமுடைத்தாயிருப்பன்.

இராகு உச்சமாகப்பிறந்தவன் மிலேச்ச ராஜதயவும், மிகுந்த வல்லமையும், இனிவருங்காரியத்தைச் சொல்லும்படிக்கான விவேகமான புத்தியும் இளைக்காத நெஞ்சமுடையவன்.

கேது உச்சமாகப்பிறந்தவன் ஆயுள்வேத முதலியவேத வேதாந்தங்களும் நன்றுயறிந்து சான்றோர்கள் சந்தோஷிக்கும்படி நடந்துகொள்ளும் மெய்ம்மையுடையவன்.

மூன்று கிரகம் ஒரு ஜாதகத்தில் நீச்சமானல் துக்கமேயாம்.

## நீச்சபங்க ராஜயோகம்

நீசக்கிரக மிருந்த விட்டுக்குடையவன் தனக்குரிய உச்சவிட்டிலிருக்க, இதற்குடையவன் 5-9-ல் இருக்க, அல்லதுசந்திரனுக்காகிலும் அல்லது அந்த நீச்சனுக்காகிலும் கேந்திரத்திலிருக்க, அதோடு குரு வர்க்கமேறில் நீசபங்க ராஜயோகமாம். இதன் பலன் அரசன் என்க.

## இன்ன கிரகத்துக்கு இன்ன இராசிகள் நட்பு வீடுகள் பகை வீடுகளென்பது

கிரக நட்பு பகை இராசிகளைப்பற்றி அனேக நூல்களிலும் ஒன்றுக்கொன்று பல வித்தியாசமாய்க் கூறப்பட்டிருந்தாலும் இதில் இதனடியிற்கண்ட கணித ஆதாரத்தின்படி ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அதாவது ஒரு கிரகத்துக்கு இன்ன இராசிகள் நட்பு வீடுகள் என்று அறிவதற்கு அந்த கிரகத்தினுடைய மூலத்திரிகோண இராசிக்கு 3-5-7-8-12-ம் இடங்கள் அந்தக் கிரகத்துக்கு நட்பு வீடுகளாம். இது பொதுவிதி. மேற்கண்ட இலக்கமுள்ள வீடுகளில் எந்த வீடுகளாவது அந்தக்கிரகத்துக்குஆட்சி, உச்சம், நீசம் என்று வந்தால் அவ்வித விடுகளை நீக்கி மற்ற இலக்கமுள்ள வீடுகளை அந்த கிரகத்துக்கு நட்பு வீடுகளென்று அறியவேண்டியது. இது விசேஷ விதி, திருஷ்டாந்தம். சூரியனுக்கு மூலத்திரிகோண இராசி சிம்மம் அதற்கு 3-ம் இடமாகிய துலாம் அந்தக் கிரகத்துக்கு நீச்சவீடாகையால் அதைத் தள்ளி மற்ற 5-7-8-12-ம் இடங்களாகியதனுசு, கும்பம், மீனம், கடகம் இந்த இராசிகள் அந்த கிரகத்துக்கு நட்பு விடுகளாம். இவ்விதமாகவே மற்றக் கிரகங்களுக்கு அவரவர்களுடைய மூலத்திரிகோண விராசியிலிருந்து பார்க்குமிடத்தில் தள்ளவேண்டிய இடங்களாவன: சூரியனுக்கு3-ம், சந்திரனுக்கு3-7-ம், செவ்

வாய்க்கு 8-ம், புதனுக்கு 7-ம், வியாழனுக்கு 8-ம், சுக்கிரனுக்கு 8-12-ம்,சனிக்கு3-12-ம் ,இராகுகேதுக்களுக்கு 7-ம்தள்ளவேண்டிய விடங்களாம். இனி பகைவீடுகளைப் பற்றிய பொது விதியாவது: அந்தந்தக் கிரகத்துக்குரிய மூலத்திரிகோண இராசிக்கு 2-4-6-9-10-ம் இடங்கள் அந்தந்தக் கிரகங்களுக்கு பகை வீடுகளாம். விசேஷ விதியாவது: சூரியனுக்கு 9-ம், செவ்வாய்க்கு 4-10-ம், புதனுக்கு 10-ம், வியாழனுக்கு 2-4-ம், சுக்கிரனுக்கு 6-ம் சனிக்கு 9-ம் தள்ளவேண்டிய இடங்களாம்.

மேற்படி விதியின்படி நட்பு, பகை இராசிகளாவன

| கிரகங்கள் | நட்பு வீடுகள் |
|---|---|
| சூரியன் | தனுசு கும்பம், மீனம், கடகம் |
| சந்திரன் | கன்னி, தனுசு, மேஷம் |
| செவ்வாய் | மிதுனம், சிம்மம், துலாம், மீனம் |
| புதன் | விருச்சிகம், மகரம், மேஷம், சிம்மம் |
| வியாழன் | கும்பம், மேஷம், மிதுனம், விருச்சிகம் |
| சுக்கிரன் | தனுசு, கும்பம், மேஷம் |
| சனி | மிதுனம், சிம்மம், கன்னி |
| இராகு-கேது | மகரம், மீனம், மிதுனம், துலாம் |

| கிரகங்கள் | பகை வீடுகள் |
|---|---|
| சூரியன் | மகரம், விருஷபம், மிதுனம், கன்னி, விருச்சிகம் |
| சந்திரன் | மிதுனம், சிம்மம், துலாம், மகரம், கும்பம், மீனம் |
| செவ்வாய் | விருஷபம், கன்னி, தனுசு, கும்பம் |
| புதன் | துலாம், தனுசு கும்பம், விருஷபம், கடகம் |
| வியாழன் | விருஷபம், சிம்மம், கன்னி, துலாம் |
| சுக்கிரன் | விருச்சிகம், மகரம், மிதுனம், கடகம், சிம்மம் |
| சனி | மீனம், விருஷபம், கடகம், விருச்சிகம், தனுசு |
| இராகு-கேது | தனுசு, கும்பம், மேஷம், கடகம், சிம்மம், கன்னி |

மூன்றுகிரகம் ஒரு ஜாதகத்தில் நட்பாகில் யோகவான், ஆனால் லக்கினத்துக்கு 6-8-12-ம் இடங்களிலிருந்தாலும் அவ்விடங்களுக்கதிபரானாலும், அம்சையில் நீச்சமானாலும் யோகத்தைக் கொடார்கள்.

## இன்ன கிரகத்துக்கு இன்ன கிரகம்—சத்துரு, மித்துரு, சமம் என்பது

| கிரகம் | சத்துரு | மித்துரு | சமம் |
|---|---|---|---|
| சூரியன் | சனி, சுக்கிரன், இராகு, கேது | சந்திரன், செவ்வாய் குரு | புதன் |
| சந்திரன் | இராகு, கேது | சூரியன், புதன் | செவ்வாய், குரு, சுக்., சனி |
| செவ்வாய் | புதன், இராகு, கேது | சூரியன், சந்திரன், குரு | சுக்கிரன், சனி |
| புதன் | வியாழன் | சுக்கிரன், சனி | சூரி, செவ், சந், இரா., கேது |
| வியாழன் | புதன், சுக்கிரன் | சூரியன், சந்திரன், செவ்வாய் | சனி, இராகு, கேது |
| சுக்கிரன் | சூரியன், சந்திரன் | புதன், சனி, இராகு, கேது | செவ்வாய், வியாழன் |
| சனி | சூரியன், சந்திரன், செவ்வாய் | புதன், சுக்கி, இராகு, கேது | வியாழன் |
| இராகு, கேது | சூரியன், சந்திரன், செவ்வாய் | சனி, சுக்கிரன் | புதன், வியாழன் |

சத்துரு மித்துரு இல்லாதது சமம்.

## செவ்வாய் தோஷம்

ஜென்ம இலக்கினம், சந்திர இலக்கினம், சுக்கிர இலக்கினம் இம் மூன்றுக்கும் 2-4-7-8-12 இந்த ஸ்தானங்களில் செவ்வாய் புருஷனுடைய ஜாதகத்திலிருக்கில் பெண்சாதி வியோகமாவாள் பெண்சாதியினுடைய சாதகத்தின்படி இருக்கில் புருஷன் இறந்து விதவையாவாள். இருவருக்கும் இப்படி இருந்தாலும் இல்லாவிட்டாலும் நல்லதேயாம்,

---

## புத்திர பாவம்

ஐந்தாமிடத்துக்குடையவன் பாபர் சம்பந்தமின்றி சுப க்ஷேத்திரத்திலிருக்க, ஐந்தாமிடத்தில் பாபரன்றி சுபர்க ளிருக்கப் பார்க்க புத்திரகாரகனுகிய வியாழன் சுபக்ஷேத்திரங் களில் சுபாள் சம்பந்தம்பெற்று பலவானுயிருக்கப் புத்திரருண்டு.

---

## கிரக வக்கிரம், அஸ்தமனம்

செவ்வாய், வியாழன், சனி இவர்களுக்கு 5-ல் சூரியன் வந் தால் இவர்களுக்கு வக்கிரம், 7-ல் சூரியன் வந்தால் அதிக வக்கி ரம், 6-ல் வந்தால் வக்கிர நிவர்த்தியாம், இரவிபாகை 17-க்குள் செவ்வாயும், 13-க்குள் புதனும், 11-க்குள் வியாழனும், 8-க்குள் சுக்கிரனும், 15-க்குள் சனியும் வந்தால் செவ்வாய் முதல் சனி வரை அஸ்தமனமாம். இரவிக்கு முன்பின் 12-பாகைக்குள் சந்திரன் வரில் சந்திராஸ்தமனம். அஸ்தமனத்திற்கு மூட மென்றும் பேர். இன்ன கிரகத்துக்கு இன்ன காலத்தில் வக்கிரம், வக்கிர நிவர்த்தி, அஸ்தமனம், உதயம் இவைகளைப் பற்றி பஞ்சாங்கத்திலுள்ள கிரகசாரங்களைக் கண்டு தெரிந்துகொள்ள வேண்டியது. ஒரு ஜாதகத்தில் மூன்று கிரகம் வக்கிரமானுலும் அல்லது மூன்று கிரகம் அஸ்தமனமானுலும் துன்பமாம்.

---

## கிரக குணம்

சந்திரன், வியாழன்-சாத்மீக குணமுடையவர்கள்.
சுக்கிரன், செவ்வாய்-இராக்ஷச குணமுடையவர்கள்.
புதன், சூரியன், இராகு, கேது-தாமதகுணமுடையவர்கள்.

### கிரக வலிமை

எல்லாக் கிரகங்களிலும் புதன் குறைந்த பலத்தை யுடையவன், புதனைப் பார்க்கிலும் செவ்வாயும், செவ்வாயைப் பார்க்கிலும் சனியும், சனியைப் பார்க்கிலும் வியாழனும், வியாழனைப் பார்க்கிலும் சுக்கிரனும், சுக்கிரனைப் பார்க்கிலும் சந்திரனும், சந்திரனைப் பார்க்கிலும் சூரியனும், சூரியனைப் பார்க்கிலும் இராகு கேதுக்களும் மேற்பட்ட பலத்தை யுடையவர்கள்.

மேற்பட்ட பலத்தையுடைய கிரகங்கள் அவரவர்கள்கீழ்மை யுள்ள கிரகங்களுடன் சேர்ந்திருந்தால் அந்தக் கீழ்ப்பட்ட கிரக பலன்களையும் அவர்கள் கொடுக்கிற சுபம் அல்லது அசுப பலன் களையும் அவர்களிடமிருந்து வாங்கி தாங்களேகொடுப்பார்களாம்.

### பஞ்சவித ஸ்தானப்பேர்

இலக்கினத்துக்கு 1-மிடம், 4-மிடம் 7-மிடம், 10-மிடம் ஆக 4-ம் கேந்திரம்.

" " 2-மிடம், 5-மிடம், 8-மிடம், 11-மிடம் ஆக 4-ம் பணபரம்.

" " 3-மிடம், 6-மிடம், 9-மிடம், 12-மிடம் ஆக 4-ம் ஆபோக்கிலீயம்.

" " 3-மிடம், 6-மிடம், 10-மிடம், 11-மிடம் ஆக 4-ம் உபஜெயம்.

" " 1-மிடம், 5-மிடம், 9-மிடம் ஆக3-ம் திரிகோணம் என்றும் பேராம்.

### இவற்றுள்

1, 4, 7, 10 என்னும் கேந்திர இடங்களும் 5, 9 என்னும் திரிகோண இடங்களுமாகிய 6-இடங்களும் முற்றிலும் சுப ஸ்தானங்களாகும்.

2, 11 என்னும் இடங்கள் முக்கால்பங்கு சுபஸ்தானங்களும் கால் பங்கு அசுபஸ்தானமுமாகும்.

3 என்னும் இடமானது அரைப்பங்கு சுபஸ்தானமும் அரைப் பங்கு அசுபஸ்தானமு மாகும்.

6, 8, 12 என்னும் இடங்கள் முற்றிலும் அசுபஸ்தானங்களாம். 3-மிடம் முக்காற் பங்கு அசுபஸ்தான மென்றறிக.

சுபர்கள் 1-2-4-5-7-9-10-11 ஆகிய இவ்விடங்களிலிருந்தால் உத்தம சுப பலன்களையும், 3-மிடத்திலிருந்தால் மத்திம பலனையும், 6-8-12 இவ்விடங்களிலிருந்தால் தீமையான பலன்களையும் கொடுக்கும் கிரகங்களாம். பாவிகள் 3-6 8-12 இவ்விடங்களிலிருந்தால் சுப பலன்களையும், 1-2-4-5-7-9-10-11 இவ்விடங்களிலிருந்தால் அசுப பலன்களையும் கொடுப்பார்களாம்.

---

## கிரக மறைவு

சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது இவர்கள் இலக்கினத்துக்கு 8-மிடம் 12 மிடத்திலிருந்தாலும், சந்திரன், புதன், வியாழன் இவர்கள் 3-6-8-12-லிருந்தாலும், சுக்கிரன், 3-ல் 8-ல் இருந்தாலும் மறைவு பெறுவார்களாம்.

---

## கிரகேந்திர பலன்

1-4-7-10 ஆகிய 4-கேந்திரங்களும் முறையே இலக்கின கேந்திரம், சதுர்த்தகேந்திரம், சப்தமகேந்திரம், தசமகேந்திரம் என்னும் பெயராம். புதன், குரு, இலக்கின கேந்திரத்திலும், சந்திரன், சுக்கிரன் சதுர்த்தகேந்திரத்திலும் சனி, இராகு, கேது சப்தம கேந்திரத்திலும், சூரியன், செவ்வாய் தசமகேந்திரத்திலும் இருந்தால் அதிக பலம் பொருந்தியவர்களாம். கேது தசமகேந்திரத்திலிருந்தால் வலிமையுடையவர். அன்றியும் இலக்கினகேந்திரம் தவிர மற்ற கேந்திரங்களுக்கு அதிபதியாய் வியாழனாகில் முழுப்பாபமென்றும், சுக்கிரனாகில் முக்கால்பாபமென்றும், புதனாகில் அரைப் பாபமென்றும், மற்றக் கிரகங்களாகில் விசேஷ சுபபலன் என்றும் காண்க. அன்றியும் பாபிகள் கேந்திராதிபதிகளாகில் விசேஷ சுப பலத்தையும் யோகத்தையும் அவர்கள் தசாபுத்தி காலத்தில் கொடுப்பார்களென்றும் காண்க.

கேந்திராதிபதிகளுக்குள் ஒருவருக்கொருவர் அதிக பிரபலராவார். அதாவது இலக்கினாதிபதிக்கு 4-ம் இடத்ததிபதி பிரபலன். அவனுக்கு 7-ம் இடத்ததிபதி பிரபலன். அவனுக்கு 10-ம் இடத்ததிபதி பிரபலன்.

## எல்லாக் கிரகங்களுடைய நன்மை தின்மையை பொதுவில் கூறுகின்றது

இலக்கினத்துக்கும் 5-ம்இடத்துக்கும் 9-ம் இடத்துக்கும்அதிபராய் எந்தக் கிரகங்கள் வந்தாலும் அளவில்லாத இன்பப் பலனைக் கொடுப்பார்கள். 3-ம் இடத்துக்கும் 6-ம் இடத்துக்கும் 11-ம் இடத்துக்கும் அதிபராய் எந்தக் கிரகங்கள்வந்தாலும்அளவில்லாத துன்பப் பலனை கொடுப்பார்களாம். ஆனால் 3-6-11-ம் இடங்களிலிருப்பவர்கள் பாபபலனைக் கொடார்களென்றறிக.

முன்சொன்ன எல்லாக்கிரகங்களும் ஒருவருக்கொருவர்அதிக பிரபலராவர். அதாவது இலக்கினாதிபதிக்கு 5-ம் இடத்ததிபதி பிரபலன். அவனுக்கு 9-ம் இடத்ததிபதி பிரபலன், 3-ம் இடத்ததிபதி பிரபலன்.

எட்டாம் இடத்ததிபதி பாக்கியத்தானத்துக்கு விரயத்தானதிபதியான பாவகத்தினாலே நன்மை பெருக்கமில்லாததுன்பத்தைக் கொடுப்பான் அந்த 8-ம் இடத்ததிபதிதானேஇலக்கினாதிபதியானால் மாறுபட்டின்பத்தைக் கொடுப்பான். (8-ம்இடத்ததிபதியைப்போல மிகவுந் துன்பத்தைக் கொடானென்று காண்க.

### கிரக க்ஷேத்திர பலன்

நீசக்ஷேத்திரம் பெற்ற கிரகபலம் பூச்சியம்,சத்துருக்ஷேத்திரம்பெற்ற கிரகபலம்–$\frac{1}{4}$, மித்துருக்ஷேத்திரம்பெற்ற கிரகபலம்–$\frac{1}{2}$, கேந்திரம்பெற்ற கிரகபலம் அரையே அரைக்கால்,திரிகோணம் பெற்ற கிரகபலம் $\frac{3}{4}$, சொட்சேத்திரம் பெற்ற கிரகபலம் முக்காலரைக்கால், மூலத்திரிகோண க்ஷேத்திரம் பெற்ற கிரகபலம்–1, உச்சசேத்திரம் பெற்ற கிரகபலம்–$1\frac{1}{4}$.

### இலக்கின முதல் துவாதச பாகவ விபரம்

1. இலக்கினமாகிய முதலாவது இராசி, ஜீவன், தேகம், காந்தி, வடிவம்,பொக்கிஷம்,கேந்திரம்,உதயம்,நிறம்,இரத்தம், சிரசு, நினைப்பு, மனவாட்டம், பிரதியமிசம், லட்சணம், கீர்த்தி, மூர்த்திகரம்(கடவுள்வணக்கம்),சுபகரம்,சந்தோஷம்,ஐம்புலன் பொறி, நாளது ஜன்மம், ஆயுள் முதலியவைகளைத் தெரியச் சொல்வதற்கு லக்கினம் அல்லது இந்த முதலாவது இடமாகும்,

2. தனம், குடும்பம், நேத்திரம், கல்வி, பெருத்தசெல்வம், பூரண பாக்கியம், வசனம் (வாக்கு), சாஸ்திர விசாரணை, கமனம் (மனசு), உத்தேசம், மேம்பாடடைதல், பொன் ஆபரணம், ரத்திநபரணம், பூச்செல்வம், யோகவிஷயம் முதலியவை தெரியச் சொல்லுமிடத்து இலக்கினத்துக்கு இரண்டாமிடமாம்.

3. சகோதரம் (சகோதரன் — சகோதரி), இராஜகாரியம், வெற்றி, வைபோகம், ஆளடிமை, சங்கீதம், பராக்கிரமம், சாந்தம், அணிகலம், காதுநோய், கர்ணபூஷணம் (காது நகைகள்), போசனபாத்திரம், வீரம், உத்தியோகம், தைரியம், கடன், ஆயுள், தேவதா பக்தி முதலியவை தெரியச் சொல்லுமிடத்து லக்கினத்துக்கு மூன்றுமிடமாம்.

4. மாதுரு, வாகனம், கிரகம், பூமி, கல்வி, சுபகரம், வியாபாரம், வெல்லத்தகுந்த மேன்மை, சுகம், விருந்து, பந்துக்கள், சுற்றம், நிக்ஷேபம் (புதைபொருள்), பரஸ்திரிகமனம், வாசனைத் திரவியம், பாலுள்ள பசுமாடும் கன்றும், தேவாலயம், கிராமம், தானியம், ஏரி, குளம், கிணறு, தோப்பு காடு, நவரத்தினம், சினேகம்முதலியவை தெரியச்சொல்லுமிடத்து இலக்கினத்துக்கு நான்காமிடமாம்.

5. புத்திரன், புத்திரி, தாய்வழி, அம்மான் வர்க்கம், தகப்பன் வர்க்கம், முன் ஜென்மத்தில் செய்த நல்வினை, மகாவித்துவான்களால்பிரபந்தம்பெறல், கர்ப்பாதானம், மந்திரோபதேசம், சத்காலட்சேபம், விதரணம், இராஜஸ்தானம், பிரபு, யோகாப்பியாசம், மறுஜென்மம், புத்தி முதலியவைகளைத் தெரியச் சொல்லுமிடத்து இலக்கினத்துக்கு ஐந்தாமிடமாம்.

6. வியாதி, சத்துரு, தாயாதி விரோதம், துக்கம், ஆயுதகாயம், பங்காளி வழக்கு, பயம், துன்பம், சண்டை, தேகநோய், பொல்லாத ஆபத்து, கடன், திருடராலும் ஜலத்தாலும் ஸ்திரீகளாலும்சர்ப்பத்தாலும்அபாயம், தேகபாதை, மரணபாதை, அதிகாரஞ் செலுத்தல், காவல்படல் முதலியவை இலக்கினத்துக்கு ஆறுமிடத்தைக்கொண்டு சொல்லுதல்.

7. களத்திரம், கலியாணம், பெண்டு பிள்ளைகளுக்குண்டாகுஞ் சுகம், சுகபோகம், அலங்காரம், பந்துக்கள் வரவு, விவகார விசாரணை, இராஜபிரபு சன்மானம், யாத்திரை, வியாபாரம், ஓர்

தொழிலுமின்றி யாவரும் வசியம், பின்தாரம், பின்தார புத்திரர்கள் விரோதம் முதலியதை இலக்கினத்துக்கு ஏழாமிடத்தைக் கொண்டு சொல்லுதல்.

8. ஆயுதபீடை, யுத்தகளமரணம், மலையேறி விழுதல், வியாதி பீடிதம், விக்கினம், கிலேசம், மிகுதியான பலதுக்கம், விரணம், தனவிரயம், நஷ்டம், பகைநேறல், அபஜெயம், விஷபயம், மரணம், முயற்சிகெடுதல், பதனம், வழக்கு விவகாரம், ஆயுசு முதலியதை இலக்கினத்துக்கு எட்டாமிடத்தைக் கொண்டு சொல்லுதல்.

9. பிதுர் (தகப்பன்) பாக்கியம், யாகாதி கிருத்தியம், தான தர்மம், சாவடி, தடாகமுண்டாக்கல், தேவாலய பிரதிஷ்டை, பெயர் விளங்கத் தண்ணீர்ப்பந்தல் வைத்தல், தர்மத்துக்கு கிணறுவெட்டுவித்தல், பாடசாலை யேற்படுத்தல் முதலிய புண்ணியகருமம், குருவினிடத்தில் உபதேசம் பெறல், ஜீவகாருண்யம், பக்தி, யோகம், கீர்த்தி, அஷ்டமாசித்தி, ஞானம், வனம், மலை இவைகளிற் சஞ்சரிக்க விரும்புதல், பிதா பொருள், நினைத்த செல்வம் அனுபவித்தல் முதலியவற்றை இலக்கினத்துக்கு ஒன்பதாமிடத்தைக் கொண்டு சொல்லுதல்.

10. ஜீவனம்,பற்பலதருமம்,சத்கருமம், வியாபாரம், கிராம பூமி, க்ஷேத்திரலாபம், இராஜாதிக்கம், தன்பேரால் நாடு நகர முண்டாக்கல், அவ்வியகவ்வியம், தயை, ஞானம்,தெய்வபூசை, தகப்பன் செய்த பாவமொழித்தல், தெய்வபக்தி, பராக்கிரமம், பேரும் பிரதாபமும், இரவில் சையோகம், வஸ்திராபரணம், போஜனருசி, மனைவீடு, தேசசஞ்சாரப்பிரியம் முதலியதை இலக்கினத்துக்குப் பத்தாமிடத்தைக்கொண்டு சொல்லுதல்.

11. லாபம், மூத்தச்சகோதர யோகங்கள், கல்வி, பொன் வரும்படி, பயிர் பச்சைவரும்படி, நிக்ஷேபம், புதைபொருள், சுயார்ஜித் வரும்படி, ஆடையாபரணம், பூமியால்விருத்தி, பலதார சம்போகம், அஸ்வம், கெஜம், தண்டிகை வாகனங்கள், மனைவியாகுலம் போக்கல், ஞானம், சேவகம் செய்பவர், பல விதத்திலும் ஐஸ்வரியமுண்டாகுதல் முதலியன இலக்கினத்துக்கு பதினோரா மிடத்தைக்கொண்டு சொல்லுதல்.

12. விர்யம்,தன்விர்யத்தோடுஉண்டாகும்போகம், மோட்சம், நித்திரை, சவுக்கியம், பிரதேச உத்தியோகம், மலைநாடுபூமி

பிரதட்சணசஞ்சாரம்,விவாதமுண்டாகுதல்,தானதர்மம்,பரோப காரம், யாகாதி கிருத்தியம், கொடை, மந்திராதி பலவகை தொழில் துறைச் செய்கை கப்பல் வியாபாரம் முதலியன இலக்கி னத்துக்குப் பன்னிரண்டா மிடத்தைக்கொண்டு சொல்லுதல்.

மேற்சொல்லிய ஸ்தானங்களுக்குரிய அதிபதிகள் இலக் கினத்துக்கு கேந்திரம், திரிகோணம், உச்சம், மூலத்திரி கோணம், சொட்சேத்திரம், மித்துரு, தனலாபஸ்தானங்களில் இருந்தால் மேற்படி பலன்கள் விர்த்தியாக நடக்கும். மேற்படி ஸ்தானங்களில் சுபக் கிரகங்களிருக்கப் பார்க்க உத்தமம்.

புத்திர களத்திர ஸ்தான முதலானவைகளுக்கொத்த சுபக் கிரகங்களுடைய தசாபுத்திகளிற் புத்திரதாராதி சுபபலன்களைப் பெறும்படி கொடுப்பார்களாம். புத்திரதாராதி ஸ்தானங்களுக் கொத்த சுபராரெனில் அத்தானுதிபதிகளும் காரகாளுந்தான்.

துவாதசபாவகம் என்ருல் 12-பாவகம். பாவகமென்பது இலக்கின முதல் 12-இராசிகளிருப்பதில் ஒவ்வொன்றுக்கும் பாவகமென்றே பேராம்.

மேற்படி ஸ்தானங்களில் பாபிகளிருக்கப் பார்க்க மேற்படி பலன்கள் விர்த்திக்கு வராமல் குறைவுபடுமாம். மேற்படி ஸ்தா ளுதிபதியர்கள்பாவக்கிரகங்களுடனும்சத்துருக்கிரகங்களுடனும் சம்பந்தப்பட்டும் பார்க்கப்பட்டும், இலக்கினத்துக்கு 3-6-8-12 இந்தத் துர்ஸ்தானங்களிலாவது பகை க்ஷேத்திரம் அல்லது நீச க்ஷேத்திரத்திலாவது இருந்தாலும்மேற்படிபலன்கள் குறைவாம்.

புத்திரஸ்தானம் சகோதரஸ்தானம் இந்த இடங்களிலாவது இந்த இடத்ததிபதிகளுடனுவது ஆண்கிரகம் கூடியிருக்கினும் பார்க்கினும்புத்திரபலன் அல்லதுசகோதரபலனில்ஆணதிகமாம். பெண் கிரகங்களிருந்தாலும், பார்த்தாலும் கூடினுலும் பெண் சகோதரமல்லது புத்திரிகளதிகமாம். அலிக்கிரகங்களிருந்தாலும் பார்த்தாலும் கூடினுலும் சகோதரமல்லது புத்திரபாவங்களுக்கும் குறைவாம். அப்படிப்பட்ட அலிக்கிரகங்களை சுபர் பார்த்தால் தாமத லாபமும் அகாலவிருத்தியும் முன்னடுத் துண்டாகி மரண முடைந்தும் பின் லாபசசோதரம் புத்திராதி தீர்க்கமாயிருக்கும்.

## நவக்கிரக காரகங்கள்

### சூரியன்

பிதுர் (பிதா), ஆத்மா, சிரசு, தந்தம், வலது கேந்திரம், சிலும்பின மயிர், பைத்திய சரீரம், வைத்தியம், ஒரு தலைநோவு முதலிய சிரோரோகம், சுரம், வியாதிஸ்திரீ அல்லது சித்தசுவாதீனமில்லாத ஸ்திரீபோகம், சௌரியம், பிரதாபம், தைரியம், இராஜசேவை, உத்தியோகம், சைவானுஷ்டானம், தபசு, சதாசிவன், பஞ்சலோகம், வச்சிர ரத்தினம், இரசவாதம், ஆனை, கோன்மை, பால், மிளகு, யாத்திரை, பகற்பொழுது, ஒளி இவைகட்கெல்லாம் சூரியனே காரகன்.

### சந்திரன்

மாதுர் (மாதா), பராசக்தி, கணபதி, சுகபோசனம், வஸ்திரம், குதிரை, நித்திரை, சிறிதுநாள் பருத்தும் இளைத்து மிருக்கும் சரீரம், சித்தசுவாதீனமின்மை, க்ஷயரோகம், சிலேத்தும சீதள நோய்கள், இடக்கண் புருவம், குடை, உத்தியோகம் கீர்த்தி, முத்து முத்தாபரணம், வெண்கலம், வெண்ணெய், அரிசி, பனிப் பயிறு, உப்பு, மச்சம், உழவன், உப்பளவர், வண்ணூர், சத்திரம் கந்த புஷ்பம், சாமரம், பலம், ஸ்நானுதிகம் இவைகட்கெல்லாம் சந்திரனே காரகன்.

### செவ்வாய்

சகோதரம், பூமி, சுப்பிரமணியர், விக்கினேசுவரர், பத்திரகாளி, கோபவான் குலாலன், அக்கினி முகமாகச் செய்யுந்தொழிலினர், யுத்தம்—இரத்தம்—காயம், சாகசம், செம்பு, சிவந்த ரத்தின முதலானவை, பவளம், துவரை, அக்கினிபயம், விரணம், துவேஷம், கடன், சோரம், சுயம்பாகம், வீரியம், உத்சாகம், ஆட்டுவர்க்கம், சேனுதிபத்தியம், விதவைஸ்திரீபோகம், சும்பனம், பிளவை, சடுதி மரணம் இவைகட்கெல்லாம் செவ்வாயே காரகன்.

### புதன்

மாதுர் வர்க்கம் (அம்மான் முதலானவர்கள்) கல்வி ஞானம், விஷ்ணுபகவான், வைசியன், கணக்கன், தானுதிபதி தூதுவன், தேர்ப்பாகன், வாக்கு சாதுரியம், கதைகாவியம் உபாசனை, யுக்தி சத்திய வசனம், வைஷ்ணவ கர்மம், வியாபாரங்கள், லிகிதத்

தொழில், சிற்பத்தொழில், அலி, தேர், தாதன், அந்தரநாட்டிய முதலானவை அண்டரோகம் வாதநோய் விஷரோகன் தாசிபரன் சகல பிரபஞ்சமு மறிந்தவன், திறவசனுதிகன், புத்திரக் குறைவு பச்சை ரத்தின முதலானவை சேங்கன்று வர்க்கம் இலை முதலானவை பாசிப்பயறு தாரா வெந்தயம் இவைகட்கெல்லாம் புதனே காரகன்.

### வியாழன்

புத்திரர், பிர்மா, ஞானம், யோகாப்பியாசம், ஆசாரியத்துவம், அஷ்டமாசித்திகள், உபதேசம், புத்தியுக்தி, விவகார ஆலோசனை முதலானவை, இராச்சியாதிபத்தியம், இராசசன்மானம், பட்டப் பேர், சுருதி ஸ்மிருதி, சத்விஷயம், சாந்தம், சொர்ணம், வைடூரியம் புட்பராகம், கோமேதகம், புஷ்பம், தித்திப்பு, நேத்திரங்கள், விப்பிரவர்க்கம், ஆண்டிவர்க்கம், ரிஷிவர்க்கம், தேன், கடலை, சீரகம், இவைகட்கெல்லாம் வியாழனே காரகன்.

### சுக்கிரன்

களத்திரம், சிரகம் பட்டப்பேர், பகற்காலமாதுரு, வெகு ஸ்திரீ சங்கம், தாசிதாசன் முதலானவர், சங்கீதவாத்தியம், பரதநாட்டிய முதலானவைகளிற் பிரியம், கெந்த புஷ்பம், புனுகு, கஸ்தூரி முதலாகிய நானுவித பரிமள வாசனுதிகள் கட்டில், மெத்தை சப்பிரமஞ்ச முதலானவை, வெண்சாமரை, இராஜஸ்திரீ, ரூபவதி, போகபாக்கியம், அழகு இளமை, கருவிழி, சம்பத்து வாகனம், மாலை கொடி, டால் முதலானவை, ரத்னம், வெள்ளி, கப்பல் வியாபாரம், எப்போதும் விகட விநோத பரியாசப் பிரசங்கப் பிரியம், ஆசை ஸ்ரீதேவதை யுபாசனை, ஜனரக்ஷகம், மித்திரம், பசு, பால் தயிர், அன்னம், மொச்சை, புளி, ஈயம், தேவப் பெண்கள், இலட்சுமி கடாக்ஷம், இவைகட்கெல்லாம் சுக்கிரனே காரகன்.

### சனி

தீர்க்காயுசு—நிசிகாலத்துபிதா, சாத்தான் (ஐயனுர்) உபாயம், ஜீவனம், எருமை விர்த்தி, இரும்பு, ஆளடிமை, சேவகாவிர்த்தி, வ்யற்களம், கிருஷித்தொழில், நீலரத்ன முதலானவை மரமேலை, களவு, ஆத்ம இம்சை, சிறைப்படல், இராஜதெண்டனை, வீண் வார்த்தை, வெட்கமில்லாதவைதுன்பம்வாயலித்தல். கடன், அசுபகர்மம், மயக்க போசனம், நீசஸ்திரீ விதவைஸ்திரீ தீவாந்தர

பிரவேசஸ்திரீ அல்லது ஊனமான ஸ்திரீபோகம், அலி, அவயவக்குறைவு, சித்தப்பிரமை, மேகநீர் உபத்திரவம், பித்தரோகம், கடுகு, உளுந்து, எள்ளு, எண்ணெய், இவைகட்கெல்லாம் சனியே காரகன்.

## இராகு

ஞானம், பிதாமகி, (பிதுர் பாட்டன் வம்சம்) பிரதாபம், செப்பிடு வித்தை, களவு, நானுவித வேடத்தொழில், சேவகத் தொழில், பரதேசவாசம், சாதிக்கு விரோதமாய் செய்யாத தொழில்கள் செய்தல், விகட விநோத வித்தைகள், வியாதி ஸ்திரீபோகம், விஷபயம், ஜலகண்டம், அங்கவீனம், வெகு பேச்சு, வாயுவு வலிப்பு, பித்தம், குன்மம், வெட்டுக்காயம் பிளவை முதலிய ரோகங்கள், விலங்கு உக்ரகுடிலம், சிறைப் படல் இவைகட்கெல்லாம் ராகுவே காரகன்.

## கேது

ஞானம், மாதாமகி, (மாதுர்வழி பாட்டன் வம்சம்) கபடத் தொழில், சும்பனம், கீழ்குலத்தொழில், விபசாரம், பாபத் தொழில், பரதேச ஜீவனம், விரணம், விஷபாண்டு, குஷ்டம், உதரவலி முதலாகிய ரோகங்கள், அக்கினிகண்டம், அலங்காரம், அசுகம், சிறைப்படல் இவைகட்கெல்லாம் கேதுவே காரகன். பிதாமஹிக்கு கேதுவும் காரகனென்று கூறும் நூல்களும் சிலவுள.

நவக்கிரககாரகமென்றால் இன்னின்னகிரகங்கள் இன்னின்ன பலன்களைக் கொடுக்க அதிகாரிகளா யிருக்கிறார்களென்பதாம். ஷ காரகர்கள் சுபர்சம்பந்தம் சுபர் பார்வைபெற்று சுபஸ்தானங் களிலிருந்தால ஷ பலன்கள் விர்த்தியாய் நடக்கும், பாவர் அல்லது சத்துரு சம்பந்தம் அல்லது பார்வைபெற்றும் பாபஸ்தானங் களிலிருந்தால் ஷ பலன்கள் குறைவாம். (சுபஸ்தானமாவது உச்சம், சொச்சேத்திரம், திரிகோணம்-நட்புராசிகள், தனலாபஸ் தானங்களுமாம். பாபஸ்தானங்களென்பது-பகை, நீசம் இவ் விடங்களும் 3-6-8-12-இவ்விடங்களுமாம்.)

---

## இலக்கின பலன் முதலியன

### மேஷம்

இராஜ வெகுமானம், வெகுசனப்பிரியன், தைரியவான், அடிமையுள்ளவன் மூர்க்கன், சாமார்த்தியன், மோகி, மெலிந்த தேகவான் அடக்கமுடையவன், கனவான், புத்திமான், அனுசாரன், சஞ்சாரி, பொறுமை, அறிவு, அழகு, மனோபயம் இவைகளையுடையவன். உபயகளத்திரம், ஆயுதம், நெருப்பு, மரம், கல் சுவர் விழுதல் இந்த வகைகளி லெதினுலாவது விரணமுள்ள சரீரம், சகோதர சிரேஷ்டன், அற்ப புத்திரருடையவன். 4-5-7-10-20-22-25-28-இந்த வயதுகளில் அக்கினி, சுரம், ஜலம், சிரங்கு, வைசூரி, விஷப்பீடை. சுபர் பார்க்க 75 வயது வரையிலிருப்பான். இந்த இலக்கினத்துக்கு சூரியன், வியாழன் இவர்கள் சுபர்கள். சனி சம்பந்தப்பட்ட வியாழன் எப்போதும் அவனுக்கேற்ற பாப பலனைக் கொடுப்பான். வியாழன், சூரியன், யோககாரகாள். இவர்கள் ஒரே ராசியிலிருந்தால் பிரபல யோகம். புதன், சுக்கிரன், சனி இவர்கள் பாபிகள். சனி புதன் மாரகாள். துதியாதிபதியாயிருத்தாலுங் கொல்லான். சனி முதலானவர்கள் கொல்வார்கள். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகத்துக் கொப்பாகிய கண்டத்தைக் கொடுப்பார்கள்.

### விருஷபம்

ஸ்தூலதேகவான், களத்திர தோஷம், சத்தியவான், சுயகாரிய பரன், பிறர் சொத்தை கிரகிக்க வல்லவன், மனோ கபடி, புருஷவசியன் வஸ்திராபரண முள்ளவன், குணதோஷமறிவன், அடிமையுள்ளவன், பிற்கால புத்திரருடையவன், 5-13-16-19-20-27-இந்த வயதுகளில் சுரம், கண்டத்தில் வியாதி, க்ஷயம், சிரங்கு இவைகளாற் பீடை. இந்த இலக்கினத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் வயது 77 வரையிலிருப்பான். சூரியனும் சனியும் நல்லவர்கள் சனியொருவனே மேலான இராஜயோகம் கொடுப்போன். சந்திரனும் வியாழனும், சுக்கிரனும் பாபிகள். சந்திரன், வியாழன், செவ்வாய், மாரகாள். புதன் கொல்லான். வியாழன் முதல்லானவர் கொல்வர். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகத்திற்குச் சமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள். சந்திரன், வியாழன், சுக்கிரன் செவ்வாய் இவர்களுடன் சம்பந்தப்பட்ட கிரகங்களை ஆராய்ந்து அவர்கள் நிலைகளறிந்துஞ் சொல்லவும்.

## மிதுனம்

சுயகாரியபரன், உதிரரோகி, இனியவார்த்தையுடையவன், வார்த்தை சோர்வில்லாதவன், கபடி, மைதுன அபேட்சி, களத்திரத்தின் சொல்லைக்கேட்பவன், ரோக களத்திரமுடையவன், வெட்கமுடையவன், கணக்கன், மூத்திரகிரிச்சனன், புகழுடையவன், விஷயாதிகன், வழக்கறிவன். 2-3-4-5-8-9-10-18-25-28 இந்த வயதுகளில் நெருப்பு, ஆயுதம், சுரம், கண்ணோய் இவைகளாற்பீடை, இந்தஇலக்கினத்தைசுபக்கிரகம்பார்க்கில் 65-வயது வரையில்வாழ்ந்திருப்பான். இந்தஇலக்கினத்துக்குசூரியன், செவ்வாய், வியாழன், கொடிய பாபிகள். வியாழன் சனியுடன் சேருவானுகில் மேடராசியிற் பிறந்தோர்க்கொத்தபடி அவயோககாரனுவான். சுக்கிரன் ஒருவனே சுபன். சந்திரன் துதியாதிபத்திய தோஷத்தையுடையவனுயிருந்தாலும் மாரகங்கொடான். சூரியன், செவ்வாய், வியாழன், இவர்கள் மாரகஸ்தானங்களிலிருந்தால் மாரக சமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள் குருவும் சனியும் தருமகருமாதிபதிகளாகையால் யோககாரகாள் வலியறிந்து சொல்லவும்.

## கடகம்

தனவான், களத்திரசுகவீனன், கபடுள்ள அவமான களத்திரமுடையவன், சமர்த்துள்ளவன், குரு விசுவாசன், அற்ப புத்திரருடையவன், வேசையர் மேலெண்ணமுடையவன், வெகுகாமி சதாதுக்கி பிதாவுக்கடங்காமை, 5-8-14-16-20-25 40-இந்த வயதுகளில் சுரத்தால் பேதியால் பீடை நன்மையான கிரகம் பார்க்கில் 90-வயது வரையிலிருப்பான். வியாழனும் செவ்வாயும் சுபாள், செவ்வாய் ஒருவனே யோககாரகன், செவ்வாயும் வியாழனுங் கூடி யிருந்தால் பிரபலயோகம். சூரியன்கொல்லான். சுக்கிரன் புதன் பாபிகள். புதன், சுக்கிரன் சனி, மாரகாள் இவர்கள் மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகத்துக்குச் சமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

## சிம்மம்

கெம்பீரவசனமுள்ளவன், நல்ல புசிப்பையுடையவன், திடவான், பசியுடையவன், பாவகர்மி, மாதுர் பிதுர் துவேஷி, கோபி, தயிரியவான், தனவான், புத்திமான், சகலவல்லவன், ஜன்வுசி

யன், கபடி, நேத்திரச்சிர முகரோகி, வேலைசெய்ய, விருப்பமுடையவன், 5-10-27-30 இந்த வயதுகளில் சுரத்தால் பீடை, இந்த லக்கினத்தை சுபக்கிரகம் பார்த்தால் 80-வயது வரையிலிருப்பான். சூரியன் செவ்வாய் சுபாள், புதன் சுக்கிரன் பாவிகள், செவ்வாய் சுக்கிரன் யோககாரகாள், செவ்வாயும் சுக்கிரனுங் கூடியிருந்தால் தீயபலனைக் கொடுப்பார்கள், செவ்வாய் யோககாரகனானபோதிலும் சதுர்த்த கேந்திராதிபதி சம்பந்தத்தினால் தீய பலனைக்கொடுப்பா னென்றதாயிற்று. இவர்கள் இருவரும் கூடியிருந்தால் நல்ல பலனைக் கொப்பார்களென்று கூறும் நூல்களும் சிலவுள. சனி சுக்கிரன் மாரகாள். புதன் கொல்லான். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகசமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

## கன்னி

தருமவான், பின்னிறக்கமுள்ளவன், ஆசாரமுடையவன், நல்ல நடத்தையுடையவன், சுயகாரியபரன், மனோவஞ்சகன், பிறரால் தொழில் தனம் பெற்றுடையோன், சனப்பிரியன், இதமகிதம் இரண்டுஞ் செய்பவன், பின்வயதில் அதிகதனம் சம்பாதித்தலுமுடையவன் 5-8-9-10-18-19 இந்த வயதுகளில் நெருப்பு, பேதி, சுரம், வைசூரி இவைகளால் பீடை சுபக்கிரக பார்வை யுண்டாகில் 77-வயதுக்கு குறையாமலிருப்பான். இந்த இலக்கினத்துக்கு சுக்கிரனும் சனியும் சுபர்கள், சந்திரன், செவ்வாய் வியாழன் இவர்கள் பாபிகள். புதனும் சுக்கிரனும் யோககாரகாள். இவர்களிருவருங் கூடியிருந்தால் பிரபலயோகம். சந்திரன், செவ்வாய், வியாழன் மாரகாள் சுக்கிரன் துதியாதிபதியாயிருந்தாலுங் கொல்லான்-மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகசமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

## துலாம்

இராஜபூஜிதன், நல்லகுணம், நல்லபுத்தி, பொறுமை, வல்லமை, அறிவு, புகழ்இவையுடையவன், சம்பத்துடையவன், மன்மதசுகி, பரிமளப்பிரியன், தனவான், இரக்கமுடையவன், அபிமானி, சனப்பிரியன், சுகவான், மனோபீதி 7-9-10-12-19-28 இந்த வயதுகளில் அக்கினி, பேதி, சத்துரு, வைசூரி, ஜலம் இவைகளால்பீடை இந்தலக்கினத்தை சுபக்கிரகம்பார்த்தால் 85-வயசு வரையில் வாழ்ந்திருப்பான். இந்த லக்கினத்துக்கு சனி, புதன், சுக்கிரன், சுபர்கள். சூரியன், செவ்வாய், வியாழன் பாவிகள்,

சந்திரனும் புதனும் யோககாரகாள் இவர்களிருவருங் கூடியிருந்தால் பிரபலயோகம், சூரியன் வியாழன் மாரகாள். செவ்வாய் துதியை சப்தமாதிபதியா யிருந்தாலுங் கொல்லான். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12-ல் இருந்தால் மாரகத்துக் கொப்பாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

### விருச்சிகம்

புத்திமான், தனவான், வெகுமானி, வஞ்சகன், அவமானி, இனிமையாகப் பேசுவான், பந்துஜன துவேஷி, எடுத்த காரியத்தை முடிப்பான் வறையற்ற விஷயப் பிரியன், மனைவியிடத்தில் அதிகப் பிரியமுள்ளவன், 4-6-10-12-18-40 இந்த வயதுகளில் கண்டதோஷம், சுரம், அக்கினி, சன்னி, இவைகளாற் பீடை. இந்த லக்கினத்தை உத்தமகிரகம் நோக்கில் 90 வயது வரையிலிருப்பான். சூரியன், சந்திரன், வியாழன் சுபர்கள். செவ்வாய், புதன், சுக்கிரன் பாவிகள். சூரியனும் சந்திரனும் யோககாரகாள். இவர்களிருவருங் கூடியிருந்தால் பிரப்லயோகம் புதன் செவ்வாய் சுக்கிரன் மாரகாள். வியாழன் சனி கொல்லார்கள். புதன் முதலானவர்கள் கொல்வார்கள். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12 ல் இருந்தால் மாரகத்துக்குச் சமானமான கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

### தனுசு

சத்தியவான், நற்குணமுடையவன், அபிமானி, நல்ல வசனமுள்ளவன், சுகவான், தனவான், போகவான், மித்திரன், வித்தையுடையவன், சஞ்சாரி, சதா உத்தியோகபரன்; 3-4-5 12-15-18-32-40-47 இந்த வயதுகளில் கண்ணோயாலும், உஷ்ணரோகத்தாலும் பீடை இலக்கினத்தைச் சுபக்கிரகம் பார்த்தால் 77 வயது வரையிலிருப்பான். சூரியனும் செவ்வாயும் சுபர்கள், சுக்கிரன் ஒருவனே பாவி சூரியனும் புதனும் யோககாரகாள். சூரியனும் புதனும் கூடியிருந்தால் பிரபலயோகம், சுக்கிரன் புதன் மாரகாள் சந்திரன் சனி கொல்லார்கள். சுக்கிரன்முதலானவர்கள் கொல்வார்கள். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12ல் இருந்தால் மாரகத்துக்குச் சமானமாகிய கெண்டத்தைக்கொடுப்பார்கள்.

### மகரம்

துராசையுடையவன் திடபுத்திமான், சுபகாரியபரன், உபாயமுள்ளவன், கோபி, வாய்ச்சாலகன், அபிமானி, பரிமளப்

பிரியன் மனைவியிடத்தில் பிரியமுள்ளவன், 3-4-5-7-8-10-1 32-37 இந்த வயதுகளில் ஜலம், சுரம், விஷம் இவைகளா பீடை. இந்த இலக்கினத்தை சுபக்கிரகம் பார்த்தால் 67 வய வரையிலிருப்பான். செவ்வாய், புதன், சுக்கிரன் சுபர்கள். சந் ரன் வியாழன் பாவிகள்; சுக்கிரன் ஒருவனே யோககாரகன் சு கிரனும் புதனும் கூடியிருந்தால் இராஜயோகம். சூரியன் ச கொல்லார்கள். சந்திரன் வியாழன் மாரகாள் மாரகஸ்தா மாகிய 2-3-7-8-12 ல் இருத்தால் மாரகத்துக்குச் சமானமாகி கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

## கும்பம்

சினேகிதர்களை யுபாதிப்பவன், ஸ்திரீகளுக்குப் பிரியமுள் வன் அகண்ட வயிறுடையவன், சுகவான், திடசித்தமுள்ளவ தரித்திரன் தன்னையே புகழ்ந்து பேசுவான், குள்ளன், சிவந் கண்ணையுடையவன், ஒருவர் செய்யும் உபகாரத்தை உடனே மறந்து விடுகிறவன், அற்பகல்வியுடையவன், பைத்திய சரீ முடையவன் 9-10-11-20-30-32 இந்த வயதுகளில் சுரம் மிகுந்த சன்னி, வாத சுரம், பித்தசுரம், இவைகளாற்பீடை இந்த இலக்கினத்தை சுபர்கள் பார்த்தால் 80-வயது வரை லிருப்பான். சுக்ரன், புதன், சனி, சுபர்கள். சந்திரன், செவ்வா வியாழன் பாவிகள். சுக்கிரன் ஒருவனே யோககாரகன் சுக் ரன் செவ்வாய் கூடியிருந்தால் பிரபல யோகத்தைக் கொடு பார்கள். வியாழன் துதியாதிபதியா யிருந்தாலுங் கொல்லா சந்திரன் செவ்வாய் மாரக ஸ்தானமாகிய 2-3-7-8-12ல் இரு தால் மாரகத்துக்குச் சமானமாகிய கெண்டத்தைக் கொடு பார்கள்.

## மீனம்

ஞானி, பிராமணர், பெரியோரிடத்தில் பக்தி விசுவா முடையவன், சத்தியவான், செளந்தரிய ரூபமும், செளகரியமு திரவியமு முடையவன், பரிமளப்பிரியன், வெகுசெலவாளி, இரக் முள்ளவன் முன் ஜாக்கிரதையுள்ளவன், குளிர்ச்சியான கண் களும் கர்ணரோகமு முடையவன் 3-4-7-12-20-28 இந்தவய களில் இருமல், சுரம் உஷ்ணரோகம் இவைகளாற் பீடை இந் லக்கினத்தை சுபக்கிரகம் பார்த்தால் 100 வயது வரையிலிரு பான். சந்திரன், செவ்வாய் சுபர்கள். சூரியன், புதன், சுக்கிரன் சனி இவர்கள் பாவிகள். செவ்வாயும் குருவும். யோககாரகா செவ்வாயும் வியாழனும் கூடி யிருந்தால் பிரபல யோகத்தை

கொடுப்பார்கள். சூரியன், புதன், சுக்கிரன், சனி இவர்கள் மாரகாள். செவ்வாய்கொல்லான், சூரியன்முதலானவர்கள் கொல்வார்கள். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12ல் இருந்தால் மாரகத்துக்குச் சமானமாகிய கெண்டத்தைக் கொடுப்பார்கள்.

கிரகங்களுடைய வலிமையை யூகித்துச் சொல்லுக.

---

### மாரகஸ்தானம் மாரகாள்

இலக்கினத்துக்கு 8-ம் இடமும் அதற்கு 8-ம் இடமான 3-ம் இடமும் ஆயுள்தானமென்றுபேர். இவைகளுக்கு விரயத்தானங்களாகிய 7ம் இடத்தையும் 2ம் இடத்தையும் ஜாதகர்களுக்கு மாரகத்தானமென்றும் காண்க. பாவம் 12-க்கும் இப்படியே பகுத்தறியவும்.

கேந்திராதிபத்திய தோஷத்தில் வியாழனும் சுக்கிரனும் மிகவும் பலவான்கள். இவர்கள் மேற்படி 2-7-ம் இடங்களில் நின்றுராகில் மாரகத்தைக் கொடுப்பார்கள். மாரகத்தானதிபதியைப் பார்க்கிலும் மாரகத்தானத்தி லிருப்பவர்கள் பலவான்களெனக் காண்க. இது மாரகத்தான விலக்கின்மேல் கேந்திராதிபத்திய தோஷத்தாற் கூறப்படுகிறது.

இலக்கினம் சரராசியானல் 2-7-க்கு அதிபர்கள் மாரகாள்.
,, ஸ்திரராசியானல் 3-8-க்கு அதிபர்கள் மாரகாள்.
,, உபயராசியானல் 7-11-க்கு அதிபர்கள் மாரகாள்.

இலக்கினத்துக்கு 12-ம் இடத்தாதிபத்தியம் சுக்கிரனுக்காவது சனிக்காவதிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.
,, 7-மிடத்தாதிபத்தியம் சூரியனுக்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.
,, 6-மிடத்தாதிபத்தியம் செவ்வாய்க்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.
,, 4-10-ல் குளிகனிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.
,, 2-ல் இராகுவும் 8-ல் கேதுவுமிருந்தால் மாரகம்.
,, 8-ல் இராகுவிருந்தால் பிதுர் மாரகம்.
,, 4-7-5 மாதுரு மாரகம்.

இலக்கினத்துக்கு 5–11 சகோதர மாரகம்.

,, 6–மிடத்தாதிபத்தியம் சூரியனுக்கிருந்தால் பிதுர் மாரகம்.

இலக்கினத்துக்கு 2-7-க் கதிபர்கள் உச்சம், சொக்ஷேத்திரம் கேந்திரம் திரிகோணம் இந்த இராசிகளிலிருந்தாலும் மித்திரர்களுடன் சம்பந்தப்பட்டாலும் சுபக்கிரகங்களுடன் சேர்ந்தாலும் பார்க்கப்பட்டாலும் நல்ல பலன்களையும் 2-3-7-8-12 மிடங்களில் இருந்தாலும், சத்துரு பாபி இவர்களுடன் சம்பந்தப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் கண்டத்துக்குச் சமானமாகிய மிகவும் கஷ்ட பலன்களையும் கொடுப்பார்கள்.

லக்கினத்துக்கு 3-8–க்கதிபர்கள் தங்களுடைய திசைகளில் மாரகத்துக்கொப்பாகிய கண்டத்தையும் மிகவும் கஷ்ட பலன்களையும் கொடுப்பார்கள். இவர்கள் 2–2-7-8-12-மிடங்களிலிருந்தால் மாரகத்தைக் கொடுப்பார்கள். சுபர்களுடன் சம்பந்தப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் மத்திம பலனைக் கொடுப்பார்கள்.

மாரகஸ்தானாதிபர்கள் மாரகஸ்தானாதிபர்களுடன் சேர்ந்தாலும் பார்க்கப்பட்டாலும் மாரகத்தைக் கொடுக்க மாட்டார்கள் ஆனால் அவர்களுடன்சேர்ந்தபாபிகள் அல்லது மாரகஸ்தானத்தி லிருக்கிற பாபிகள் மாரகத்தைக் கொடுப்பார்கள்.

தீர்க்காயுசு ஜாதகனுக்கு 7, 9–ம் திசை மாரகம்.
மத்திம ஆயுசு ஜாதகனுக்கு 3, 5, 6–ம் திசைகள் மாரகம்.
அற்ப ஆயுசு ஜாதகனுக்கு 1, 3 திசையில் மாரகம்.
4-வது திசை சனி திசையானால் மாரகம்.
5 வது திசை செவ்வாய் திசையானால் மாரகம்.
6-வது திசை வியாழ திசையானால் மாரகம்.
7–வ்து திசை ராகு திசையானால் மாரகம்.

சந்திரன் நின்ற இராசிக்கு 4–10ம் இடங்களிலிருக்கும் பாபர் திசைகளும் மாரகம்.

குளிகன் நின்ற இராசிக்குதிரிகோணத்தில்சனிவரும் காலம் மாரகம்.

இரண்டாமிடத்தில் பாபக்கிரகங்களிருக்க அல்லது பார்க்க இலக்கினாதிபதியும் வியாழனும் பாபக்கிரகங்களும் ஒரே இராசியி லிருக்க எட்டில் இராகுவிருக்க விஷத்தினால் பீடை.

———

மாரக தசாபுக்தி விவரம்

இலக்கினுதிபதியுடைய தசையில் சப்தமாதிபதி புக்தி.

சப்தமாதிபதியுடைய தசையில் இலக்கினுதிபதி புக்தி.

இலக்கினத்திலிருக்கிறவன் தசையில் சப்தமஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

சப்தமஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் லக்கினத்திலிருக்கிறவன் புக்தி.

லக்கினுதிபதியுடன் சம்பந்தப்பட்டவன் தசையில் சப்தமாதிபதியுடன் சம்பந்தப்பட்டவன் புக்தி.

சப்தமாதிபதியுடன் சம்பந்தப்பட்டவன் தசையில் லக்கினுதிபதியுடன் சம்பந்தப்பட்டவன் புக்தி.

லக்கினுதிபதி பார்வை சம்பந்தப்பட்டவன் தசையில் சப்தமாதிபதி பார்வை சம்பந்தப்பட்டவன் புக்தி.

சப்தமாதிபதி பார்வை சம்பந்தப்பட்டவன் தசையில் லக்கினுதிபதி பார்வை சம்பந்தப்பட்டவன் புக்தி.

துதியாதிபதியினுடைய தசையில் விரயாதிபதியினுடைய புக்தி.

விரயாதிபதியினுடைய தசையில் துதியாதிபதியினுடைய புக்தி.

துதியஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் விரயஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

விரயஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் துதியஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

துதியாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் விரயாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

விரயாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் துதியாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

துதியாதிபதியுடன் பார்வை சம்பந்தப்பட்டவன் தசையில் விரயாதிபதியின் பார்வை சம்பந்தப்பட்டவன் புக்தி.

விரயாதிபதியின் பார்வை சம்பந்தப்பட்டவன் தசையில் துதியாதிபதியின் பார்வை சம்பந்தப்பட்டவன் புக்தி.

திரிதியாதிபதியினுடைய தசையில் லாபாதிபதியினுடைய புக்தி.

லாபாதிபதியினுடைய தசையில் திரிதியாதிபதியினுடைய புக்தி.

திரிதியஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் லாபஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

லாபஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் திரிதியஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

திரிதியாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் லாபாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி

லாபாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் திரிதியாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

திரிதியாதிபதியினது பார்வை பெற்றவன் தசையில் லாபாதிபதியினது பார்வை பெற்றவன் புக்தி.

லாபாதிபதியினது பார்வைபெற்றவன் தசையில் திரிதியாதிபதியினது பார்வைபெற்றவன் புக்தி.

சதுர்த்தஸ்தானாதிபதியினுடைய தசையில் தசமாதிபதியினுடைய புக்தி.

தசமாதிபதியினுடைய தசையில் சதுர்த்தஸ்தானாதிபதியினுடைய புக்தி.

சதுர்த்தஸ்தானத்தி லிருக்கிறவனுடைய தசையில் தசமஸ்தானத்திலிருக்கிறவனுடைய புக்தி.

தசமஸ்தானத்தி லிருக்கிறவனுடைய தசையில் சதுர்த்தஸ்தானத்திலிருக்கிறவனுடைய புக்தி.

சதுர்த்தஸ்தானாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் தசமாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

தசமாதிபதியோடு சம்பந்தப்பட்டவனது தசையில் சதுர்த்தஸ்தானாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

சதுர்த்தஸ்தானாதிபதியினது பார்வைபெற்றவன் தசையில் தசமாதிபதியினது பார்வைபெற்றவனது புக்தி.

தசமாதிபதியினதுபார்வைபெற்றவனது தசையில் சதுர்த்த ஸ்தானுதிபதியினது பார்வைபெற்றவன் புக்தி.

பஞ்சமஸ்தானுதிபதியினது தசையில் பாக்கியாதிபதியினது புக்தி.

பாக்கியாதிபதியினது தசையில் பஞ்சமஸ்தானுதிபதியினது புக்தி.

பஞ்சமஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் பாக்கியஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

பாக்கியஸ்தானத்திலிருக்கிறவன் தசையில்பஞ்சமஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

பஞ்சமஸ்தானுதிபதியோடுசம்பந்தப்பட்டவன் தசையில்பாக்கியாதிபதி சம்பந்தப்பட்டவன் புக்தி.

பாக்கிய ஸ்தானுதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் பஞ்சம ஸ்தானுதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

பஞ்சமஸ்தானுதிபதியினுல் பார்வைபெற்றவன் தசையில் பாக்கியஸ்தானுதிபதியினுல் புக்தி.

பாக்கியஸ்தானுதிபதியினுல் பார்வைபெற்றவன் தசையில் பஞ்சமஸ்தானுதிபதியினுல் பார்வைபெற்றவன் புக்தி.

சஷ்டமாதிபன் தசையில் அஷ்டமாதிபனது புக்தி.

அஷ்டமாதிபனது தசையில் சஷ்டமாதிபனது புக்தி

சஷ்டம ஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் அஷ்ட ஸ்தானத்திலிருக்கிறவன் புக்தி.

அஷ்டமஸ்தானத்திலிருக்கிறவன் தசையில் அஷ்டமத்தானத்திலிருக்கிறவன் புக்தி.

சஷ்டமாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில்அஷ்டமாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

அஷ்டமாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் தசையில் சஷ்டமாதிபதியோடு சம்பந்தப்பட்டவன் புக்தி.

சஷ்டமாதிபதியினுல் பார்வைபெற்றவன் தசையில் அஷ்டமாதிபதியினுல் பார்வைபெற்றவன் புக்தி.

அஷ்டமாதிபதியினுல் பார்வைபெற்றவன் தசையில் சஷ்டமாதிபதியினுல் பார்வைபெற்றவன் புக்தி.

## அரிஷ்ட தோஷங்கள்

(1) லக்னத்தில் சனியும் 4-ஆமிடத்தில் செவ்வாயும் 7-ம் இடத்தில் சூரியனும்இருந்தாலும்,(2)லக்கினத்தில்இராகுகேதுக் களும் 4-ல் செவ்வாயும் 7-ல் சூரியனும் இருந்தாலும், (3) லக்கி னத்தில் அல்லது 7-8-12-ஆமிடங்களிலாவது அமரபட்சத்துச் சந்திரன் பாவிகளுடன் கூடியிருந்தாலும், (4) லக்கினத்துக்கு 7ஆமிடத்தில் செவ்வாயும் 8-ஆமிடத்தில்சூரியனும் இருந்தாலும் (5) லக்கினத்தில் சூரியன் சனி கூடியிருக்க செவ்வாய் பார்த்தா லும் (6) லக்கினத்துக்கு 7-ஆமிடத்தில்செவ்வாய் சுக்கிரன் சனி இருந்தாலும் (7) லக்கினத்துக்கு 7-8 ஆமிடங்களில் செவ்வாய் சனி யிருந்தாலும்,(8) லக்கினத்துக்கு4-ஆமிடத்தில்செவ்வாயும் 8-மிடத்தில் இராகுவும் 12மிடத்தில்சனியும்இருந்தாலும் (9) லக் கினத்துக்கு 8-9-12-மிடங்களில் சூரியன் க்ஷீண சந்திரன் செவ் வாய் சனி யிருந்தாலும் (10) லக்கினத்துக்கு 4-8 ஆமிடங்களில் பாபக்கிரகங்களிருந்தாலும், (11) லக்கினத்துக்கு 5-8-9-12ஆம் இடங்கல் சூரியன் அமர பட்சத்து சந்திரன் இவர்கள் அந்த இராசிகளில் கூடியாவது தனித்தனியாகவாவது இருந்தாலும், (12)லக்கினத்துக்கு 6-7-8-12மிடங்களில் க்ஷீணசந்திரன்பாவர் களுடன் கூடி யிருந்தாலும், (13) லக்கினத்துக்கு 5ல் 10ல் சனி யிருந்தாலும் சிசுவுக்கு அரிஷ்டம்.

(1)லக்கினத்துக்கு 6-ஆமிடத்தில் சந்திரனும்அதற்கு7-ஆ மிடத்தில் செவ்வாய் சனி இருந்தாலும் (2) லக்கினத்தில் சந்திர னும் அதற்கு 4-7-8-ஆமிடங்களில் பாவிகளும் இருந்தாலும் (3) லக்கினத்துக்கு இருபுறமும் பாவிகளிருந்தாலும் தாய்க்கும் சிசுவுக்கும் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு 6-ஆமிடத்தில் சூரியனிருக்க அதற்கு 7-ஆ மிடத்தில் செவ்வாய் சனி யிருக்க பிதாவுக்கும் சிசுவுக்கும் அரிஷ் டம்.

(1) லக்கினத்துக்கு 5 அல்லது 10 ஆமிடத்தில் சந்திரன் இருந்தாலும், (2) சந்திரனின்ற இராசிக்கு 7-ஆமிடத்தில் செவ் வாய் அல்லது சனி இருந்தாலும் பார்த்தாலும் மாதாவுக்கு அரிஷ் டம்.

(1) லக்கினத்துக்கு 5 அல்லது 10 ஆமிடத்தில் சூரியன் இருந்தாலும் (2) சூரியனின்ற இராசிக்கு 7-ஆமிடத்தில் செவ்

வாய் அல்லது சனி இருந்தாலும் பார்த்தாலும் (3) லக்கினத்துக்கு 9-ஆமிடத்தில் இராகு கேதுக்களிருந்தாலும் (4) லக்கினத்துக்கு 9 11 ஆமிடங்களில் சனி செவ்வாயிருந்தாலும் பிதாவுக்கு அரிஷ்டம்.

இலக்கினத்துக்கு 3-ஆமிடத்தில் செவ்வாயிருக்க சகோதர அரிஷ்டம்.

இலக்கினத்துக்கு 5 அல்லது 10 - ஆமிடத்தில் செவ்வாயிருக்க அம்மானுக்கு அரிஷ்டம்.

அன்றியும் சந்திர இலக்கினத்திலும் ஜெனன இலக்கினத்திலும் அசுப கிரகங்களிருந்தாலும் சிசுவுக்கு அரிஷ்டம்.

மேற்கண்ட அரிஷ்ட தோஷங்கள் சுபக்கிரகம் இருக்கப் பார்க்க நீங்கும்.

### அரிஷ்டபாகம் 5-க்கு விபரம்

1 வயது முதல் 12 வயது வரையில் பாலாரிஷ்டம்

13 வயது முதல் 20 வயது வரையில் யௌவன அரிஷ்டம்

21 வயது முதல் 32 வயது வரையில் கௌமார அரிஷ்டம்

33 வயது முதல் 70 வயது வரையில் விருத்தாரிஷ்டம்

71 வயது முதல் 120 வயது வரையில் பூரண ஆயுசு.

---

### உத்தம மத்திம அற்ப ஆயுசுக்கு விபரம்

1 வயது முதல் 32 வயது வரையில் அற்பாயுசு.

33 வயது முதல் 60 வயது வரையில் மத்திம ஆயுசு.

61 முதல் 120 வயது வரையில் உத்தமம் அல்லது தீர்க்காயுசு.

### ஆயுள்

இலக்கினாதிபதி, அஷ்டமாதிபதி, தசமாதிபதி இம்மூவரும் பெலம் பெற்றிருந்தால் (நவக்கிரக தசாவுக்கு 120) ஆகிய உத்தம வயதும், இருவர் பெலம் பெற்றிருந்தால் அதில் பாதி 60 ஆகிய மத்திம வயதும், ஒருவர் பெலம் பெற்றிருந்தால் அதில் பாதி 32 ஆகிய அதமவயதும், மூவரும் பெலனீனராகில் 12-க்குள்ளே அதமாதம வயது மாகும்.

இலக்கினதிபதி சரராசியிலிருக்க அஷ்டமாதிபதியும் சரராசி யிலிருந்தால் தீர்க்காயுசு.

இலக்கினதிபதி சரராசியிலிருக்க அஷ்டமாதிபதி திரராசியி லிருந்தால் மத்திம ஆயுசு.

இலக்கினதிபதி சரராசியிலிருக்க அஷ்டமாதிபதி உபய ராசியிலிருந்தால் அற்பாயுசு.

இலக்கினதிபதி திரராசியிலிருக்க அஷ்டமாதிபதி உபராசியி லிருந்தால் தீர்க்காயுசு.

இலக்கினதிபதி திரராசியிலிருக்க அஷ்டமாதிபதி சரராசியி லிருந்தால் மத்திம ஆயுசு.

இலக்கினதிபதி திரராசியிலிருக்க அஷ்டமாதிபதி திரராசியி லிருந்தால் அற்பாயுசு.

இலக்கினதிபதி உபயராசியிலிருக்க அஷ்டமாதிபதி திரராசி யிலிருந்தால் தீர்க்காயுசு.

இலக்கினதிபதி உபயராசியிலிருக்க அஷ்டமாதிபதி உபய ராசியிலிருந்தால் மத்திம ஆயுசு.

இலக்கினதிபதி உபயராசியிலிருக்க அஷ்டமாதிபதி சரராசி யிலிருந்தால் அற்பாயுசு.

இலக்கினதிபதி பலவானுயிருக்க 6-8-12 இந்த இடங்களில் பாபிகளிருக்க திரிகோணங்களில் சுபர்களிருக்க தீர்க்காயுசு.

இலக்கினதிபதி திரிகோண கேந்திரங்களிலிருக்க மித்துரு கிரகங்கள் பார்க்க ஆயுசுகாரகனுகிய சனிபலக்க ஆயுசுவிர்த்தி.

---

## யோகபாக முதலியவை

கேந்திராதிபதியும் திரிகோணுதிபதியும் 3-6-8-11-ம் இடங் களுக்குரிய அதிபதிகளுடன் கூடாமல் தங்கள் தங்கள் சம்பந்த மான வேருேரிடத்து ஆதிபத்திய தோஷமில்லாமல் இருவரும் கூடி யிருந்தாலும், ஒருவரையொருவர் பார்த்தாலும், ஒருவர் வீட்டில் ஒருவரிருந்தாலும் அதிக சுபபலனைக் கொடுப்பார்கள்.

பாபிகள் 3-6-8-12ல் இருந்தாலும் அல்லது பாபிகள் சுபாசு சம்பந்தம் அல்லது பார்வையுடையவர்களாய் 3-6-8-ல் மித்துரு

இராசிகளில் அல்லது கேந்திரங்களி லிருந்தாலும் சுபபலனைத் தருவார்கள்.

இராகு கேதுக்கள் கேந்திரத்திலிருந்தால் திரிகோணாதிபதியுடனும் திரிகோணத்திலிருந்தால் கேந்திராதிபதியுடனும் சம்பந்த முற்றுராகிற் பிரபல யோகத்தைக் கொடுப்பார்கள்.

தருமாதிபதியும், கருமாதிபதியும் ஒரே இராசியில் சேர்ந்தாலும் ஒருவரையொருவர் பார்த்தாலும் தங்கள் இராசிகளில் மாறியிருந்தாலும் மேலான யோக பலனைக் கொடுப்பார்கள்.

பூர்வபட்சத்து சந்திரனும் வியாழனும் 4 ம் 10 ம் ஆக மீனம் இடபம், தனுசு, கும்பம் இந்த இராசிகளிலிருக்கிலும் இலக்கினம் மித்துருராசிகளில் பூர்வபட்சத்துச் சந்திரனும் சந்திரனுக்கு 4-7-10-ல் மித்துருராசிகளில் வியாழனும் சுக்கிரனுமிருந்தாலும் ஆயுசு பரியந்தம் மேலான யோகத்தைக் கொடுப்பார்கள்.

தருமாதிபதியும் கருமாதிபதியும் 3-6-8-11 க்கு அதிபர்களுடன் சேராதிருந்தால் சுப பலனைத் தருவார்கள்.

பூர்வபட்சத்துச் சந்திரன் மித்திர ராசியிலிருந்து வியாழன் சந்திரனுக்கு கேந்திரத்திலிருந்தால் ஜாதகன் சுகவானுயிருப்பான்.

இலக்கினத்தில் சுபக்கிரகம் இருக்கப் பார்க்க சுகவானும்.

இலக்கினமுதல் நாலுகேந்திரங்களில் சுபக்கிரகங்கள் சந்திரனுடனிருந்தால் யோகவானுயிருப்பான்.

பாபர் சம்பந்தமில்லாமல் சுபக்கிரகங்கள் நட்பு இராசிகளிலிருந்தால் யோகவான்.

இலக்கினுதிபதி உச்ச சொக்ஷேத்திர மித்துரு இராசிகளிலிருக்க 4–10க்குடையவர்கள் அல்லது 4–11–க்குடையவர்கள் தங்கள் இராசிகளில் மாறியிருந்தாலும் யோகவான்.

சுபக்கிரகங்கள் உச்சஸ்தானங்களிலிருந்து ஒருவருக்கொருவர் பாராதிருந்தால் யோகவான்.

வியாழனும் பூர்வபட்சத்துச்சந்திரனுக்கடக இராசியில் ஆதிபத்திய தோஷமில்லாமல் கூடியிருந்தால் யோகவான்.

பூர்வபட்சத்துச் சந்திரனுக்கு ஏழாமிடத்தில் செவ்வாயிருக்க சுபக்கிரகங்கள் உச்சசொக்ஷேத்திர மித்துரு ராசிகளிருக்கப் பாபிகள் சேராமலும் பாராமலுமிருக்க யோகவான்.

இலக்கினத்துக்கு 2-4-5-9-10-11-க் குடையவர்களு இலக்கினாதிபதியும் உச்சம் சொக்ஷேத்திரம் கேந்திரம் தி கோணம் மித்துரு இராசிகளிலிருந்து சுபாள் பார்வை அல்ல சேர்க்கையுண்டானால் யோகவான்.

இலக்கினம் மித்துரு இராசியாய் வியாழனிருக்க பூர்வப சத்து சந்திரன் பார்க்க அல்லது சந்திரனுக்கு கேந்திரத்தி வியாழனிருக்க யோகவான்.

இலக்கினமும் சந்திரலக்கினமும் ஒன்றாகி இலக்கினாதிப சுபக்கிரகமாயிருந்து லாபஸ்தானத்திலிருக்க இலக்கினாதிபதி கிருபுறமும் சுபக்கிரகங்கள் நட்பு ஆட்சியாயிருக்கில்யோகவான்

திரிகோணாதிபதிகள் திரிகோண ஸ்தானங்களில் சுபர்சகி மாயிருக்க அல்லது சுபக்கிரகங்கள் பார்க்க திரிகோணாதிபதி கிருபுறமும் சுபக்கிரகங்களிருக்க யோகவான்.

திரிகோணாதிபதியும் கேந்திராதிபதியும் ஒருவராகி நிறைந்து திரமாயிருக்கப்பட்ட யோகபலனைக் கொடுப்பா அவர் மற்றொரு திரிகோணாதிபதியுடன் சம்பந்தமுற்றால் மேலா ராஜயோகத்தைக் கொடுப்பார்.

சுபக்கிரகங்கள் கேந்திர திரிகோண லாபத்திலிருந்தாலு திரிகோண கேந்திராதிபர்களுடன் சேர்ந்தாலும் சந்திரனுக் கேந்திர திரிகோணத்திலிருந்தாலும் யோகத்தைத் தருவார்கள் பாபிகள் மாரகாதிபர்களுடன் சேர்ந்தாலும் பார்க்கப்பட்டாலு கஷ்ட பலனைத் தருவார்கள்.

தருமகருமாதிபதிகள் அட்டம இலாபாதிபதிகளாயிருந்த லும் அட்டம இலாபாதிபதிகளுடைய சம்பந்தம் வந்தாலும் சு பலனைக் கொடார்கள்.

வியாழன் சுக்கிரன் இவ்விருவரும் உபயகேந்திராதிபதிகள னால் பலமான தோஷமுண்டு. இவர்கள் உச்சம் சொக்ஷேத்திர திரிகோணம் அல்லது மித்துரு இராசியிலிருந்தால் மத்திம பலனை யும் 3-6-8-12-ஆம் இராசிகளிலிருந்தால் அதிக கஷ்டபலனையு தருவார்கள்.

வியாழனிருந்த இராசிக்கு 1-6-8-12-ஆம் இராசிகளில் சந்தி ரன் நின்றால் சகடயோகம் அதாவது சிலகாலம் சுகமும் சில காலம் நஷ்டமுமாக இருக்கும்.

இலக்கிஞதிபதி சுபக்ஷேத்திரங்களிலிருக்க சுபக்கிரகங்கள் சேர அல்லது பார்க்க ஆயுள் விர்த்தியுடன் கீர்த்திமானுகவும் சுகவானுகவுமிருப்பான்.

இலக்கினத்துக்கு 1-2-4-9-11-க்குடையவர்கள் கேந்திரங் களில் சுபர்சகிதமாக விருந்தால் வெகு தனவான்.

இலக்கினத்துக்கு இரண்டாம் ராசிக்கதிபன் சுபக்ஷேத்திரங் களில் மித்திராள் சேர்க்கை யல்லது பார்வையுண்டாஞல் வித்தையுடையவனுய் ஆயுள்பரியந்தம் சுகஜீவியாயும் பாக்கிய வானுகவு மிருப்பான்.

பாக்கியாதிபதியும் நாலாமிடத்துக்குடையவனும் கேந்திர திரிகோணங்களிலிருக்க சுபக்கிரகங்கள் சேர பார்க்க வாகனம் பூமி சம்பத்துடையவனுயிருப்பான்.

விரயஸ்தானமாகிய பன்னிரெண்டில் சுபக்கிரகங்களிருக்க அல்லது பார்க்க சத்கருமங்களில் செலவும் சயனசுகமுமாம். பாபக்கிரகங்கள் இருக்கப்பார்க்க துற்கருமங்களில் செலவு செய் வான்.

## சகோதரபாவம்

மூன்ருமிடத்துக்குடையவனும் சகோதரகாரகனுகியசெவ்வா யும் உச்சம் சொட்சேத்திரம் கேந்திரம் திரிகோணம் மித்துரு ராசிகளிலிருக்க மூன்ருமிடத்தைப் பாபரன்றி சுபாள் பார்க்க சகோதர முண்டு.

## களத்திரபாவம்

ஏழாமிடத்தில் பாபிகள் இல்லாமலும் பாராமலும் ஏழாமிடத் துக் குடையவன் சுபக்ஷேத்திரங்களில் மித்துருக்களுடன் சேர்ந் தும் மித்துருக்களால் பார்க்கப்பட்டும் ஏழாமிடத்திற் கிருபுறமும் சுபர்களிருக்க சரராசியாயிருந்தாலும் களத்திரகாரகனுகிய சுக்கி ரன் பலவானுயிருக்க களத்திர தோஷமில்லை.

ஏழாமிடத்துக்குடையவனும் சுக்கிரனும் பாபக்ஷேத்திரங்க ளில் பாபக்கிரகங்களுடன் சேர்ந்தாலும் பார்க்கப்பட்டாலும்களத் திர தோஷம்.

ஏழாமிடத்தில் சூரியனிருந்தால் மலடியைச் சேருவான்.
,, சந்திரனிருந்தால் சங்கீதப்பெண்ணைச் சேருவான்.
,, செவ்வாயிருந்தால்க்ஷத்திரியப்பெண்ணைச்சேருவான்
,, புதனிருந்தால் வேசியைச் சேருவான்.

ஏழாமிடத்தில் வியாழனிருந்தால் பிராமணப் பெண்ணைச் சே
வான்.
ஏழாமிடத்தில் சுக்கிரனிருந்தால் கர்ப்பஸ்திரீயைச் சேருவான்.
,, சனியிருந்தால் விதவையைச் சேருவான்.
,, இராகு கேதுவிருந்தால் தூர ஸ்திரீயைச் சேருவான்.
சுக்கிரனுடன் புதன் சேர்ந்தால் தாசியைச் சேருவான்.
சுக்கிரனுடன் சனி சேர்ந்தால் விதவையைச் சேருவான்.
சுக்கிரன் நீசனுய் ஏழாமிடத்திலிருந்தால் தன்வயதுக்கு மூ
வளைச் சேருவான்.
ஏழாமிடத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் தோஷமில்லை.

---

### செவ்வாய் தோஷம்

ஜென்ம இலக்கினம், சந்திரலக்கினம், சுக்கிரலக்கினம் இ
மூன்றுக்கும்2-4-7-8-12 இத்த ஸ்தானங்களில் செவ்வாய் புரு
ஷுடைய ஜாதகத்திலிருக்கில் பெண்சாதி வியோகமாவா
பெண்சாதியினுடைய சாதகத்திலிப்படி இருக்கில் புருஷ
இறந்து விதவையாவாள். இருவருக்கும் இப்படியிருந்தாலும் இ
லாவிட்டாலும் நல்லதேயாம்.

---

### புத்திரபாவம்

ஐந்தாமிடத்துக்குடையவன் பாபர் சம்பந்தமின்றி சுபக்ஷே
திரத்திலிருக்க, ஐந்தாமிடத்தில் பாபரன்றி சுபாளிருக்கப் பார்
புத்திர காரகனுகிய வியாழன் சுபக்ஷேத்திரங்களில் சுபாள்
பந்தம் பெற்று பலவானுயிருக்க புத்திரருண்டு.

---

### இருப்பிடம்

ஜென்மலக்கினம் சரமாகில் பிரதேசவாசம், திரமாகில்சுதே
வாசம், உபயமாகில் பிரதேசத்தில் சிலகாலமும் சுதேசத்தில்
காலமும் வாசமாம்.

அன்றியும் வேறுசில நூல்களில் இலக்கினுதிபதி சரராசி
லிருந்தால் பிரதேசவாசம், திரராசியிலிருந்தால் சுதேசவாச
உபய ராசியிலிருந்தால் பிரதேசத்தில் சிலகாலமும் சுதேசத்தி
சிலகாலமும் வாசஞ்செய்வானென்றுங் கூறுகின்றன.

---

மரிப்பிடம்

சனி சரராசியிலிருக்க அன்னிய தேசத்தில் மரணம். ஸ்திர ராசியிலிருக்க தன் வீட்டில் மரணம்.

உபயராசியிலிருந்தால் நூதன விட்டில் மரணம்.

---

நவக்கிரக திசாபுக்தி

இதனடியிற் கண்டபடி நவக்கிரக திசை வருஷங்களின் மொத்த தொகையாகிய 120 மானிடர்களுடைய சம்பூரணமான வயதாம்.

திசாபுக்தி பார்ப்பதற்கு சூரியன் ஆதியாகவும்சுக்கிரன் அந்தமாகவும் கொள்ள வேண்டியது. இதனடியிற் கண்ட திரிகோண நட்சத்திரங்களில் ஒவ்வொருவருடைய ஜென்ம நட்சத்திரம்எது வாகுமோ அதற்கு எதிரே கண்டிருக்கிற கிரகதிசையே அவரவருடைய ஜென்ம காலத்தின் திசையாம்.

மூன்று நட்சத்திரங்கள் ஒன்றுக்கொன்று பத்தாவது நட்சத்திரமாக வருவதே ஒன்றுக்கொன்று கோணமாகும். அம்மூன்றும் ஒரே கிரகத்துக்குரிய திரிகோண நட்சத்திரங்களென்று காண்க.

| கிரக நட்சத்திரங்கள் | கிரகதிசை | திசைவருடம் | |
|---|---|---|---|
| அசிவனி, மகம் மூலம் | கேதுதிசை | வருடம் | 7 |
| பரணி, பூரம், பூராடம் | சுக்கிரதிசை | ,, | 20 |
| கார்த்திகை, உத்திரம், உத்திராடம் | சூரியதிசை | ,, | 6 |
| ரோகணி, அஸ்தம், திருவோணம் | சந்திரதிசை | ,, | 10 |
| மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் | செவ்வாய்திசை | ,, | 7 |
| திருவாதிரை, சுவாதி, சதயம் | இராகுதிசை | ,, | 18 |
| புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | வியாழதிசை | ,, | 16 |
| பூசம், அனுஷம், உத்திரட்டாதி | சனிதிசை | ,, | 19 |
| ஆயில்யம், கேட்டை, ரேவதி | புதன்திசை | ,, | 17 |
| | | ஆக மொத்தம் வருடம் | 120 |

சுவை 6, வாயு 10, சமுத்திரம் 7, புராணம் 18, சந்திரகலை 16, ஸ்மிருதி 19, பெயர்விகுதி 17, புயல் 7, இராவணேசுரன் கை 20 இவையேவரிசைக்கிரமமாகசூரியன் ஆதியாகசுக்கிரன் அந்தமாகவுள்ள நவக்கிரகங்களுக்கு திசை வருஷக்கணக்காம்.

ஒரு குழந்தை பிறந்த காலத்தில் எந்த திசை ஆரம்ப யிற்ரே அந்த திசைக்குரிய வருஷத்தொகையில் கெற்பத் செல்லுபோக பாக்கி இவ்வளவென்றறிய வேண்டிய விப ஜென்ம நட்சத்திரம் குழந்தை ஜெனனமான தேதியிலாவ அதற்கு முன் தேதியிலாவது எப்போதும் ஆரம்பித்து, ஜென மான தேதியிலாவது அதற்கு மறு தேதியிலாவது எதுவரை மிருக்கிறதோ வென்று பஞ்சாங்கத்தைப் பார்த்துஒன்றுசேர்க் பட்ட மொத்த நாழிகை விகடிகையே அந்த நக்ஷத்திரத்துக் ஆதியந்தம் என்று பேராம்,அந்த ஆதியந்த நாழிகை விகடி பேருக்கு அந்த நட்சத்திரத்துக்குரிய திசை வருஷத்தைப் கிட்டு நாழிகை ஒன்றுக்கு இவ்வளவு வருஷம், மாதம், நா நாழிகை, விகடிகையென்று தெரிந்துகொள்ள வேண்டும். இ ஜெனன காலம்வரையில் ஷெநட்சத்திரத்தில்செல்லானநாழி யினுல் பெருக்கி வந்து எவ்வளவு வருஷம், மாதம் முதலிய யறிந்து அதை கெற்பச்செல்லாக வைத்துக்கொண்டும், அ திசையின் மொத்த வருஷத்தில் கழித்து வந்த மிச்சமானது வ ஷம் மாசம் முதலியவை அந்த திசையில் பாக்கியாயிருந்தகால என்றும் அதற்குமேல் முன்கூறிய கிரமப்படிக்குள்ள திசைக யும் வயசுகளையுங் காணுவதே திசையாகும். ஒருவருக்கு ஜென காலத்தில் திசை செவ்வாயானுல்அதற்கடுத்ததிசைகள் இரா வியாழன்,சனி,புதன்,கேது,சுக்கிரன்,சூரியன், சந்திரன் என் வரிசையா யறியவேண்டும்.மேற்சொல்லியபடிகெற்பத்தில் செ லானது போக பாக்கி யறிவதற்கு கணக்கு விபரம். ஜெனன ந சத்திரத்தி னுதியந்த நாழிகைத் தொகையில் ஜனனம்வ சென்றநாழிகைக்கும்அந்தநட்சத்திரத்தின்கிரகதிசை வுடத் கும்பெருக்கி ஆதியந்த நாழிகைத் தொகைக்குக் கொடுக்க வ வுடமீ த்தை 12-ல் பெருக்கி முன்போல் கொடுக்க வந்தது மாசத்தை 30-ல் பெருக்கி முன்போல் கொடுக்க வந்தது நா மாசத்தை 60-ல் பெருக்கி முன்போல்கொடுக்க வந்தது நாழி மாசத்தை 60-ல் பெருக்கி முன்போல் கொடுக்க வந்தது விநா யாம்.

ஒவ்வொரு கிரகத்தின் தசையில் அந்தக் கிரக முதலிய நவ கிரகங்களும் பலனைப் பகுந்துண்ண வந்திருக்கும் உட்பிரிவ ளாவன. ஒவ்வொரு திசைக்கும் ஒன்பது புத்திகளென்றும், புத் யொன்றுக்கு ஒன்பது அந்தரமென்றும், அந்தரம் ஒன்றுக்கு ஒ பது சூக்ஷமாந்தர மென்றும் சூக்ஷமாந்தரமொன்றுக்கு ஒன்ப பிராண பிரிவுகளென்றும் வரும்.

புக்திக்கு அபகாரமென்றும் அந்தரத்துக்குச் சித்திரமென்றும் பெயராம்.

---

## கிரகாதிபருடைய மகாதசையில் அபசாரம் சித்திரம் க்ஷேமம் பிராணன் இவற்றையறியும் முறைமை கூறுகின்றது

ஒவ்வொரு திசாநாதனுடைய மகாதிசை வருஷத்தையும் மகாதிசையின் மொத்த வருஷத் தொகையாகிய 120-க்குக் கொடுத்துக் கண்டஈவு அந்தந்த திசைக்கும் அபகாரத்துருவமாம், ஒரு திசையில் வந்த அபகாரத்துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருஷத்திற் பெருக்கிக் கண்டதொகை அந்த திசையில் அவனவனுடைய அபகாரகாலமாகும்.

ஒவ்வொருவனுடைய அபகாரகாலத்தையும் 120-க்குக் கொடுத்துக் கண்டஈவு அவனவன் அபகாரத்துக்கும் சித்திரத் துருவமாம். ஒருவனுடைய அபகாரத்தில் வந்த சித்திரத்துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதசை வருஷத்திற் பெருக்கிக் கண்ட தொகை அந்த அபகாரத்தில் அவனவனுடைய சித்திர காலமாம்.

ஒவ்வொருவனுடைய சித்திரகாலத்திறத்தையும் 150-க்குக் கொடுத்துக் கண்டஈவு அவனவனுடைய சித்திரகாலத்துக்கும் சூக்ஷமத் துருவமாம். ஒருவனுடைய சித்திரத்துக்குவந்த சூக்ஷமத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருஷத்திற் பெருக்கிக் கண்ட தொகை அந்தச் சித்திரத்தில் அவனவனுடைய சூக்ஷ்ம காலமாம்.

ஒவ்வொருவனுடைய சூக்ஷ்மகாலத்தையும் 120-க்குக் கொடுத்துக் கண்டஈவு அவனவனுடைய சூக்ஷ்மத்துக்கும் பிராணத்துருவமாம். ஒருவனுடைய சூக்ஷமத்துக்குவந்த பிராணத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருஷத்திற் பெருக்கிக் கண்ட தொகை அந்த சூக்ஷ்மத்தில் அவனவனுடைய பிராணகாலமாம்.

சூரியன் இலக்கினத்துக்கு 3-6-10 இந்த ஸ்தானங்களிலும் சந்திரன் இலக்கினத்துக்கு 1-6-7-10 இந்த ஸ்தானங்களிலும் செவ்வாய் இலக்கினத்துக்கு 3-6 ஸ்தானங்களிலும் இராகு இலக்கினத்துக்கு 3-6 இந்த ஸ்தானங்களிலும் வியாழன் இலக்கினத்துக்கு 2-5-7-9 இந்த ஸ்தானங்களிலும் சனி இலக்கினத்துக்கு

3-6 இந்த ஸ்தானங்களிலும் புதன் இலக்கினத்துக்கு 2-8-10-11 இந்த ஸ்தானங்களிலும் கேது இலக்கினத்துக்கு 3-6 இந்த ஸ்தானங்களிலும் சுக்கிரன் இலக்கினத்துக்கு 1-2-3-4-5-8-9-11-12 இந்த ஸ்தானங்களிலுமிருந்தால் அவரவர்கள் திசையில் பொதுவாய் சுபபலன்களுண்டாம்.

சூரிய திசையில் சந்திரன் செவ்வாய் வியாழன் இவர்களுடைய புக்திகளும், சந்திரதிசையில் சூரியன் வியாழன் இவர்களுடைய புக்திகளும், செவ்வாய் திசையில் சூரியன் சந்திரன் வியாழன் இவர்களுடைய புக்திகளும், இராகு திசையில் செவ்வாய் வியாழன் இவர்களுடைய புக்திகளும், வியாழ திசையில் சூரியன் சந்திரன் செவ்வாய் இவர்களுடைய புத்திகளும், புதன் திசையில் சனி சுக்கிரன் இவர்களுடைய புக்திகளும், கேது திசையில் சுக்கிரன் சனி இவர்களுடைய புக்திகளும், சுக்கிரன் திசையில் புதன் சனி இவர்களுடைய புக்திகளும் பொதுவாய் நல்ல பலன்களாம்.

---

### சுக்கிரன் சனி பலன்

சுக்கிரன் தன்னுடைய திசையில் சனியினுடைய புத்தியில் தான் கொடுக்கவேண்டிய சுபம் அல்லது அசுபபலன்களைவிசேஷமாய்க் கொடுப்பான். சனியும் தன்னுடைய திசையில்தான் கொடுக்கவேண்டிய சுபம் அல்லது அசுபபலனை சுக்கிரனுடைய புக்தியில் விசேஷமாய்க் கொடுப்பான்.

### கிரகங்கள் தங்கள் திசைகளில் நற்பலன் கொடுக்கும் காலம்

சூரியனும் செவ்வாயும் முன்பங்கிலும், வியாழனும் சுக்கிரனும் நடுப்பங்கிலும், சந்திரனும் சனியும் கடைப்பங்கிலும், புதன் ராகு கேது சுய அந்தரத்துக்குமேலும் யோகபலன்களை கொடுக்கவேண்டிய காலங்களாம். இவர்கள் சுயபுக்தி ஆரம்பத்தில் விசேஷமான யோகபலன்களைத் தருவார்களானுல் தங்கள் திசை முழுவதிலும் நல்ல பலன்களைத் தரமாட்டார்களாம்.

சரராசிக்கு 11-ஆமிடத்துக் குடையவன் சுபபலனைக் கொடான். திரராசிக்கு 9-ஆடத்துக் குடையவன் சுபபலனைக் கொடான். உபயராசிக்கு 7-ஆமிடத்துக்குடையவன்சுபபலனைக்கொடான்;ஷஷ்ஸ்தானுதிபதிகள்சுபக்ஷேத்திரங்களில்சுபர்கள் மித்துரு

இவர்களுடன் சம்பந்தம் அல்லது பார்வை பெற்றிருந்தால் சுப பலன்களைக் கொடுப்பார்கள்.

மாரகாதிபர்கள் தங்களுடைய திசைகளில் தங்களுடன் சம்பந்தம் பெற்றிருக்கிற சுபக்கிரகங்களுடன் புக்திகளில் மாரகத்தைக் கொடார்கள். தங்களுடன் சம்பந்தமில்லாதிருக்கிற பாபக் கிரகங்களுடைய புக்திகளிலே மாரகத்தைக் கொடுப்பார்கள்.

அஷ்டமாதிபதியினுடைய தசையில் மாரகாதிபர்களுடைய புக்திகளில் விரயம், பகை, பிணி நஷ்டம் முதலிய கொடிய கஷ்டபலனும், அஷ்டமாதிபதி திசையில் பிரபலயோக பலனுண்டானுல் தப்பாமல் மாரகத்தைக் கொடுப்பான்.

இலக்கினுதிபதி அஷ்டமாதிபதி. சந்திரன், சனி, இவர்கள் சேர்ந்திருந்தாலும், சனியும் இராகுவும் சேர்ந்திருந்தாலும், சனியும் இராகுவும் 4-7 இந்த இடங்களில் சேர்ந்திருந்தாலும், சூரியனுக்கு 7-ல் சனியும், சந்திரனுக்கு 7-ல் புதனும். செவ்வாய்க்கு 7-ல் சனியும், புதனுக்கு 7-ல் சந்திரனும், சனிக்கு 4-7-ல் செவ்வாயுமாக விருந்தாலும் பொதுவாய் தங்கள் திசை முழுவதும் நல்ல பலன்களைக் கொடார்கள்.

திசாநாதனுக்கு புக்திநாதன் மித்திரனுக கேந்திரம், திரிகோணம் சொக்ஷேத்திரம் உச்சம் தனலாப ஸ்தானங்களிலிருந்தால் அந்த புக்தியில் பூமி, தனம், சம்பத்து புத்திரமித்திரகளத்திர சுப சோபனங்களுண்டாம்.

புக்திநாதன் சுபர்கள் யோககாரர்களாகிய கிரகங்களுடைய சம்பந்தம் அல்லது பார்வை பெற்றிருந்தால் மேற்சொல்லிய சுப பலன்களைத் தருவான்.

புக்திநாதன் மாரகர் அல்லது யோககாரர்களுடன் சேர்ந்தாலும் பார்க்கப்பட்டாலும் அல்லது துதிகை சப்தம அதிபதியாய் 2-3-6-7-8-12-ல் இருந்தாலும் கஷ்டபலனுண்டாகும்.

சுபக்ஷேத்திராதிபதிகள் சுபக்ஷேத்திரங்களில் சுபாள்யோககாரகாளுடைய சம்பந்தம் பார்வை எவ்வளவுக்கதிகமாய் பெற்றிருக்கிருர்களோ அவ்வளவுக்கவ்வளவுஅந்த சுபக்ஷேத்திரத்துக்குரிய சுபபலன்களை அவர்களுடைய திசாபுக்தி முதலிய காலங்களில் விசேஷமாய்க் கொடுப்பார்கள். பாபக்ஷேத்திரங்களில் பாபிகள் மாரகாளுடைய சம்பந்தம் பார்வை எவ்வளவு பெற்றிருக்கிருர்களோ அதற்குத் தக்கபடி சுபபலன்கள் குறைந்து பாப பலனுண்டாம்,

பாபிகள் மித்திரராசியில் சுபாள் யோககாரகாளுடைய சம்பந்தம் அல்லது பார்வை பெற்றிருந்தால் அதற்குத் தக்க சுப பலன்களையும், மாரகாள் அல்லது பாபிகளுடைய சம்பந்தம் அல்லது பார்வை பெற்றிருந்தால் அதற்குத் தக்க கெட்ட பலன்களும் தருவார்கள்.

இலக்கினத்துக்கு 10-க்குடையவன் திசையில் 9-க்குடைய புக்தியிலும் 9-க்குடையவன் திசையில் 10-க்குடையவன் புக்தியிலும் ஒருவருக்கொருவர் மேலான யோகத்தைத் தருவார்கள்.

பாபிகள் மாரகாள் இவர்களுடன் சம்பந்தப்படாமல் கேந்திரம் திரிகோணம் முதலிய சுபக்ஷேத்திரத்திலிருக்கின்ற இராகு கேதுக்கள் தங்களுடைய தசாபுக்திகாலங்களில் மேலானயோகத்தைத் தருவார்கள்.

திசாபுக்திகாலங்களில் கோட்சாரத்தையும் அனுசரித்துபலன்கள் பார்க்கவேண்டியது. கோட்சாரரீதியாய் வியாழன்சனி நல்ல ஸ்தானங்களிலிருந்தால் தசாபுக்திக்குரிய நல்ல பலன்கள் பிரபலமாயிருக்கும். கோசாரரீதியாய் அவர்கள் கெட்ட ஸ்தானங்களிலிருந்தால் திசாபுக்தி காலத்தில் அதற்குரிய நல்ல பலன்கள் மத்திம பலனுகும்.

---

## போதகன், வேதகன், பாசகன், காரகன் என்பது

இராகுகேதுக்கள் தவிர மற்ற ஒவ்வொரு கிரகத்தின் திசையில் வரும் புக்திக்கிரகங்களில் தனது பாகப்பலனைக் கொடுக்கச் செய்யும் கிரகம் போதகனென்றும், அப் பாகப்பலனை மாறுபடுத்தும் கிரகம் வேதகனென்றும், தேறிய பலனை கிடைக்கச் செய்யுங் கிரகம் பாசகனென்றும் சம்பாதித்த பொருளைப் பெறச் செய்யும் கிரகம் காரகனென்றும் சொல்லப்படும்.

1. சூரியனுடைய தசையில் சனி பாசகன், சுக்கிரன் வேதகன், வியாழன் காரகன், செவ்வாய் போதகனும்.

2. சந்திரனுடைய தசையில் சுக்கிரன் பாசகன், சூரியன் வேதகன், சனி காரகன், செவ்வாய் போதகனும்.

3. செவ்வாயினுடைய தசையில் சூரியன் பாசகன், சந்திரன் போதகன், புதன் வேதகன், சனி காரகனும்.

4. புதனுடைய தசையில் சந்திரன் பாசகன், வியாழன் போதகன் செவ்வாய் வேதகன். சுக்கிரன் காரகனும்

5. வியாழனுடைய தசையில் சனி பாசகன். சூரியன்வேதகன், செவ்வாய் போதகன், சந்திரன் காரகனும்.

6. சுக்கிரனுடைய தசையில் புதன் பாசகன், வியாழன் போதகன், சனி வேதகன் சூரியன் காரகனும்.

7. சனியினுடைய தசையில் சுக்கிரன் பாசகன், சந்திரன் போதகன், சனி வேதகன், வியாழன் காரகனும்.

இவ்விதமாக நான்குபேரும் ஒவ்வொரு கிரகத்தின் திசையில் அவரவருக்குள்ள பாகபலனைப் புசிப்பர். இதை விபரந் தெரிந்து யோசித்துப் பலனைச் சொல்லில் பொருந்தி யிருக்கும்.

## உயிர் – உடல்

சூரியனுடைய ராசி சிங்கமுதல் மகரம் வரையில் ஆறும் உயிர் என்றும், மகரமுதல் சந்திரனுடைய ராசி கடகம் வரையில் ஆறும் உடல் என்றும் இவ்விருவகை ராசிகளில் சுபக்கிரக மிருக்கப் பிறந்த குழந்தைகள் சுகமாகவும், பாபக்கிரக மிருக்கப்பிறந்த குழந்தைகள் அசுகமாகவு மிருக்கும். இவ்விருவகை ராசிகளில் முன் சொன்னதை வெற்றியென்றும் பின் சொன்னதை தோல்வியென்றும் கூறப்படும்.

அன்றியும் குழந்தை பிறந்த நாழிகைக்குரிய இராசியை (ஜன்ம லக்கினம்) உயிரென்றும், குழந்தை பிறந்த நட்சத்திரத்துக்குரிய இராசியை (சந்திர லக்கினம்) உடலென்றும் சொல்லப்படும்.

---

## கோட்சாரம்

இதை ஜென்ம லக்கினத்தைக் கொண்டு பார்க்காமல் ஒவ்வொருவருடைய ஜென்ம நட்சத்திரத்துக்குரிய சந்திர லக்கினத்தை முதலாகக்கொண்டு பார்க்க வேண்டியது. கோட்சாரம் பார்க்குங் காலத்தில் ஜென்ம நட்சத்திரத்துக்குரிய சந்திர லக்கினத்துக்கு கிரகங்கள் எந்த ஸ்தானங்களில் வந்திருக்கின்றார்களென்பதை அந்தந்தக் காலத்திலுள்ள பஞ்சாங்கத்தில் கண்ட கிரகசாரங்களைக் கண்டும் இதனடியிற் கண்ட அட்டவணையில் சொல்லிய பலாபலன்களையும் தெரிந்து கொள்ளவும் வேண்டியது.

8

சந்திரலக்கின கோட்சார பலாபல அட்டவணை

| க்கிரகம் | சந்திரலக்கினத்துக்கு இன்னின்ன ஸ்தானங்களில் வந்தால் | இன்னின்ன பலன்களுண்டாம் |
|---|---|---|
| சூரியன் | (சந்திரலக்கினம்) 1–2-4-5-7-8-9-12 | எடுத்தகாரியம் முடியாது, தலைவலி, கண்வலி, சிறங்கு, வயிற்று வலி சுரம், நஷ்டம், திரிச்சல். |
| ,, | 5 ... | கொடிய தீயபலன்கள். காவல், வியாதி, நஷ்டம், சாவு, வியாச்சியம். |
| ,, | 1–3-6–10 11 ... | சரீரசுகம், லாபம், தனதான்னிய சம்பத்து முதலிய சுபபலன். |
| சந்திரன் | 1-2.4-5-6–8–12 ... | துயரம் விரயம், வியாதி, நினைத்த காரியம் முடியாது, பொல்லாப்பு |
| ,, | 8 ... | கொடிய தீய பலன்கள் காவல், வியாதி, வியாச்சியம், நஷ்டம், சாவு |
| ,, | 3-6–7-10-11 ... | சரீரசுகம், லாபம், சந்தோஷம், வாகனம், தனதான்னிய சம்பத்து, சுபபலன்கள். |
| செவ்வாய் | 1.2-4-5-6-7-8 9-10-12 ... | துயரம், நாலாவிதத்திலும் கெடுதி பொருள் விரயம், உஷ்ண ரோகங்கள். |
| ,, | 7 ... | கொடிய தீயபலன்கள், கலகம், காவல், வியாதி, நஷ்டம், வியாச்சியம், சாவு. |
| ,, | 3-6-11 ... | சரீரசுகம் சந்தோஷம், தனதானிய சம்பத்து, சுபபலன்கள். |
| புதன் | 1-3-4-6-8-10-12 ... | துயரம், தன விரயம், சண்டை வழக்கு, உஷ்ணம், வியாதி. |
| ,, | 4 ... | கொடிய தீபபலன்கள் கலகம், வியாச்சியம், நஷ்டம், சாவு. |
| ,, | 2-9 11 ... | சரீரசுகம் கல்வி, தனதானிய சம்பத்து, சுபபலன்கள். |
| வியாழன் | 1 3.4 6 8-10-12 ... | ஆலைச்சல், ஜீவன மில்லாமை பொருள் விரயம், துயரம். |
| ,, | 6-8-10-12 ... | கஷ்டபலன், நிலைபிரிவு, இடம்விட்டுப் போதல், மனவியாகூலம், பகை. |

## சந்திரலக்கின கோட்சார பலாபல அட்டவணை

| இன்னகிரகம் | சந்திரலக்கினத்துக்கு இன்னின்ன ஸ்தானங்களில் வந்தால் | இன்னின்ன பலன்களுண்டாம் |
|---|---|---|
| வியாழன் | 8 ... | கொடிய தீயபலன்கள், காவல், வியாதி. பிராணபயம் |
| ,, | 2-5-7-9-11 ... | தேகசௌக்கியம், சந்தோஷம், சம்வஸ்திரம், வாகனம், தனதானிய சம்பத்து சுபம். |
| சுக்கிரன் | 3-6-7-9 ... | துயரம் விரயம், பகை, வியாதி. |
| ,, | 6 ... | கொடிய தீய பலன்கள். |
| ,, | 1-2-4-5-8-11-12 ... | சரீரசுகம், சந்தோஷம், தனதான்னிய சம்பத்து. சுபபலன்கள். |
| சனி | 1-2-4-8-10-12 ... | துபரம் தனவிரயம. கடன், விரோதம், வியாதி, சத்துருபயம், மனக்கிலேசம். |
| ,, | 8-10 ... | இடம்விட்டுப்போதல், தனவிரயம் கடன் தண்டம், பயம் அதிக கஷ்டம். |
| ,, | 12-1 ... | கொடிய தீயபலன்கள் $7\frac{1}{2}$-நாட்டுச்சனியில் முதல் 5 வருஷத்துக்கு கொடிய கஷ்டம. |
| ,, | 3-6-9-11 ... | நினைத்தகாரியம் கைகூடுதல் சரீரசுகம் கடன் நிவர்த்தி, சந்தோஷம், உத்தியோகம், வாகனம், தனதானிய சம்பத்து, சுப பலன்கள். |
| இராகு, கேது | 1-2-8-9-12 ... | துயரம் பயம், விரோதம், பிணி விரயம் இடம்போதல், கஷ்டம். |
| ,, | 9 ... | கொடிய தீபபலன்கள். |
| ,, | 3-6-7-11 ... | சரீரசுகம், தனதான்னிய சம்பத்து, சுபபலன்கள். |

மேற்கண்ட அட்டவணையில் சுகதுக்கங்களைப்பற்றி குறிக்கப்படாதிருக்கும ஸ்தானங்களில் வந்தால் மத்திம பலன்களென்று அறியவும்.

சௌமியம் அல்லது வலவோட்டு நட்சத்திரங்களில் (அதா வது அஸ்வனி, பரணி, கார்த்திகை, புனர்பூசம், பூசம், ஆயி யம், அஸ்தம், சித்திரை, சுவாதி, மூலம், பூராடம், உத்திராடம் பூரட்டாதி உத்திரட்டாதி, ரேவதி) பிறந்தவர்களுக்குக் கோசா ரீதியாய் மேற்சொல்லிய நல்ல ஸ்தானங்களில் சூரியன், செ வாய், வியாழன், சனி முதலானவர்கள் நல்ல சுப பலன்களை கொடுப்பார்களென்றும்,

அபசௌமியம் அல்லது இடவோட்டு நட்சத்திரங்களில் (அதாவது உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, மகம், பூரம் உத்திரம், விசாகம், அனுஷம், கேட்டை, திருவோணம், அவி டம், சதயம்) பிறந்தவர்களுக்கு கோசார ரீதியாய் மேற்சொ லிய கெட்ட ஸ்தானங்களில் நல்ல சுப பலன்களைத் தருவார்க என்றும் சில நூல்கள் கூறுகின்றன.

அன்றியும் பூர்வபட்சத்தில் பிறந்தவர்களுக்கு மேற்சொ லிய நல்ல ஸ்தானங்களுக்கு கெட்ட பலன்களென்றும், அமரப சத்தில் பிறந்தவர்களுக்கு மேற்சொல்லிய கெட்ட ஸ்தான களுக்கு நல்ல பலன்களென்றும் சில நூல்கள் கூறுகின்றன.

சந்திர லக்கினத்துக்கு 8 மிடத்தில் சனி வருங் காலத்தி அஷ்டமத்துச் சனியாம் - அதிக நஷ்டம்.

சந்திர லக்கினத்துக்கு 12 ஆமிடத்தில் சனிவருங்காலத்தி ஏழரை நாட்டுச் சனி ஆரம்பம் 12-1-2 இந்தமூன்றுவிடத்தும் இ தச் சனி ஏழரை வருஷமிருந்து இடைவிடாமல் நஷ்ட பலனை கொடுப்பதினால் ஏழரை நாட்டுச் சனியனென்று பெயர். இதி முதல் 5-வருஷம் கொடூரமாகிய தீயபலன்களாம். இந்தச்சனி ச திர லக்கினத்துக்கு மூன்றும் இராசியில் பிரவேசிக்கும்பொழு கஷ்டங்கள் நீங்கிச் சுகமுண்டாகும். முப்பது வருஷத்துக் ஒருதடவையாக ஏழரை நாட்டுச்சனி வந்துகொண்டிருப்பதி முதல் தடவையில் பிதாவுக்கு சுகபலனும் ஜாதகனுக்கு கஷ் பலனுமாம். இரண்டாவது தடவையில் கொஞ்சம் கஷ்டப னும் கொஞ்சம் சுகபலனுமா யிருக்கும். மூன்ருவது தடவை குள் அல்லது மூன்ருவது தடவையில் மரணம். இரண்டாவ தடவையில் கொஞ்சம் சுகமென்று கூறியிருந்தாலும் மேஷம் கடகம், சிம்மம், விருச்சிகம், கும்பம், மீனம் இந்த ஆறு இரா களில் எதுவாவது ஜென்ம லக்கினமாகவாவது அல்லது சந்தி

லக்கினமாகவாவது இருக்கிற ஜாதகர்களுக்கு ஏழரை நாட்டுச் சனி அதிக கஷ்டபலனாயிருக்கும்.

வியாழன், சனி, சூரியன், செவ்வாய் முதலான கிரகங்கள் கெட்ட ஸ்தானங்களிலிருந்து பிணி முதலிய கஷ்டபலன்களைத் தருவாராகில் அதற்காக இதனடியிற் கண்ட கிரக தானியங்களை தக்ஷிணை தாம்பூலத்தோடு அந்த கிரகத்தினங்காலையில், ஜாதகன் பிராமணருக்குத் தானம் செய்வதன்றி விஷ்ணு சிவ ஆலயங்களில் நெய்த்தீபமும் கிரகத்துக்குகந்த புஷ்பத்தினால் அருச்சனையுஞ் செய்துவைப்பதினால் பிணி முதலிய கஷ்டங்கள் நீங்கிச் சுகமாம்.

| கிரகம் | தானியம் | புஷ்பம் |
|---|---|---|
| சூரியன் | கோதுமை | செந்தாமரை |
| சந்திரன் | பச்சரிசி | மல்லிகை |
| செவ்வாய் | துவரை | செண்பகம் |
| வியாழன் | கடலை | முல்லை |
| புதன் | பச்சைப்பயறு | வெண்காந்தள் |
| சுக்கிரன் | மொச்சை | வெண்தாமரை |
| சனி | எள் | கருங்குவளை |
| இராகு | உளுந்து | மந்தாரை |
| கேது | கொள்ளு | செவ்வரளி |

## நஷ்ட ஜாதகம்

இலக்கின திரிகோணத்தில் வியாழன் தப்பினால் இலக்கின நவாங்கிஷ திரிகோணத்தில் வியாழனை நிறுத்தி கேட்டவனுக்கு சென்ற வருஷத்தைக்கண்டு இத்தனை வருஷமென்றுசொல்லவும். இலக்கினத்தில் முன்னரையானால் உத்திராயணம், பின்னரையானால் தெக்ஷணாயணம், சூரியன் பலவானாகி லக்கினம்சூரியன் வீடானாலும், லக்கினத்தில்சூரியனிருந்தாலும், சூரியன் பலவானாயிருந்து இலக்கினத்தைப் பார்த்தாலும் ஆனி, ஆடி மாதம் சூரியனுக்கு சொல்லியபடி இருந்தாலும், செவ்வாய்க்கு ஆனி ஆடி மாதம், சந்திரனுக்கு ஆவணி புரட்டாசி, புதனுக்கு ஐப்பசி கார்த்திகை, வியாழனுக்கு மார்கழி தை, சனிக்கு மாசி பங்குனி சுக்கிரனுக்கு சித்திரை வைகாசி மாதமென்று அறிந்து இவர்களிருந்த ஒற்றை இராசிநவாம்சையானால்இரண்டில்முன்மாதம்-இரட்டை இராசி நவாம்சையானால் இரண்டில் பின்மாதம். சூரியனிருந்த

ஓரையறிந்து கண்டமாதத்தில் முன் 15 பின் 15 சொல்லவும் இலக்கினத்தில் சென்ற பாகையறிந்துதேதி சொல்லவும். கலைக்கு நாழிகை சொல்லவும். இலக்கினுதிபதி இலக்கினத்திலே பலத் திருந்தால் கண்டஅடியெல்லாம் விரலாக்கி 27ல் கழித்து நட்சத் திரம் சொல்லவும். இலக்கினம்தொட்டு சந்திரன் எத்தனையாவது இடத்திலிருக்கிருனே அதற்கத்தனையாவது இடம் இலக்கின மென்று சொல்லவும்.

---

## புத்திரபாவம்

புத்திரஸ்தானுதிபதி ஒருவனுப் புதன்வீட்டில் இருந்தால் புத்தி ரோற்பத்தி கிடையாது. பிறந்தாலும் இருக்க மாட்டாது. அந்த தோஷம் நீங்குவதற்கு புதஜபம் செய்ய வேண்டும்.

புத்திரஸ்தானுதிபதி புதனுடைய வீட்டிலிருந்தாலும் புதனுல் பார்க்கப்பட்டாலும் புதனேடு சேர்ந்திருந்தாலும் புருஷ கர்ப்பமானுல் கர்ப்பத்துக்கு ஹானி யுண்டாகும்.

மேற்சொன்னபடி புத்திரதோஷமுள்ளஜாதகனுடையகளத்திரத் திற்கு சாந்தி முகூர்த்தம் செய்தது முதல் வருஷந்தோறும் தேகம் பெருத்துக் கொண்டேவரும்.

புத்திரஸ்தானுதிபதி மேற்சொன்னபடி தோஷமுள்ளதாயிருந்தா லும் அதனை குருவாவது லக்னுதிபதியாவது பார்க்கப்பட் டாலும்அல்லதுசேர்ந்திருந்தாலும் பெண்களும் பிள்ளைகளும் பிறக்கும் ஆனுல் அவைகளில் ஜீவித்திருக்கக் கூடியது ஒன்று தான்.

புத்திரஸ்தானுதிபதி புதன் வீட்டிலிருக்க தெய்வபல மில்லாத திசை நடந்தால் கர்ப்பத்திலேயே சிசு ஜீரணமாகும்.

புத்திரஸ்தானுதிபதி நீசராசியிலிருந்து அந்த ராசிக்குடையவன் தன்னுடைய உச்சவீட்டில் இருந்தாலும் சுபக்ஷேத்திரத்தி லிருந்தாலும் சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டாலும், சுபக் கிரங்களோடு சேர்ந்திருந்தாலும் நல்ல அதிருஷ்டமும் வித்வானுயும் அழகும் குணமும் வாகனமும் முதலியவை களால் நிறைந்த புத்திராள் உண்டு.

புத்திரஸ்தானாதிபதி நீசனாயிருந்தால் சிறிய தகப்பன் பெரிய தகப்பன் ஜாதகன் இவர்களின் மனைவி மலடியாவாள் அல்லது பிறந்தாலும் ஜீவித்திராது.

புத்திரஸ்தானாதிபதியை சனி பார்த்தால் மலடியாவாள் அல்லது இறந்துபோய்விடும், மேலும் தகப்பன் மிக்கத் துயரமுள்ளவனாய் புதல்வனுக்குக் கர்மம் செய்யும்படி நேரிடும் சந்தேகமில்லை.

காலங்கழித்தாவது பிள்ளையுண்டாகும் அல்லது இரண்டாவது பெண்சாதிக்காவது பிள்ளையுண்டாகும்.

புத்திரஸ்தானாதிபதி சனியால் பார்க்கப்பட்டால் கர்ப்பம் கரைந்து போய்விடும், அவன் உச்சனாயும் ஸ்வக்ஷேத்திரனாயும் இருந்தால் அநேகம் பிள்ளை ஜனித்தாலும் ஒரே புத்திரன்தான் ஜீவித்திருப்பான்.

புத்திரஸ்தானாதிபதியை சனி பார்த்தாலும் சனியோடும் கூடினாலும் பெண்களது போகபாக்கியங்களும் குறைவுபடும். சாஸ்திரங்களில் புத்திரஸ்தானத்தையும் புத்திஸ்தானத்தையும் பேதமாகச் சொல்லப்படாமையால் புத்திக்கும் சாஞ்சல்யம் ஏற்படும்.

புத்திரஸ்தானாதிபதி புருஷக் கிரகக்ஷேத்திரத்தி லிருந்தாலும் கேந்திரஸ்தானத்தி லிருந்தாலும் நீசக்ஷேத்திரத்திலுள்ளவனா யிருந்தாலும் பெண்களும் பிள்ளைகளுமுண்டு.

புத்திரஸ்தானாதிபதி பாபியோடு சேர்ந்திருந்தால் புத்திரனுக்கு ஹானியைச் செய்வான். சுபனாலும் இலக்கினாதிபதியாலும் பார்க்கப்பட்டாலும் ஹானிசெய்யமாட்டான்.

திருவாதிரை நட்சத்திரத்திலாவது ஹஸ்த நட்சத்திரத்திலாவது புத்திரஸ்தானாதிபனிருந்தால் ஜாதகனுக்கு புத்திரனில்லை.

மிருகசீரிடம்-புனர்பூசம் இந்த நக்ஷத்திரங்களில் புத்திர ஸ்தானாதிபனிருந்தால் வெகு காலங்கழித்து ஒரேபிள்ளை யுண்டென்பதற்கு ஐயமில்லை.

மிதுனத்திலாவது கடகத்திலாவது கன்னியா ராசியிலாவது புத்திரஸ்தானாதிபனிருந்தால் ஜாதகனுக்கு யாதொரு தோஷமும் கிடையாது. ஸ்திரீப்பிரஜை தானுண்டாகும். அதாவது

ஸ்திரீப்பிரஜையுண்டானுல் அதற்கு யாதொரு தோஷமு ஏற்படாது. சில கிரந்தத்தில் முன்சொன்ன தோஷமானது அமங்கல்லியத்தையு முண்டுபண்ணும்அல்லது பிரசவத்தி சூசிகாவாயு உண்டாகும் அல்லது தரித்திரத்தன்மையை முண்டுபண்ணும் என்று சொல்லப்படுகிறது. இவைகளு குப் பரிகாரம்கிலீபக்கிரக ஜபமும்அசுவத்தப்பிரதக்ஷிணமு ஸேதுஸ்நானமும் செய்யவேண்டியது. மற்றுஞ் சிலர்க முற்குறிக்கப்பட்ட இராசிகளில் புத்திரஸ்தானுதிபனிருந் இலக்கினுதிபதியால் பார்க்கப்பட்டால் பலவித சவுக்கிய தையும் இராஜயோகத்தையும் தங்கசாமான் வெள் சாமான்களும் பன்னிரண்டு வயதுமுதல் அவனது பிள் பெண்களுக்குக் கிடைக்குமென்றும் சொல்லப்படும். ஜப ஹோமம் இவைகளைச் செய்தால் அந்த பிள்ளைகளுக்கு பூர்ணமான ஆயுளும் உண்டாகும்.

புத்திரஸ்தானுதிபதி சூரியக்ஷேத்திரத்தில் இருந்தால் கதலிவ திய பாவத்தை அடைவன். இந்ததோஷம் மிகுந்த தன னுக்கும் ராஜாவுக்கும் உண்டு. தரித்திரனுக்குக் கிடையாது

புத்திரஸ்தானுதிபதி சனியோடுகூடியிருந்தாலும் ஸ்திரீசம்போ காலத்தில் தேகத்தில் தாபமுண்டாகும். விரியமானது ஜ மாகப் போய்விடும் ஜாதகனுக்கு குன்மமுண்டாகும்.

புத்திரஸ்தானுதிபதி சனியோடு கூடியிருந்தால் மலடியாகவு பிறந்ததற்குநாசத்தையும்செய்யும். ருதுவாகி பத்துவருஷ துக்குமேல் பிறந்தால் ஒருபிள்ளை ஆயுளுடன் கூடியிருக்கு

புத்திரதோஷமிருந்தால் ருதுகாலம் முதற்கொண்டு ஒன்பது வ டத்திற்கு மேலுண்டாகும்.

புத்திரஸ்தானுதிபதி அலிக்கிரகத்தின் நடுவிலிருந்தால் மல தோஷத்தையடைவான்.

புத்திரஸ்தானுதிபதி எட்டாமிடத்திருந்தால் அவனுடைய ஞா களுக்கும் புத்திரதோஷமுண்டு. அந்தஸ்தானம் உச்சமா வாவது ஸ்வக்ஷேத்திரமாகவாவது இருந்தால் புத் தோஷங் கிடையாது.

புத்திரஸ்தானுதிபதி சத்துருவீட்டிலிருந்தாலும் சத்துருவி பார்க்கப்பட்டாலும் சத்துருவோடு சேர்ந்தாலும் புத்திர

குத் தண்ணீர் நெருப்பு முதலியவைகளால் அபமிருத்தியு தோஷ முண்டாகும். அந்த தோஷத்துக்குப் பரிகாரம் மிருத்தியு மந்திரஜபம் லக்ஷம் செய்ய வேண்டும்.

புத்திரஸ்தானுதிபதி பாபராசியிலிருந்தாலும் பாபிகளால் பார்க்கப்பட்டாலும் பாபிகளுடைய மத்தியத்திலிருந்தாலும் புத்திரனுக்கு அபமிருத்தியு தோஷமுண்டாகும். புத்திரர்கள் கோபமுள்ளவர்களா யிருப்பார்கள்.

குடும்பம் ஒன்ருக விருந்து ஒருவனுக்கு மாத்திரம் மேற்சொன்ன தோஷமிருந்தால் அத்தோஷமானது அக்காள் தங்கை அண்ணன் தம்பி சிற்றப்பன் பெரியப்பன் முதலானவர்களுக்கும் கூட சம்பவிக்கும்.

புத்திரஸ்தானுதிபதி பாபிகளோடு கூடி யிருந்தாலும் நபும்சகக் கிரகத்தால் பார்க்கப்பட்டாலும் பிசாசினுல் கர்ப்பத்தைச் சின்னபின்னமாக்கப்படும். பிறந்தாலும் ஜீவிக்க மாட்டாது.

ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களில் புத்திரஸ்தானுதிபதி சனி கேது மற்றைய பாபக்கிரகங்களோடு கூடியிருந்தால் ஜாதகனுக்கு புத்திராரிஷ்ட முண்டாகும். அதற்குப் பரிகாரம் மிருத்தியுமந்திரஜபம் நான்கு லக்ஷம் செய்யவேண்டியது.

பிரதமை திதியிலாவது துதிகை திதியிலாவது சதுர்த்தசி திதியிலாவது அமாவாசையிலாவது புத்திராதிபதி சந்திரனேடு கூடி யிருந்தால் சிசுவுக்கு கர்ப்பத்திலேயே மரணம். புத்திரேசன் சுபர்களால் பார்க்கப்படாமல் பாபிகளோடாவது சத்துருக்களோடாவது கூடி யிருந்தால் இதுவே தோஷமென்று உள்ளமுடையவன் அபிப்பிராயம். புத்திரதோஷமிருந்தால் களத்திரம் இரண்டு மூன்று ஏற்படும். சுக்கிரன் ஆறு எட்டு இவைகளிருந்து திசை வந்தாலும் புத்திர தோஷத்தால்சூதிகாவாயுவினுல்அபமிருத்தியு தோஷ முண்டாகும்.

ஐந்தாமிடத்தில் ஜீரணசந்திரனிருந்தால் புத்திரதேஷ முண்டாகும். ஷ தோஷத்தால் இரண்டு களத்திரம் ஏற்படும். புத்திக்கு மாறுபாடு உண்டாகும். பெண்குழந்தை பிறந்தால் அதற்கு தேகத்தில் அசவுக்கிய முண்டாகும். களத்திரம் இரண்டாகாத விஷயத்தில் 12-18 வருஷத்தில் களத்திர தோஷமுண்டு. ஆதலால் பரகளத்திரத்தில் காதலுள்ளவன்,

பெண்குழந்தை பிறந்தால் ஷ தோஷம் கிடையாது. ஆனு பாலியத்தில் வியாதியுண்டாம்.

மூன்று ஆறு பதினொன்று இவைகளில் புத்திராதிபன் க்ஷீண சந் திரனோடு கூடி யிருந்தால் மூன்றுதினம் பிரசவ வேதனை யனுபவித்துப் பிரசவமாகும்.

மேல்சொன்ன மூன்று, ஆறு, பதினொன்றில் க்ஷீரணசந்திரனோ புத்திராதிபதி கூடி யிருந்தால் புத்திரனுடைய பன்னிரண் டாவது வயதில் பிதாவுக்கு பீடையுண்டாகும். அல்லது பு திரனுக்குப் பீடையுண்டாகும். ஸ்திரீஜாதகத்தில் புத்திரா பன் நீசனுயிருந்தாலும் புருஷஜாதகத்தில் புத்திராதிபன் பு க்ஷேத்திரத்திலாவது புதனோடு சேர்ந்தாவது சத்துரு க்ஷே திரத்திலாவது இருந்து சுபதிருஷ்டி யில்லாவிடில் இரண்ட லது மூன்றுதினம் பிரசவ வேதனையை யடைவாளென்ப சில கிரந்தகர்த்தர்களின் அபிப்பிராயம்.

புத்திராபதி கேந்திரஸ்தானங்களில் புத்திராதிபதி அலிக்கிரக தோடு சேர்ந்திருந்தால் பிள்ளை யிருந்தால் பேரனுக்கு நா மும் பேரனிருந்தால் புத்திரநாசமும் உண்டாகும்.

புத்திராதிபதி சத்துருவோடு கூடிய பாபக்ஷேத்திரத்தில் இரு தால் ஜாதகனாவது அவன் களத்திரமாவது புத்திர சோக தைஅனுபவிப்பார்கள். அல்லது அவனுடையஜேஷ்டபுத்தி னுக்கு புத்திரதோஷம் உண்டாகும்.

புத்திரஸ்தானாதிபதி லக்னாதிபதியோடுகூடி பாபிகளோடு சேர் திருந்தால் ருதுகாலம் முதற்கொண்டு ஐந்து அல்லது ஏ வருஷத்துக்கு மேலாவது ஏழுபிள்ளை அல்லது எட்டுப்பிள் களாவது உண்டாகும். அந்தப் புத்திரர்கள் இருபத்தைந் வயதுக்குமேல் பிச்சையெடுக்கும் யோகத்தைப் பெறுவா கள். அதில் ஒருவனுக்கு மாத்திரம் ஆண் பெண் சந்ததியு மற்றவர்களுக்கு பெண் சந்ததியுமாத்திரம் உண்டாகும்.

புத்திரஸ்தானாதிபதி பாபிகளோடு சம்பந்தப்பட்டால் ஒருவ மிகுந்த காமியாயிருப்பான் அவன் வைதீகனானல் தன் கள திரத்தினிடத்திலேயும் லெளகீகனானல் அன்னிய ஸ்திரீக டத்திலேயும் ஆசையுள்ளவனாயிருப்பான். பெண்கள் பிற

தால் 30வருடத்துக்கு மேல்பட்டுவைதவ்யம்வரும். புத்திரன் ஸ்திரீ நிமித்தமாக தகப்பனால் தேடப்பட்டதை அழித்து விடுவான். பரிகாரம் செய்யாவிட்டால் பௌத்திரனுக்கு தோஷமுண்டாகும்.

புத்திரஸ்தானாதிபதி புருஷ ராசியிலிருந்தால் ஆண் குழந்தை யுண்டாகும். ஸ்திரீராசியிலிருந்தால் பெண்குழந்தை உண்டாகும். ஆட்சி உச்சனாயிருந்தாலும் லக்னாதிபதிஅல்லது குரு பார்த்தாலும் ஆண் பெண் கலந்துண்டாகும் பரிவர்த்தனை யுடைய சனி திருஷ்டியிருந்தாலும் மேல்சொன்னபடி யுண்டாகும். சர்வ சங்கிரக நாடியில் சனி பரிவர்த்திதனா யிருந்தாலும் சனியை குரு பார்த்தாலும் அந்தச் சனியை சுபனாகச் சொல்லுகிறது. அப்படி சனி சுபனாக விருந்தாலும் அவனுடைய திருஷ்டியானது புத்திரஸ்தானாதிபதிக்கு ஏற்பட்டால் அந்த ஜாதகனுடைய பெண்பிள்ளைகளுக்கு பிசாசுகளின் உபத்திரவம் ஏவல்கட்டு உண்டாகும் ஆனால் பிராணபயம் கிடையாது.

புத்திராதிபதிக்கு பாபிகளுடைய பார்வை யில்லாவிட்டால் புத்திரதோஷங் கிடையாது. புத்திரனுக்கு சரீரதோஷங் கிடையாது.

புத்திராதிபதி அலிக்கிரகராசியிலிருந்தாலும் சனியால் அல்லது அலிக்கிரகத்தால் பார்க்கப்பட்டால் கர்ப்பத்திலேயே சிசுவுக்கு மரணம் நேரிடும். பிரசவமும் கடினமா யிருக்கும் லக்கினாதிபதி பார்வை யிருந்தால் சுகப்பிரசவமா யிருக்கும்.

புத்திராதிபதி அலிக்கிரகராசியிலிருந்தால் ஜாதகன் புத்திரனுக்கு கருமத்தைப் பண்ணுவான் பெண் பிறந்தால் சூசிகா வாயு உண்டாம்.

புத்திராதிபதி பாபிகளோடு சேர்ந்தாலும் அல்லது பாபிகளால் பார்க்கப்பட்டாலும் அவனுடைய திசையிலாவது அவனுடைய மாசத்திலாவது வாரத்திலாவது மாசத்தினடுத்த மாசத்திலாவது வாரத்தினடுத்த வாரத்திலாவதுஒன்பதுக்குடையவனுடையதிசையிலாவது ஜாதகன் பிள்ளைக்குக் கர்மம் செய்வன். பரிகாரம் செய்யாவிட்டால் பௌத்திரதோஷமுண்டாகும். பரிவர்த்தனை யிருந்தாலும் தோஷமேற்படும்.

யித்துக்கொண்டு அப்பால் பாலாரிஷ்டம் உடற்றசை உயிற்றசை காலச்சக்கிர தசை இவைகளைச் செவ்வையாக உணர்ந்து தன் அறிவும் சேர்த்து ஆயுட்பாவம் அறிய வேண்டியது. இன்னும் ஆயுட்பாவத்தை வெவ்வேறு விதமாய்ப் பார்க்கக் கூடியதை இவ்விடத்தில் விரிக்கிற் பெருகுமென்று இம்மட்டே விடுத்தனம்.

## பலன் அறியும் விவரம்

ஒன்று முதல் பன்னிரண்டு பாவ பலன்களில் எத்தனையாமிடத்து பலனறிய வேண்டுமோ அந்தந்த விடத்து பலன்களுக்கு அந்தந்த இடத்தையே இலக்கினமாக வைத்துக்கொண்டு அவ்வீட்டுக் குடையவன் அவ்விடத்திலிருந்து எத்தனையாம் விடு பெற்றிருக்கின்றனனோ அதையும் அது ஜென்ம இலக்கினத்திற்கு எத்தனையாமிடமென்றறிந்து அவனோடு சேர்ந்த அல்லது பார்த்த கிரகம் ஜென்மலக்கினத்திற்கும், நாம் பலன் வேண்டிய கிரகத்தின் வீட்டுக்கும் எத்தனையாமிடத்திற் குடையவர்களென்று மறிந்து, அப்பால் நாம் பலன் பார்க்க வேண்டிய கிரகத்தின் வலிமையை அதாவது தசவர்க்கம் அஷ்டவர்க்க முதலியவைகளில் அந்தந்த கிரகத்திற்கு மேற்பட்ட வலிமை யின்னதென்று அறிந்து ஜாதகத்தில் நடந்துவரும் தசாபுத்திகளையும் தற்காலம் நடக்கும் கோட்சார பலன்களையுமறிந்து பலனறிய வேண்டுமென்பதாம்.

இலக்கின மாதியாக பன்னிரண்டு பாவ பலன்களையும் பிரித்து ஒவ்வொரு பாவங்களுக்குள்ள பலாபலன்களை பொதுவாக இந்நூலிற் கூறுவது காண்க.

---

உ

கடவுள் துணை

## சுந்தரசேகரத்திற்கு
## இரண்டாம் பாகமாகிய
# தியாகராஜ சேகரம்

—oo✕oo—

*அறுசீர் விருத்தம்*

சீர்மருவு சோதிடத்தின் சாரமெலாம் பாருபெறத் திரட்டி யொன்ருய்ப், பார்மருவு பலர்புகழ சுந்தரசே கரத்திரண்டாம் பகுதி யென்னத், தார்மருவு தியாகரா சச்சேக ரம்மெனு நூற்றமி யேன் சொல்ல, கார்மருவு கஜமுகநின் கருதரிய பூங்கழல்கள் காப்பதாமால்

## இலக்கினபாவம்

இலக்கினத்தில், சூரினிருந்தால் - பயித்திய சரீரம், ஆரோக்கிய வான், கண் நீலவர்ணமாயிருக்கும், சூரத்துவமுண்டு கொஞ்சம் நேத்திரயோகம்.

,, சந்திரனிருந்தால்—கண் உன்னதமானது வியாதியுள்ள வன், மூக்கில் ஜலம் வடியும், நீர்விழுரோகமுண்டு, பெண்கள் சகோதரமுண்டு, வாதசரீரம், பயிர் செய் வான், கண்டத்திலே ரோகமுண்டு, குய்யத்திலே வியாதியுண்டு, கொஞ்சம் கருணை, ரோகம், அதிக மூர்க்கன், தயாபரன், தீர்க்காயுள், ஞானியா யிருப் பான்.

,, செவ்வாயிருந்தால்—சரீர உஷ்ணம், மேகசரீரம், திருட்டு புத்தி, கழுத்து பெரிதாயிருக்கும், சிவந்த சரீரன், பால வயதில் பிதிருக்குப் பீடையுண்டு, ராஜ சாமர்த் தியன், கோப முடையவனுகவும் படிப்பில்லாதவ னுகவு மிருப்பான்.

,, புதனிருந்தால்—சரீர பூஷணன், மந்திராலோசனை உச்சா டன முள்ளவன், பந்துக்கள் உண்டு, சோதிட சாஸ் திரம் அறிவன், வித்தையுண்டு, காவிய கணித முடையவன், ஞானவான், இராஜசன்மான முடைய வன், தனவான், வாச்சாலகன், தீர்க்காயுள்.

,, வியாழனிருந்தால்—தன் வீட்டிலே க்ஷேமமுண்டு, தர்க்க சாஸ்திரமறிவன், புத்திவான், சுகமுடையவன், சேனாதிபதி, இராசபூச்சியன், சதுரங்கவுபாயன், அழகுண்டு, ஞானி, தீர்க்காயுள்.

,, சுக்கிரனிருந்தால்—அதிகாரமுடையவன், கணிதமுடையவன், வாசனையுடையவன், பெண்சாதிப்பிரியன், வஸ்திர அலங்காரப்பிரியன், சந்தன புஷ்ப பிரியன், காமப் பிரியன், சுகசரீரன், நேத்திர அழகுள்ளவன், தீர்க்காயுளுண்டு.

,, சனியிருந்தால்—புத்திரவாதனை யுண்டு, துர்ப்புத்தி, துர்விசாரன், ராஜகோளன், பெரியமனிதன், வாதசரீரன், உற்சாகமுடையவன், கிராமாதிகார முடையவன், வித்துவான், மௌனமுடையவன், ரூபவான், ரோகி, ஆட்சி உச்சமாகில், ஞானவானுமாய் தனவானுமாய் தீர்க்காயுளுடையவன்.

,, இராகு அல்லது கேதுவிருந்தால்—வியாதி யுடையவன், திரவிய முடையவன், விதிகளை தீர்க்க வகையறிய வல்லவன், விஷப்பரீக்ஷை பார்க்க வல்லவன் புத்தியுள்ளவன், எளியவன், அற்பாயுளுள்ளவனுக விருப்பான்.

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, மகரம் இராசிகளில் ராகுவிருக்கிறபோது பிறந்தால் யோகவான், போகியாயிருப்பான், தயையுள்ளவன், தீர்க்கபுத்தி, ஸ்திரீவாஞ்சை, தன் குலத்திற்கு பிரபலமா யிருப்பான், செவ்வாய் சந்திரன் கூடி நிற்கில் மாதுர்தோஷம், சூரியன் செவ்வாய் சனி கூடி நிற்கில் பிதாவுக்கு தோஷமுண்டு.

மேஷம்-திரவியவான்.
ரிஷபம்-சங்கீதப்பிரியன்.
மிதுனம்-தனவான்.
கடகம்-கோபி.
சிம்மம்-மாலைக்கண்ணன்.
கன்னி-எழுதவல்லவன்.
துலாம்—புத்திரன் தங்காது.
விருச்சிகம்-துர்க்குணமுடையவன்.
தனுசு—மனைப்பீடையுள்ளவன்.
மகரம்-நித்திரையுடையவன்.
கும்பம்—சுகுணவான்.
மீனம்-வெகுதாரன்.

இலக்கினத்திற்குமுன் சுபர் நிற்க தனவான், கிழவரையுள்ளவன்,
,, பின்னே சுபர் நிற்க, தனவான் சற்குணமுள்ளவன் கீர்த்திமான் தர்மசிந்தனையுள்ளவன்.

,, இருபுறமும் சுபர் நிற்க, இராஜயோகம். இருபுறமும் பாபர் நிற்க தரித்திரயோகம் - தனவீனமுடையவன் - துஷ்டன் - பிறதேசங்களில் ஜீவனம் பண்ணுவான். அற்ப வயதுள்ளவன்.

,, இலக்கினத்தில் சனியிருந்து சந்திரனாவது சுக்கிரனாவது ஏழில் நிற்க, அழிந்துபோனவளுக்குப் பர்த்தாவாவான்.

,, இலக்கினாதிபதியுடன் புதன் கூடினால், முந்தின பிள்ளை பெண் பெறுவன்.

,, இலக்கினாதிபதி பாபருடன் கூடி ராசியிலாவது எட்டிலாவது இருந்தால், சரீரத்தில் சிரங்கு, கொப்பளம், அரையாப்பு கிரந்தி இரணமுண்டாம்.

இலக்கினாதிபதி, சூரியன் செவ்வாயாகில், சுடு சாதத்தின்மேற் பிரியன்.

,, சந்திரனாகில் தித்திப்பில் விருப்பன்.
,, புதனாகில், புளிப்பில் விருப்பன்.
,, வியாழமாகில், தயிரில் விருப்பன்.
,, சுக்கிரனாகில், சமபுசிப்பு.
,, சனியாகில், காட்டுக்கீரை மேல் விருப்பம்.

இலக்கினாதிபதியுடன் இராகு-கேது கூடினால் சத்திபூசை செய்து மாமிசம் புசிப்பான்.

இலக்கினம் மகர கும்பமாகில், அதில் சனியிருந்தால் சகல பாக்கிய முண்டு.

இலக்கினம் கடகமாகில், அதில் சந்திரனிருந்தால் பூமி பாலகனாகவும் யோகவானாகவும் இருப்பான்.

இலக்கினாதிபன் பத்துக்கதிபன், இவர்கள் வலுத்திருந்தால் உத்தியோகம் செய்வான்.

இலக்கினாதிபதி பலவீனமாய் ஆறு எட்டு பன்னிரெண்டிலிருந்தால் சேவகாவிருத்தி அல்லது கூலிஜீவனம் பண்ணுவான், மற்ற கிரகங்களின் பலாபலன் பார்த்து அறிந்து சொல்லவும்.

இலக்கினாதிபதியிருக்கிற ராசிக்கதிபன் ஆட்சியுட்சம் கேந்திரமும் திரிகோணங்களிலுமிருந்தால், அவன் பருவதங்களிலே மூலிகை மந்திரமறிந்து சித்து புருஷனாகவிருப்பான்.

இலக்கினாதிபதி இலக்கினத்திலிருந்து பத்துக்குடையவன் கேந்திரம் திரிகோணங்களிலிருந்தால், தன்குலத்திற்கு பிரபலமாய் வெகு ஜனங்களுக்கு உபகாரியாய் பாக்கியவானாயிருப்பான்.

இலக்கினுதிபனும் ராசிக்கதிபதினும் சூரியனும் ஏழுக்கதிபனும் நட்பிலிருக்க அவன் தீர்க்காயுள் பெறுவன்.

இலக்கினுதிபன் நாலில் நாலுக்கதிபன் இலக்கினத்திலு மிருந் தால் அவன் தகப்பனுக்கு மேலான அதிக ஐஸ்வரியமுள்ள வனுக இருப்பான்.

நாலில் ஒருத்தரும் இல்லாவிட்டால் அவன் பிறந்த வீட்டிற்கு சமீபத்தில் பாழாயிருக்கும்.

நாலாமிடத்திற்கு முன்னே பாபரிருந்தால் பிறந்த வீட்டிற்கு மேற்கே பாழாயிருக்கும்.

இலக்கினத்திற்கு 2-4-10-12 இந்த ராசிகளில் எத்தனை கிரகங்க ளிருந்தனவோ அத்தனை பேர்கள் அவன் பிறந்த வீட்டி லிருந்த பேர்கள் என்று அறியவும்.

அதில் சனியிருந்தால் அன்னியஸ்திரீ ஒருத்தியென்று சொல்ல வும்.

சுக்கிரன் சந்திரனிருந்தால் சுபமங்கலியென்றும், செவ்வாய் புதன் இருந்தால் அமங்கலியென்றும் சொல்லவும்.

மேஷம் ரிஷபம் சிம்மத்தில் சூரியன் நிற்க, மற்றகோள்கள் உ ராசியில் பலமாய் நிற்க, பிறந்த குழந்தை இரட்டையாகும். அங்காரகன் ஏழாமிடத்திலும், ஆதித்தன் எட்டாமிடத்தி லும் நிற்க மற்றக் கோள்கள் சரராசியிலிருந்தால் ஒருபலனு மில்லை யென்று அறியவும்.

இலக்கினத்தில் நாலாமிடத்தோனும், பாக்கியாதிபதியும் சுப சுபக்கிரகங்கள் பார்க்கப் பிறந்தவன் இராஜபூஜிதன். சனிக்கு ஒன்று ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்கவும், சுக்கி ரன் சந்திரன் புதன் இவர்கள் பன்னிரண்டாமிடத்தில் நிற் கவும் பிறந்தவன் தன் தகப்பனுடைய தேசத்தில் வாழ் திருப்பானென்று அறியவும்.

இலக்கினத்தைச் சந்திரன் பாராதிருக்க, சந்திரனிருந்த ராசி ச ராசியாக விருந்து அங்கிசமும் சராங்கிசமாகவிருக்கப் பிறந்த பாலகன் தகப்பனை தேசாந்திரம் திரியவைப்பானென்று அறியவும்.

சூரியனுக்கு இரண்டாமிடத்தில் பாவக்கிரகங்கள் நின்று அத வும் பாவர் வீடாகில் தந்தை தேசாந்திரியாவான். பாவக் கிரகங்கள் பாவராசியில் நின்று சூரியனுக்கு ஐந்தாம் ஏழாம் ஒன்பதாம் இடத்தில் பாவக்கிரகம் நின்றால் தந்தை ப தேசத்தில் சிறைப்படுவானென்று அறியவும்.

அங்காரகனுக்கு பதினோராமிடத்தில் சந்திரன் நிற்க, பிறந்த குழந்தைக்கு தோஷமுண்டு. சுபக்கிரகங்கள் அதைப் பார்க்கில் அந்தக் குழந்தையை இன்னொருவர் வளர்ப்பார். பாபக் கிரகங்கள் சந்திரனைப் பார்க்கில் குழவி சேதமாகும். பாக்கியாதிபதி சந்திரனைப் பார்க்கில் தகப்பன் வாழும் மனையில் ஜனனமாகுமென்று அறியவும்

நீசஸ்தானத்தில் சுபக்கிரகங்கள் நின்று சந்திரனைப் பார்க்கில், மரத்தின் கீழ் ஜனித்த பிள்ளையென்று அறியவும். பாபக் கிரகங்கள் நீச்சம் பெற்று சந்திரனைப் பார்த்தால், நீசர் வீட்டில் ஜனித்த பிள்ளையென்று அறியவும்.

சந்திரனும், சுபக்கிரகங்களும், ஒரு இராசியிலிருக்க அல்லது ஒன்றை ஒன்று பார்க்கப் பிறந்த சேய் மனிதரில்லாத வீட்டில் ஜனித்த தென்றறியவும். சந்திரனுக்கு ஏழாமிடத்தில் சனி நிற்க, சனிக்கு ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்கப் பிறந்த குழந்தையின் பெற்றோருக்கு அரிட்டமென்று சொல்லப்படும்.

சனிக்கு ஏழாமிடத்து செவ்வாய் நிற்கப் பிறந்த குழவி ஈனமாம், இலக்கினதிபதி பாவரோடும்கூடி ஆறும் எட்டாம் பன்னிரண்டாம் இடங்களில் நிற்கப் பிறந்தவன் ரோகவானா யிருப்பானென்றறியவும், ஜன்ம லக்கினதிபதி பலமில்லாதவனா யிருந்தால் நோயுடையவனென் றறியவும்.

இலக்கினத்திலானாலும் 3-மிடத்திலானாலும் 6-க்குடையவனும், 2-மிடத்துக்குடையவனும், செவ்வாயும் கூடியிருந்தால், காது அறுந்து போகும். அல்லது செவியில் ரோக முண்டாகும் புதன் வீட்டில் சனி நிற்கில் நபுஞ்சகனாகப் பிறப்பானென்று அறிந்து சொல்லவும்.

இலக்கினம் புதன் வீடாக புதன் ஆறுமிடத்தில் நிற்க ஆறுமிடத்ததிபன் இலக்கினத்தில் நிற்க அலியாவன். சந்திரன் ஜன்மாதியோடும் புதன் சனியுடன் கூடினால் ரூபத்தில் குள்ளனாகவும் இருப்பான்.

மேஷ விருச்சிகத்தில் செவ்வாயிருக்க, சனி இலக்கினத்தில் நிற்க 3-ம் இடத்தில் சுக்கிரன் நிற்கில், உடல் சிறுத்துக் குள்ளனாக

2

இருப்பான். அங்காரகன் இலக்கினத்திலும், சனி திரேகாண இலக்கினத்திலும் இருக்கில் சிறைப்படுவான்.

இலக்கினம் ஏழு எட்டு வியத்தில் சந்திரன் பாவருடனே கூடி சுபக் கிரகங்கள் பார்வையில்லாமல் நிற்க கேந்திரத்தில் சுபர்களில்லாதிருக்க பிறந்தசேய் குருடாகும். வியம் ஆறு எட்டுக்குடையவர்கள் பாவர்களாகி எங்கிருந்தபோதிலும் பிறந்தசேய் துர்ப்பலனுடையவனும். ஜென்மாதிபதி பாவ யாகி ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்கில் நன்மை யுண்டு மெனச் சொல்லுவர்.

இலக்கினத்தில் பாவக்கிரகங்களும், ஜன்மாதி பலமின்றிப்போக கேந்திரகோணத்தில் பாவர்கள் வந்துற்றுல் கோபியாவான் ஜன்மத்தான் நின்ற வீட்டோன் ஆறு எட்டு பன்னிரண்டில் இருந்திடில் துர்ப்பலன் ஜன்மாதிபதி கன்மாதிபதி, எட்டா மிடத்தோன், சனி, இல்லாத பர்தசை நடக்கும்போது துர் பலன் நடக்தும். சனி சஞ்சார காலத்தில் அரிட்டம் வரு மென்று சொல்லுவர்.

இலக்கினத்தில் சனி பாம்புகளும், அங்காரகன் நான்கிலும், சூரி யன் ஏழிலும் வருங்காலத்தில் குழவிக்கு அரிட்டம். சந்திர னுக்கு இரண்டு பக்கத்திலும் பாவக்கிரகங்கள் நிற்க, குழ ந்தையுடன் தாயாருக்கும் அரிட்டம் வரும். சுபரால் இலக்கின மாகி மூன்றுமிடத்தில் தீயோர்களும், பன்னிரண்டாமிடத் தில் சுபக்கிரகங்களும் நிற்கில் தீதுண்டாகுமென்றும், ஆறா மிடத்தில் சூரியன் நிற்க, அதற்கேழாமிடத்தில் சனி சேர் வாய் நிற்க, அரிட்டமாகும்.

இலக்கினுதிபதி பாவனுகி ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்க, நன் மையும் சவுக்கியமு முண்டாம். இலக்கினுதிபதி சுபக்கிரக மாகி ஐந்து ஒன்றில் நிற்க நன்மையுண்டாம்.

சரீரகாரகனுகிய சூரியன் ஆறு எட்டு பன்னிரண்டில் சனிவீட்டில் நிற்க, உருவு குறைந்து சரீரத்தை ஊனப்படுத்துவான். ஒன் பது பதினொன்று இரண்டில் நின்றுலும் அல்லது சிங்கத்தி லானுலும் மேஷத்திலானுலும் நிற்க தேக சவுந்தரியனுவான்.

ரிஷபம், மேஷம், கடகம், இம்மூன்று ராசியும் இலக்கினமாகி அதில் இராகுவிருந்தால் உத்தமமென்று அறியவும்.

இலக்கினதிபதி இரண்டாமிடம் பத்தாமிடத்திலாவது நிற்க, அல்லது இலாபாதிபதி பத்தாமிடம் இரண்டாமிடம் நிற்க, இருபதுக்கு மேல் சுகமுண்டாகுமென்று அறியவும்.

ஜன்மலக்கினம் சரராசியாகத் தோன்றினல் லாபாதிபதியும் திர ராசியானுல் பாக்கியாதிபதியும் உபயராசியானுல் சப்தமாதி பதியும் இவர்கள் தசை நடக்கும்பொழுது தேகத்துக்கு வாதை செய்விக்கும். இந்த மூவர்கள் போய்நிற்கிற இராசியாதிபத்தியமும் தீதாகும்.

ஜனனகாலத்தில் சூரியன் இலக்கினத்திற்கு எட்டாமிடம் நிற்கில் சுரங்காணும், சந்திரன் நிற்கில் ஜலகண்டம் வரும். அங்காரகன் நிற்கில் ஆயுதத்தால் பீடையுண்டாம், புதன் நிற்கில் வியாதி, வியாழன் நிற்கில் மிருத்யு, சுக்கிரன் நிற்கில் தரித்திரமாம். சனி நிற்கில் தாயாருக்கு தோஷமுண்டாகும், ஒருவரும் நிற்கலாகாது என்று கூறவும்.

இலக்கினதிபதி உச்சமாகி கேந்திரமேறி சுபக்கிரகங்களுடன் கூடி சுபர் மனையிலிருந்தால் நிறைந்த ஆயுளுண்டென்பது நிச்சயம்.

ஜன்மாதிபதி ஸ்திரலக்கினத்தும் ஸ்திர அங்கிசமும்பெற்று அவையே கேந்திரமாகவுமிருந்தால் அவனிருக்கும் சொந்த ஊரில் தானே வெகு பலன்களை யடைவன், அந்த இராசிகளே சுபாங்கிசமாயிருந்தால் அவன் ஜீவபரியந்தம் ஆபரணங்களோடு வாழ்வன். ஜன்மாதிபதி பலமற்று கேந்திரத்தில் நிற்க அதிக கோபமுடையவனுகி வியாதிப்படுவானென்றறியவும்.

ஜன்மாதிபதி பத்தாமிடத்திலிருக்க, பத்தாமிடத்ததிபன் பலவீனனுக ஆறு-எட்டு-பன்னிரண்டில் சுபர் நோக்கம் பெற்று நின்ருல் தத்துபுத்திரனுவான், வயது பூரணமுடையவன், இலக்கினத்தில் பாவர்கள் நிற்க, ஜென்மாதிபதி பலவானுக இருந்தால் தேகத்தில் வியாதியுள்ளவனுவன், ஜென்மத்தை சுபக்கிரகம் பார்க்கில் சவுக்கியமாம். அந்தப்பிணி கொடுமை செய்யாதென்றறியவும்.

புதன் பாவாங்கிசத்திலாவது உபயவங்கிசத்திலாவது நின்ருல் குழந்தை இரட்டைப் பிள்ளையாவர்கள். தனுர்லக்கினமாகி பிற்பாதியாகில், அதில் நின்றவர் சிங்காங்கிசம் பெற புதன் சனி வீட்டைப் பார்க்கவும் இரட்டைப்பிள்ளையாகும்.

ஜன்மலக்கினத்தில் சூரியன் புதன்-சுக்கிரன்-குரு இவர்கள் நி
ருல் வலதுபக்கத்தில் மச்சமுண்டாம். அங்காரகன் ச
சந்திரன் இவர்கள் இலக்கினத்தில் நின்ருல் இடது பக்க
தில் மருவுண்டென்றறியவும். அதன் விவரமாவது: சூரி
னுக்கு வயிற்றிலும், சந்திரனுக்கு சிரசிலும், செவ்வாய்க்
இருப்பிடத்திலும், புதனுக்கு விலாப்பக்கத்திலும், வியா
னுக்கு முகத்திலும், சுக்கிரனுக்கு தொடையிலும், சனிக்
காலிலும், இவ்விதமாகக் கோள் நிலையைக் கண்டு மருவின்
இருப்பிடங் கண்டு சொல்லவும்.

சூரியன் தனுசில் நிற்கப் பிறந்தவன் வார்த்தைப் பிரசண்ட
யும், சூரனுயும், கலை யீனனுமாகி தனமில்லாதவனுய் இரு
பான். சிங்கத்தில் நிற்க, இராக்ஷச சமானன், மேஷத்தி
நிற்கப் பிறந்தவன் கண்டமழகன் தனமதிகமாய்ச் சம்பா
திப்பன். கடகராசியே இலக்கினமாய் அதில் சூரியன்
நிற்கப் பிறந்தவன் விழியுன்னதமாக இருக்கும் திரவிய
வான். துலாம் இலக்கினமாக சூரியன் நிற்கப் பிறந்தவன்
தனசம்பாத்திய மில்லாதவனுயிருப்பான்.

மேஷம்-ரிஷபம்-சிம்மம் இவை ஜன்ம இலக்கினமாகி, சனியு
செவ்வாயும் கூடி அதைப்பார்த்தால், இரண்டு கொடி சுற்
குழந்தை பிறந்திருக்கும். செவ்வாய் ஒருவன் பார்க்கில்
ஒரு செங்கொடிசுற்றிப் பிறக்கும். சனி பார்க்கில் ஒ
கருப்புக்கொடி சுற்றிப்பிறக்குமென்றறியவும்.

பாம்பினேடு இரவி கூடி நிற்கில் கொடி தலையில் சுற்றிப்பிறக்கு
ஜென்மாதிபதியும் அட்டமாதிபதியும் அவர்களோடு சேர்
தால் ரோகவானும் செவ்வாயும் சனியும் ஜென்மத்தை
பற்றி நிற்கில் கல்லடிப்படுவன். நித்திரைப்பிரியனு
யிருப்பன்.

ஜன்மம் திரராசியாகி அதில் ஜன்மாதிபதி நிற்கப் பிறந்தவ
அந்த ஊருக்குக் கிராமாதிபதியாவான். அட்டமம் திரரா
யாகில் பிறந்தவிடத்திலேயே மரணம் வரும். ஜன்மம் ச
மாகில் தேசசஞ்சாரந் திரிகுவானென்றறியவும்.

ஜன்மம் உபயராசியாகில் சிலநாள் தேசந்திரிகுவன். சூரியன்
ஜன்மாதிபதியாகில் மலையிடத்து சஞ்சாரஞ் செய்குவன்,
சிரசுநோய் கொஞ்சமுள்ளவன், செவ்வாய் லக்கினதிப
யாகில் ஆயுதத்தாலும் அக்கினியாலும் நோய்களாலு
வேதனையடைவான்.

புதன் ஜன்மாதிபதியாகப் பிறந்தவன், வித்தையும் கணிதமும் வியாபாரமும் பலிதமுடையவனுவான், வியாழம் வெள்ளி வீடாகில் சாஸ்திரமறியக் கூடியவனுயும் தனவானுகவும் தான் பிறந்த விடம்விட்டு நீங்கான். சுப காரியங்களுக்குத் தலைவனுக யிருப்பானென்று அறியவும்.

சந்திரன் ஜன்மாதிபதியாகப் பிறந்தவன், சரீரக்காந்தி யுள்ள வன், சுகவான், நல் வியாபாரங்களைச் செய்வன், சந்திரன் இலக்கினத்தைப் பார்க்கில் தகப்பன் அருகிலிருக்க ஜனித் தவனென்று அறியவும், சரத்தில் சந்திரன் நிற்கப் பிறந்தவ னுக்கு தந்தை யருகில்வர வழிநடையி லிருந்தவனென்றும் சொல்லப்படும்.

சுக்கிரனுக்கும் புதனுக்கும் நடுவில் சந்திரன் நிற்க, பிறந்தவ னுக்கு தந்தை அருகே யிருந்திடுவன், சூரியன் சரத்திலும், சந்திரன் பத்திலு மிருக்கப் பிறந்தவனுக்கு பிதாவுடைய தலத்திற் பிறந்தவனென்று அறியவும், சனியாகிலும் செவ்வாயாகிலும் சென்மத்திலாவது ஏழிலாவது நின்ருல் பிதாவின் தேசத்தில் பிறந்தவனென் றறியவும்.

மிதுனம்-கன்னி-துலாம் கும்பம் இவை இலக்கினமாகி, அங்கார கன் பார்க்க ஜனித்தவன் ஆசாரகிருத்தியங்கள் செய்யக் கூடியவனுவன். சனி செவ்வாய் இவர்களுக்கு திரிகோணத் தில் சந்திரன் நிற்க பிறந்தசேயை தாயார் எறிந்துவிடக் கூசமாட்டாள். சந்திரனை குரு பார்க்கில் குழந்தையைக் கைக்கொள்வாளென் றறியவும்.

சந்திரன் பாவராகி ஜன்மத்திலிருக்க, சனி செவ்வாய் ஏழில் நிற்க, இவர்களை வியாழன் பார்த்தால் ஒருவரெடுத்து வளர்க் கப்பட்டவனுவன். பாம்பு-புதன்-குரு-சந்திரன் இவர்கள் சேர்ந்து ஜன்மத்திலிருக்க, பிறந்த பிள்ளை வமிசத்தைக் கெடுப்பானென்று அறியவும்.

ஜன்ம இலக்கினத்திலும் சந்திர லக்கினத்திலும் தூமன் இருந்திட வாழ்நாள் குறைந்திடும். விதிபாதனிருக்கில் புகழ் நாச மாகும். பரிவேடனின்ருல் புத்தி குறைந்துபோம். சுக்கிர பானு நின்ருல் குலங்கள் நசியும், குஜனிருந்தால் தனம்போ மென்றறியவும்.

கடகம் மீனம் இதில் பிறந்தவர்கள் இராகுதசை வரும்போது பாக்கியமோடு சோபனுதி யாடையாபரணங்களை யடைவார்களென் றறியவும்.

மகரம் கன்னி இதில் பிறந்தவர்களுக்கெல்லாம் கேது தசை வரும்போது இராஜசமானமான யோகத்தை அனுபவிப்பார்களென்று அறியவும்.

ஜன்மம் சரராசியாகி சராதிபனும் சரராசியேறி நிற்க அல்லது பார்க்க தூலசரீர முடையவனுவன், இலக்கினம் சரமாக அவ்வீட்டோன் சரத்தில் நிற்க தன் தேசத்தைவிட்டு அயல் தேசந் திரிவானென்று அறிய வேண்டியது.

முதலாவது இலக்கின பாவபலன் முற்றிற்று.

---

## இரண்டாம் பாவபலன்

---

இரண்டாமிடத்தில் சூரியனிருந்தால் முகரோகம்-பெரிய முஞ்சி-ராஜதண்டம்-சம்பாராதனை-திரவியசேதம்-நேத்திரரோகம் வித்தை மந்தம்-ராஜப்பிரியன் பரமாயுசுண்டு.

சந்திரனிருந்தால் நல்ல சுபசோபனமுண்டு. பாலியத்தில் விவாகமுண்டு - தனவான் - புத்திவான் - ராஜாவிடத்தில் கீர்த்தியுண்டு. வித்தையுண்டு - நல்ல ஸ்திரீயும், என்னேரமும் போகஸ்திரீகளுடன் கேளி விலாசத்துடனிருப்பான் - மிருது வசனமும் வாக்கு உதாரணமும் நேத்திரம் பெரிதாயு மிருக்கும், விகடமுள்ளவன் - பிரதாபசாலி - அற்ப ஆயுள்.

செவ்வாயிருந்தால் - அதிககோபி - துஷ்டன் - வாக்குவாதி-ஆகார செலவு பண்ணுவான் பிதுர் - திரவியம் வைத்திருப்பான் பூமி லாபமுண்டு - கண்ணோய் உண்டு-அல்பவித்தை - பாலியத்தில் விவாகம், தனலாபமுண்டு துர்ப்போதனையுடையவன்-மித்திர பேதம் பண்ணுவான் - கோட்சொல்லுவான் சுபகாரியப் பிரியன்.

புதனிருந்தால் வேதசாஸ்திரம் படிப்பான். மிருதுவசனி - புத்திருண்டு - ராஜகாரியத்தில் வித்வானு யிருந்து கொண்

தொடுத்த காரியம் ஜெயம் பண்ணிக்கொண்டு இருப்பான், தனத்திற்கு கர்த்தனுயிருப்பான். திரவியம் புதைத்து வைத்திருப்பான், தானிய சம்பாதனையுண்டு, பந்துவாகன முடையவன், தனம் சம்பாதிப்பன். ஆண் பெண் சகோதரமுள்ளவன்.

வியாழனிருந்தால் தனம்வந்துகொண்டேயிருக்கும், தர்மமுடையவன், சுபசோபனவான், புத்திமான் நல்ல விஷயமுடையவன். நல்ல புத்திரருண்டு, மிருதுவசனமாய் பேசுவான், நீதிமான் வெகுதனத்திற்கதிகாரி. திரவியம் புதைத்து வைத்திருப்பான், இராஜவசீகரமுள்ளவன், பாலியத்தில் விவாகமுண்டு, நேத்திரம் அழகுண்டு, ஸ்திரீவசீகரன், இப்பலன்கள் ஆட்சி யுச்சம் நட்பில் பாவர் கூடாதிருந்தால் இவை நடக்கும்.

சுக்கிரனிருந்தால் சோபனவான் – வெகு குடும்பாதிபதி, போசன சவுக்கியன், உத்தம பெண்சாதியுண்டு, பெரிப நேத்திரமுண்டு, முக சவுந்தரமுள்ளவன், சுகசரீரன், ஸ்திரீபிரியன், வித்தைவிரையன் திரவியமுண்டு. கபடன், வித்தையுண்டு, ஸ்திரீ வசப்படுவோன், காமி, ஸ்திரீகள்ளன்.

சனியிருந்தால் விவாகம் இரண்டு, திரவியம் உண்டு. அற்பநேத்திரம் முகரோகம்-வித்தையினுலே விசனம், நீசபயம்-அற்பாயுள் பிதுர் சம்பாதனை சேதம் பண்ணுவான் ஸ்திரீகளாலே விரோதம்–மாதா பிதாவுக்கு விஷமானவன்-பிரட்டு வசனமுள்ளவன்-சோரம் பண்ணுவான் சத்தியம் சர்ச்சனையில்லை.

இராகு கேதுவிருந்தால் சரீரவிருத்திஉண்டு.தயவில்லாதவன் புத்திரன் அற்பன் சோம்பல்,சாம்பல் நிறமானநேத்திரம் கொஞ்சம் முகரோகமுண்டு, விவாகமிரண்டு, மனக்கிலேசம், ரோகம், வித்தை அற்பம் – நடுவயதில் திரவியம் பாக்கியம் உண்டு. கொஞ்சம் புத்தியுண்டு-சிறுவயதில் கஷ்டம்-அமரவயதில் சவுக்கியம் விஷவாக்குள்ளவன்.

இரண்டாமிடத்தில் சுபக்கிரகம் நிற்கில் வெகுதிரவியம் வித்தையும் உண்டு, சுபக்கிரகங்களுடனே சூரியன் கூடி இரண்டில் இருந்தால் திரவியநாசம்-செவ்வாய் கூடினுல் ஞானமும்செல்வமும் உண்டு, சூரியன் சனி கூடினுல் அற்ப திரவியமுண்டு சுக்கிரன் வியாழன் கூடினுல் குலத்திற்கும் திரவியத்திற்கும் அதிபதியாவான்.

இரண்டாமிடத்து வியாழத்தை புதன் பார்க்கில் குடும்ப திரவிய நாசம். அமரபட்சத்து சந்திரன் இரண்டில் நிற்க திரவிய வாதனையுண்டு. வாக்கில் சந்திரனுடனே பாபர் கூடி நிற்கில் தரித்திரவான், சுக்கிரன் நிற்க அவனை சந்திரன் பார்க்கில் அந்தகனுவான். இரண்டுக்கதிபன் எந்த ராசியி லிருந்தானே எந்த அம்சம் ஏறி யிருந்தானே அந்த திக்கிலே திரவியமும் ஸ்திரீயும் வரும்.

இரண்டுக்கதிபனேடு இராகு கேது கூடி இரண்டிலிருந்தால் அவன் கொஞ்சவயதில் பலவீனமாவான்.

இரண்டுக்கதிபதி ஆறிலிருக்கில் அவன் திரவியம், சத்துரு கொள்ளுவான்.

ஆறுக்கதிபன் இரண்டிலிருந்தால் சத்துரு தேடின திரவியம் இவனுக்கு வரும்.

ஒன்பதுக்கதிபன் பன்னிரண்டுக்கதிபனேடு இரண்டில் நிற்க, மூன்றில் பாபிசேர அவன் பாபியாம், பரதார கமனமுடையவனுய் ஈனத்தொழில் செய்துக்கொண்டு கஷ்டப்படுகிறவனுமாய் ஒருவனிடத்தில் யாசகம் பண்ணி சோம்பலாய்த் திரிவான்.

இரண்டில் செவ்வாய் சனி இருந்து இரண்டுக்கதிபனும் கூடியிருந்தால் தெலுங்கு கன்னடம் நீசபாஷைமுதலானவையும் வரும்.

இலக்கினத்திற்கு 2-4-7-ல் சூரியன் புதன் சுக்கிரன் இவர்கள் இருந்தால் எத்தனை மந்திரிகளிருந்தாலும் அவர்களுக்கெல்லாம் மேலாய் கீர்த்திமானுய் யோகவானு யிருப்பான்.

2-7-9-க்கதிபன் இவர்கள் ஆறுக்குமேல் மூன்றுராசிக்குள்ளே இருந்தால் ஆறுக்கதிபன் ஈனமாயிருந்தால் அவன் ஊமையாவான்.

ஆறு ஒன்பதுக்கதிபனும் மூன்றுக்கதிபனும் கூடி ஆறு எட்டிலிருந்தால் இலக்கினுதிபன் இவர்களை சனி பார்த்தாலும் கூடி யிருந்தாலும் ஊமையாவான்.

இரண்டுக்கதிபனும் இலக்கினுதிபனும் கூடி ஆறு எட்டு பன்னிரண்டிலிருந்து சுபர் பார்க்காமல் இருக்கில் அவன் மரண காலத்தில் தனம் பொருள் இருந்தும் உதவாமல் அன்னிய பொருளால் அவன் பிரேதம் எடுபடும்.

இரண்டுக்கதிபனும் இராசிக்கதிபனும் ஏழுக்கதிபனும் ஏழிலிருந்தால் அவன் பலவித வேஷம்போட வல்லவனுவான். இவர்களோடு இராகு கேது குளிகன் கூடினுல் விகடகவிப் பிரசங்கம் செய்வான்.

நேத்திரஸ்தானுதிபதி பாவியாகி எட்டாமிடத்தில் சனியும் சந்திரனும் கூடி நிற்க, ஆருமிடத்தில் சூரியனும் நிற்கப் பிறந்த பிள்ளைக்குப் பூனைக்கண்ணும், நேத்திரஸ்தானுதிபதி பாவனுகி இலக்கனுதிபதியை மேவி ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்கப் பிறந்த குழந்தை பிறக்கும்போதே குருடாகப் பிறக்குமென் றறியவேண்டியது.

சுக்கிரன் நேத்திராதிபதியாகத் தோன்றி எட்டாமிடத்தில் நிற்க சூரியன் ஆருமிடத்தில் நிற்கப் பிறந்தவர்களுக்கு பிற்காலத்தில் கண்ணுக்கு நோய் உண்டாகும். மேஷத்திலாவது சிம்மத்திலாவது சனியும் செவ்வாயும் நிற்க, பிறந்த குழந்தை ஊனமாகக் கொடி சுத்திப் பிறக்குமென்று அறியவும்.

லக்கினுதிபதியோடு இரண்டாமிடத்ததிபனும் சுக்கிரனுங்கூட மூன்றுமிடத்தில் சூரியன் நிற்க, பிறந்த சேய்க்கு கண்ணிராது. சூரியனில்லாமல் சந்திரன் நிற்கில், மாலைக்கண்ணுதுமென்று அறியவும்.

நேத்திராதிபதியும் சுக்கிரனும் இலக்கினுதிபதியுங்கூடி மூன்றுமிடத்தில் நிற்க, நேத்திர நோயுண்டாம், இலக்கினுதிபதியும் இரண்டாமிடத்ததிபனும் சுக்கிரனும் ஓரிடத்தில் நிற்கில் அந்தகனுவானென்று அறிய வேண்டியது.

நேத்திரஸ்தானுதிபதி சுக்கிரனுகி ஜன்மாதிபதியைக்கூடி மூன்றில் நிற்க நேத்திரரோகம் வரும். நேத்திராதிபதி சந்திரனுகி, சுக்கிரனுடனே இரண்டில் நின்ருல் நேத்திரம் இரவில் தெரியமாட்டாது. கடகம் இலக்கினமாக நேத்திராதிபதியும்-சந்திரன், சுக்கிரன் இவர்கள் கூடிநின்ருல், பிறவிக்குருடனுவானென்றும் அறியவேண்டியது.

சிங்கம் நேத்திரஸ்தானமாக சூரியனும், சுக்கிரனுங்கூடி சிங்கத்தில் நிற்க, அவரோடு எந்த ஸ்தானுதிபதியேனும் எந்தக் காரகனுயினுங் கூடில், அந்தந்த காரகர்களுக்கு நேத்திர நோயுண்டாம். தனது வீடாயிருந்து உச்சமானுலும்

நன்மை; சந்திரன் வியஸ்தானத்தில் நிற்க, ஒரு கண் ஊனம், அவனோடு சூரியனும் கூடில் இரண்டு கண்ணும் ஊனமாகுமென் றறியவும்.

இலக்கினத்தில் செவ்வாய் நிற்க, அஷ்டமாதிபதி கேந்திரத்திலிருக்க அஷ்டமத்தில் பாவர்கள் நிற்க, நேத்திர நோயுண்டாகுமென்று முன்னோர் கூறுகின்றனர்.

சுக்கிரன்-சன்மாதிபதி சந்திரன் இவர்கள்கூடி ஆறு எட்டு பன்னிரண்டில் பலமற்று நிற்கில், மாலைக்கண்ணாகும், சூரியனும் ஜன்மாதிபதியும், இரண்டாமிடத்தோனும், சுக்கிரனும் ஒன்ருய்க்கூடி ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்க பிறவிக் குருடனுமென்றும் சொல்லுவாயாக.

கேந்திரபலன் சொல்ல வேண்டுமானுல், நேத்திராதிபனையும் அதிலிருப்பவரையுங் கொண்டு சொல்ல வேண்டும். அதில் சூரியனுக்கும் செவ்வாய்க்கும் மேற்பார்வையாம் சந்திரனுங் குருவுமாகில் சமபார்வையாம். சுக்கிரன் புதனுக்கு பக்கப் பார்வையாம். சனி இராகுவாகில் கீழ்ப் பார்வையென்று சொல்லப்படுகின்றது.

ஜன்மாதிபதியை சனிபார்க்க, கண்ணுக்கு நோய் உண்டாகும் இரண்டாமிடத்தோனுடன் சூரியன் கூடிநிற்க குளிகனும் சனியும், நின்று பார்க்க கண்ணுக்கு நோய் உண்டாகும் அந்த வீடுகள் சலராசியாகில் அவன் நேத்திரத்தில் பரவி துளிக்குமென் றறியவேண்டும்.

சூரியன் யாவருங்கூடி பலமற்று வியஸ்தானத்திலிருக்க வலக் கண் போகும். செவ்வாய் பலமற்று வியஸ்தானத்திலிருக்க இடதுகண் போகும். மேற்கண்ட இருவர்களுங்கூடி வியஸ்தானத்தில் நிற்க இரண்டு கண்களுந் தெரியாதென்று கூறவேண்டியது.

சனியுஞ் செவ்வாயுங்கூடி இரண்டு பன்னிரண்டில் நிற்கில் விழிக் கூனமாம். சூரியனும் சந்திரனும் வியத்தில் நிற்க கண் நோயுண்டாம், சூரியன் சந்திரன் செவ்வாய் குரு சுக்கிரன் இவர்களைக் கொண்டு முழுக் குருடனுகும் வகையை சொல்ல வேண்டு மென்பதாம்.

சூரியன்-சுக்கிரன், பலனில்லாதிருக்க அவருடனே ஜன்மாதிபன் கூடில் பிறவி அந்தகனும். ஐந்தாமிடத்தோனும் ஆறுமிடத்தோனும் ஜன்மத்திலிருக்க சுக்கிரன் இரண்டாமிடத்தோனைக் கூடி நிற்க, இரண்டு கண்ணும் பிடுங்கப்படுமென்று சொல்லப்படுகின்றது.

சூரியன், செவ்வாய், சந்திரன், சனி இவர்கள் இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டில்நிற்க, கண்ரோகமுண்டாம். இரண்டு, பன்னிரண்டில் சந்திரனும் சூரியனுங் கூடி நிற்க, இரண்டு எட்டில் பாவக்கிரங்கள் நிற்க, கண்ணோயுண்டாமென்று சொல்லவேண்டும்.

## வாக்குஸ்தான பலன்

குடும்பஸ்தானாதிபதியோடு புதன்கூடி ஆறுமிடத்தில் நிற்கப் பிறந்த சேய் ஊமையாகும். மூன்றுமிடத்தோனும், இலக்கினாதிபதியுங் கூடினாலும் ஊமையாதுமென்று அறிய வேண்டும்.

வாக்குஸ்தானாதிபதியோடு புதன்கூடி இலக்கினம் மூன்று, ஆறு இவ்விடங்களில் நிற்கஊமையாம். இவருடன் எந்தத்தானாதிபதியானாலும், காரகரானாலும் வந்துற்றால் அந்தக் காரகர்கள் ஊமையாவார். அப்படிவந்த கிரகங்களுக்கு அவ்வீடு ஆட்சி அல்லது உச்சமாகில் அப்போது அத்தோஷம் நீங்கி வாக்கு ஊனம் மாறிப்போகு மென்றறிய வேண்டும்.

புதனோடு வாக்குஸ்தானாதிபதி கூடி ஆறு, எட்டு, பன்னிரண்டில், நின்றால் ஊமையாம். தந்தை தாயார் ஸ்தானத்திலும் இவ்வாறிருக்க ஊமையாகுமென்று நிச்சயமாய் அறிய வேண்டியது.

இலக்கினாதிபதியும் சுக்கிரனும் கூடி, ஆறு, எட்டு, பன்னிரண்டில் நிற்க ஊமையாம். இரண்டாமிடத்தோன் அவருடன் கூடினால் ஊமையாம். மற்றக் கிரகங்கள் கூடினும் ஊமையாகத் திரிவானென்றும் சொல்ல வேண்டியது.

## வித்தியா பலன்

குருவும், சுக்கிரனும், இரண்டாமிடத்தில் நின்று, புதன்கேந்திர மூலத்திரிகோணத்தில் நின்றால் வித்தை அதிக முண்டாம். இவர்கள் ஆறு, எட்டாமிடத்தில் நிற்க வித்தை லாபமில்லை, புதன் உச்சம்பெற்றிருந்தால் வித்தை பலிதமுண்டாம்.

புதனும், ஏழாமிடத்ததிபனும், குருவுங்கூடி கேந்திர திரிகோணம் பெற்ருலும் அல்லது தனது வீடாயினும், இரண்டாம் வீடாயினும் பகையில்லாதிருக்கில் தீர்க்கமுள்ள வித்துவாஞவான்.

புதன் ஒன்று, நான்கு, ஏழு, பத்திலிருக்க இரண்டாமிடத்தோனும் உச்சம்பெற்ற சுக்கிரன் உபயராசியிலேற மூன்ருமிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்க, சுக்கிரன் உச்சமாகில் இந்த ஜாதகன் சோதிட சாஸ்திரத்தில் வல்லவஞவான்.

இரண்டாமிடத்தோனும், குரு, சுக்கிரனும் மூலத்திரிகோணம் அல்லது உச்சமாய் நிற்க, அவர்களை பாவர் பாராதிருந்தால் தர்க்கசாஸ்திரத்தில் வல்லவஞ யிருப்பான்.

இலக்கினத்திற்கு திரிகோணகேந்திரத்தில் புதன் இருந்தால் தமிழ் வித்தை பெருகும், செவ்வாய் இருந்தால், தெலுங்கு வித்துவாஞவான். ஷ ஸ்தானத்தில் இராகு இருந்தால் துருக்கர் ஆரியர் நீச்சபாஷையில் நிபுண வித்துவாஞக இருப்பான். சுக்கிரன், விபாழன், இவர்கள் இருந்தால் சாஸ்திரங்களையும் அறியக்கூடிய வித்துவாஞக இருப்பான்.

இரண்டாமிடத்திற் குடையவனும் புதனும், உச்சமாகியும், இலக்கினத்தில் குருவும், சனி ஒருவனுமாய் எட்டாமிடத்தில் நிற்கப் பிறந்த ஜாதகன் கணிதவித்துவாஞம். இவனுக்கு கோபுராங்கிசத்தில் சனி நிற்க, செவ்வாய் அங்கிசத்தில் குரு நிற்க, சாஸ்திரங்களை ஓதுவான். இரண்டாமிடத்தோன், சூரியஞக அவரை புதன் பார்க்க, தர்க்கசாஸ்திர வல்லவஞக இருப்பான்

ஜன்மலக்கினத்தில், சுக்கிரனுங் குருவுங் கூடி நிற்க, அல்லது குருவும் சூரியனும் கலந்து சிங்காங்கிசத்தில் ஏறி நிற்க, சுக்கிரன் கடகவாங்கிசமேற, இப்படி நிற்கப் பிறந்தவன் சகல சாஸ்திரமுங் கற்று கீர்த்தியுடையவஞக இருப்பான்.

ஜன்மலக்கினத்தில், புதன், சூரியன், குரு இவர்கள் கூடி நிற்கில், தனமுடையவஞகவும், பலவாஞகவு மிருப்பான். சூரியன், சுக்கிரன், புதன், சந்திரன், சனி, வியாழன், இவர்கள் ஜன்மத்தில் ஒரு வீட்டில் கூடி நிற்கில் பிறந்த ஜாதகன் பிரபல வித்துவாஞகவும் தனவாஞகவும் இருப்பான்.

இலக்கினுதிபதிக்கு இரண்டாமிடத்தில் சுபக்கிரகமும், மூன்ரு மிடத்தில் பாபக்கிரகமும், நான்காமிடத்தில் சுபக்கிரகமும் நிற்கப் பிறந்தவன் தனவானுவான். இலக்கினுதிபதி உப யத்திலிருந்தாலும் தனவானும். இரண்டாமிடத்தில் பாக்கி யாதிபதி, இலாபாதிபதி பார்க்கில் நிற்கில் பிறந்த ஜாதகன் குறைவில்லாத தனவானுக இருப்பான்.

இலக்கினமுதற்கொண்டு இலக்கினுதிபதியிருக்கும் வீடளவும் எண்ணிக் கண்ட தொகையை இலக்கினுதிபதியைத் தொட்டு எண்ணி வருகையில் அந்த வீடு பாவர்வீடாகில் தரித்திர போகமென்றும், சுபர்கள் வீடாகில் தனவானுகவு மிருப்பன். ஜன்மலக்கினத்திற்கு இரண்டு, ஐந்து பன்னி ரண்டு இந்தவிடங்கள் சுபர் வீடாகில் தனவானுமாவான்.

ஜன்மத்தில் சனியும், நாலாமிடத்தில் சந்திரனும், ஏழாமிடத்தில் செவ்வாயும், பத்தாமிடத்தில் சூரியனும் குருவும், புதனும், சுக்கிரனும் இவர்கள் கூடி ஒரு வீட்டில் நிற்கப் பிறந்த ஜாதகன் இராஜயோகத்தை அனுபவிப்பான்.

எட்டு, ஆறில் பாபக்கிரகங்களிலிருந்து இலக்கினத்தைப் பாரா திருக்கப் பிறந்த சேய்க்குச் செல்வமுண்டாம். அல்லது மேற்சொல்லிய நால்வரும் மேற்கண்ட இராசிகளில் நீச்ராசி அல்லது மேற்கண்ட ஸ்தானங்களில் நீச்சமானவர்களோடு சேர்ந்து இருந்தாலும் தனவானுவான்.

சந்திர இலக்கினத்திற்கதிபதி உச்ச ராசியிலாவது அல்லது நீச ராசியிலாவது இருக்கில் தனவானும், சந்திரனேடு உச்சம் பெற்ற நற்கோள்கள் சேர்ந்திருக்க குடும்பஸ்தான முச்ச மாகி சுபக்கிரகங்கள் நிற்க, பிறந்த சேய்க்குச் செல்வமுண் டென்றறியவும்.

பத்தாமிடத்ததிபனும், இலக்கினுதிபனும், குடும்பஸ்தானுதிபதி யேறிய அங்கிசாதிபதியும் ஒன்று, நாலு, ஏழு, பத்தில் சுபர் பார்க்க நின்ருல் சிறுவயதுமுதல் தன்பாக்கியனுவான்.

ஜன்மாதிபதியும் மூன்ருமிடத்தோனும் பலவானுகவிருக்க புருஷக் கோள் நோக்கவும், மூன்ருமிடத்தோன் ஏறிய இராசியாதி

பதி அவரைப் பார்க்க அண்ணன், தாய், தம்பி, மாமன், இவர்கள் தனமும் வந்து சேரும்

இலக்கினத்திற்கும் சந்திரனிருக்கும் வீட்டிற்கும் இருபுறத்திலும் சுபர்கள் நின்றால் தனவானாவன். ஒரு வீட்டிற்கு இருபுறத்தில் நின்றால் பாதிபலனும். ஒரு வீட்டில் ஒரு புறத்தில் சுபர் நின்றால் காற்பலனாகும்.

மூன்றுமிடத்தோன் ஒன்பதாமிடத்தானோடு இருவரும் நட்பாய் இருக்கில் பிறந்த சேய்க்கு தமையனுடைய பொருள் கிடைக்கும்.

இலக்கினத்திற்கும் சந்திரனுக்கும் பத்தாமிடத்து கிரகங்களைக் கொண்டு பொருள் வரும் விபரம் அறியவேண்டியது. அது சூரியனாகில் தகப்பன் பொருளும் சந்திரனாகில் தாயார் சொத்தும், செவ்வாயாகில் தனது பொருளும், புதனாகில் பகைவர் பொருளும் கிடைக்கும். குருவாகில், நல்ல உற வோர் பொருள் கிடைக்கும். சுக்கிரனாகில் மனைவியால் பொருள் கிடைக்கும். சனியாகில் தனது வேலைக்காரர் களால் பொருள் கிடைக்கும். இந்தப் பலன் கூறுவது எவ் விதமெனில் ஜன்மலக்கினமும் சந்திரலக்கினமும் பத்தா மிடங் கொண்டு ஸ்தானம் விட்டு ஸ்தானம் மாறும் கிரகங் களைக் கொண்டு சொல்ல வேண்டும்.

பதினோராமிடத்திற் குடையவன் ஒன்பதாமிடத்தோனைக் கூடி நிற்க மூதாதையர்கள் தேடிய பொருள் கிடைக்கும். பத்தா மிடத்தோன் பாக்கியஸ்தானத்தில் நிற்கிலும், பத்துக்குடை யவன் நற்கோளாகி சுபக்கிரகங்களின் மனையில் இருந்தா லும் தருமவானா யிருக்கினும் பிரயாசைப்படாமல் நிதி தேடு வான். பத்தாமிடத்தோன் மெலிவுற்று இருக்கில் ஒருவரைச் சேவித்து தேடிய பொருளும் அற்பமாகும்.

பத்தாமிடத்தோன் உத்தமனாகி பத்தில் இருக்க, யாகாதி கருமங் கள் செய்து அருளோடு பொருள்தேடி சுகத்திலிருப்பன். மூன்றாமிடத்தோன் பலவானாக ஜன்மாதிபதி துர்ப்பலவா னாக லாபாதிபதி மூன்றுமிடம் மருவ, உடன் பிறந்தார் பொருள் வந்து சேரும். இலக்கினத்திலும், சந்திரலக்கினத் திலும், எந்தக்கிரகம் நிற்கின்றனவோ அந்தக் கிரகாதிபர் களால் தனங் கிடைக்கும்.

தனஞ்சேருவது, ஒன்பதாமிடத்தோன் திசையில்; பத்தாமிடத் தோன் புசிப்பில், அப்போது நடக்கும் கோசாரத்தில்

நாலாமிடத்தோன் பத்தாமிடத்திலிருக்க, பத்தாமிடத்தோனுக்கு நாலாமிடத்திலும், அல்லது அங்காரகனுடைய கேந்திரத்திலேனும் சேர்ந்து நிற்க, புறந்தோனுக்கு புராதனமான பூமிமணை இவைகளில் பத்தாமிடதததிபன் நிற்கும் திசையில் தனம் பொருள் புதையல் இவைகள் கிடைக்கும்.

ரிஷபத்தில், சந்திரன், விருட்சிகத்தில் குரு நிற்க, தனவானும். சுக்கிரன் வீட்டில், வியாழன் நிற்க, மகரத்தில் குஜன் நிற்க, குருவோடு, பூர்வபட்சத்து சந்திரன் கூட, புதனும், குருவும் கூடி நிற்க, இலக்கினந்தன்னில் சுக்கிரனுமிருக்க, நிறைந்த தனவானுகவும் கல்விக்கரசனுகவுமிருப்பான். சுக்கிரன் உச்சம்பெற, வியாழன், இலக்கினத்திலிருக்க சந்திரனைப் பாவர்கள் பார்க்க, பிரபலமாய்த் தனம் படைப்பான்.

ஒன்பதாமிடத்ததிபன் ஆறுமிடத்தில் நிற்க, மாமனுடைய பொருள் வந்துசேரும், ஒன்பதாமிடத்ததிபன் குருவாகி ஆறுமிடம் நிற்க, மாமியார்கையில் கிடைத்த பொருள் சேரும். ஐந்தாமிடத்ததிபன் சுபக்கிரகமாக ப்ாக்கியஸ்தானத்தில் நிற்க, தன் புத்திரிக்கு மணஞ்சூட்டி வைத்து அந்த மருமகனுல் தேடிய பொருள்களெல்லாம் தன் வசமாகி சுகமாக வாழ்ந்திருப்பான்.

வியாழனும், பத்தாமிடத்ததிபனும், சுபக்கிரகமாய் இலக்கினத்ததிபனுக்கு நட்புக்கிரகமாய் இவருடன் கூடவிருக்க இந்த சாதகனுக்கு பிதாவினுடைய பொருள் கிடைக்கும். இவர்களுடன் சந்திரன்கூட தாயாருடைய பொருள் கிடைக்கும். வியாழன் கூடில் மூதாதைகள் பொருள் கிடைக்கும். சுக்கிரன்கூடில் ஸ்திரீகளின் பொருள் கிடைக்கும் சனி கூடில் சேர்ந்தவர்கள் பொருள் கிடைக்கும். இராகு, கேதுகள் கூடில் ஈனத்தொழில் செய்கிறவர்கள் கூட ர் வந்து சேரும்.

பத்தாமிடத்ததிபன் சுபக்கோளாயிருக்க, சுபக்கிரகங்கள் வீட்டில் குருவும், சுக்கிரனும் இல்லாமல், வியாழன் நீசமாகித் தீயோர் வீட்டிலிருக்கப் பிறந்தவன் திரவியமில்லாதவனும். பத்தாமிடத்ததிபன், நாலாமிடமிருக்க புதையல் கண்டெடுப்பன் கல்வியினுலும் சுற்றத்தாராலும் தங்களாலும் பொருள் சேர்ப்பார்கள்.

இரண்டாமிடத்திற்கு ஒன்று, நாலு, ஏழு, பத்தில், குருநிற்க, இரண்டாமிடத்தோன் ஆறு, எட்டு, வியத்தில் நிற்க பிறந்தவனுக்கு தந்தையுடைய பொருள் யாதொன்று மில்லையாம்.

சந்திரனுக்கு இரண்டில் சனி நிற்கில், சந்திரனுக்கு நாலாமிடத் ததிபன் சுபக்கிரகங்களுடன் கூடி கேந்திரத்திலிருக்கப் பிறந்தவனுடைய தந்தையின் பொருளை அன்னியர் கைக் கொள்வர். தன்னுடைய அமிசையினுல் பொருள்தேடி பாக்கியவானுக அரசர்களின் உதவிப்பெற்று வாழ்வா னென்று கூறவும்.

நாலாமிடத்ததிபதியின் கேந்திரத்தில் சூரியன் நிற்க, நாலா மிடத்தில் சுபர்கள் நிற்க, பிறந்தவனுக்கு பிதாவின் சொத் தில் ஒரு காசும் கிடையாமல் பரதேசம் திரிவானென்று முன் ஞேர் கூறுகின்ருர்.

இரண்டாமிடத்ததிபன் வலிமையென்று கேந்திரமேறி நிற்க தனஸ்தானத்தோனும் கூடி உச்சமாகி நட்பாயிருக்க தனபதியாய் விளங்கி அறிவுள்ளோனுய்ப் பொருள்தேடி வாழ்வானென்று கூறப்படும்.

இரண்டாமிடத்ததிபன் இலாபத்திலிருக்க லாபாதிபதியும் பாக்கி யாதிபதியும் இரண்டாமிடத்தி லிருக்கப் பிறந்தவன் நல்ல தருமகுண முடையவனுய் நான்கு லக்ஷம் பொன்தேடி அல்லலில்லாமல் வாழ்வானென்று கூறுகின்ருர்.

தனுசு லக்கினமாகில் அதில் வியாழன் நிற்க, துலாத்தில் சனி யுச்சமாம், இலாபாதிபதி நாலாமிடத்தில் நிற்கப் பிறந்த வன் பொருள் தேடி நீதிவழுவாமல் பலரையும் இரட்சித்து கோடி பொன் தேடுவானென்று அறியவும்.

தனுசு, கும்பம், மீனம், கன்னி, ரிஷபம் இவைகளில் ஒன்பது கோள்கள் நிற்கப் பிறந்தவன் தேவலோகத்துக்குச் சமமா மாய் ப்ப கோடிச்செம்பொன்தேடி இராஜ்யம் ஆள்வன். இப் படியுமிருந்து இலக்கினம் தனுசாகப் பிறந்தவன் இதைவிட அதிக மேலாகவும் அனுபவிப்பானென்று அறியவும்.

திரேக்காணத்து இலக்கினுதிபதியும் சுக்கிரனும்கூட இலாபாதி பதி சுபவர்க்க மேறிடப் பிறந்தோன் உலகில் கோடிபொன் தேடி வாழ்வானென்றும் தெரிந்து கொள்வாயாக.

இரண்டாம் பாவபலன் முற்றிற்று.

# மூன்றும் பாவபலன்

மூன்றுமிடத்தில் சூரியனிருந்தால், புத்திமான், நல்ல சாமர்த்தியன், தனதானியவான், மிகுந்த சிற்றுண்டி உண்போன், விசனமில்லாதவன், கடினலோபி, தன்கோத்திரக் கீர்த்தியுள்ளவன் அதிகஞானவான், பராக்கிரமன், தியாகமுள்ளவன், களத்திரதோஷவான், பூமியில் விந்துகலிதன், வீட்டில் நிட்டுரவசனன், சபலபுத்தி, சகோதரமுள்ளவன், தீர்க்கயோசனை.

சந்திரன் இருந்தால் தமக்கைக்கு ஆகாது, வாதசரீரமாயிருப்பான், மூலரோகமுண்டு, முலைப்பால்பூச்சியன், சௌக்கியன், கருமயிலைநிறம் உடன்பிறந்தார ரதிகம், வித்துவான், சபையில் பேசமாட்டான், பிரதாபசாலி, சிநேகிதமுள்ளவன், சத்துரு மார்க்கமுடையவன், பெண் சகோதரன்.

செவ்வாய் இருந்தால் ஒருத்தருக்கும் தயாளமில்லாதவன், விபசாரமுடையவன், தோஷமுண்டு, திரவியமுண்டு, வேசிசம்போகன், சாமர்த்தியவான், தமையன் அரிஷ்டன், வெகு கனிஷ்டனுண்டு, திரவிய விர்த்தியுள்ளவன், சகோதரபூச்சியன், பந்து சிநேகிதன், விரதமுள்ளவன், பின்புத்தி யோசனை சொல்லுவான். அற்பகோபி, அதில் முன்கோபி, நிஷ்டுரவசனமுள்ளவன், கோபித்து பிரியப்படுவன், மனவஞ்சகன், துக்கமுடையவன்.

புதனிருந்தால் தமக்கைக்கு ஆகாது, வெகு சவுக்கியன், பால் பழம் அறுசுவையுடன் சாப்பிடுவான், கோத்திரமுண்டு சம்பன்னன், ஸ்திரீவாஞ்சையுள்ளவன், சகோதரவான் புதன் ஆக்ஷியானுல் தீரமுண்டு.

வியாழனிருந்தால், அதிகலுத்தன், சகோதர விர்த்தியுண்டு, தாக்ஷண்ணியமுள்ளவன், கிருஷி வாணிபமுள்ளவன், சரீர போஷகன், தன் ஜனத்தைப் போஷிப்பன், கூடப் பிறந்த சகோதரருக்கு நன்மையுண்டு, படிக்கிறதில் பண்புடையவன்.

சுக்கிரனிருந்தால், சகோதரவிர்த்தியுண்டு, தாக்ஷண்யமுண்டு, வச்ரசரீரம், கொஞ்சம் லச்சையுள்ளவன், கோபம், கலகம், பால் அத்தனையுமுள்ளவன்.

சனியிருந்தால், சகோதரத்துக்கானி, சம்பன்னன், துஷ்டன், தாசி சாவகாசமுள்ளவன், தனதானியவான், கிருஷித்

4

தொழிலுள்ளவன், பிரதானியா யிருப்பான், சேவகாவிருத்தியுள்ளவனுமாக யிருப்பான்.

இராகுகேது இருந்தால், ஐசுவரியம், லக்ஷுமிகடாக்ஷம், அற்புத்தி சகோதர பூச்சியன், தைரியவான் பிரதாபமுடையவன், கோத்திரவிர்த்தியுள்ளவன், கோபவான், காதுரோகமுள்ளவன், ஸ்தலபேதமுடையவன், அகாலபோஜனம் பண்ணுவான்.

3-க்கு அதிபன் 3-ல் இருந்தால் லாகிரிவஸ்து சாப்பிடுவான் மாபங்கப்படுவான், வீண் செலவு பண்ணமாட்டான், 3-க்கு அதிபன் எங்கேயிருந்தானோ அவன் அந்த ஸ்தானபலன் கொடுப்பான்.

செவ்வாயாவது சூரியனாவது இவர்கள் 3-6-8-ல் இருந்தால் பும் வரும், 3-க்கு அதிபன் ஆக்ஷி, உச்சம், திரிகோணம், நட்பினிலிருந்தால் வெகு தைரியவானா யிருப்பான். உயிர்போகுமளவில் தைரியம் விடாமல் தாஷ்டீகமாய் பேசுவான், 6-8-12-ல் பலவீனமா யிருந்தால் தைரியமில்லாதவனும் சாவுக்கு பயந்தவனாக இருப்பான்.

3-ல் இராகு அல்லது கேது இருந்து சனி கூடினால், அல்லது பார்க்கில் அவனுக்கு சகோதரமில்லை. செவ்வாயும் 3-க்கதிபனுமிருந்தாலும் நடுவே எத்தனைகால் கண்டதோ அத்தனை சகோதரம் சொல்லவும், அதில் ஆண் பெண் கிரகமறிந்து பலாபலன் பார்த்துச் சொல்லவும், அவன் எந்தப் பாவத்தைப் பார்த்தாலும் கூடினாலும் அந்தப்பாவம் நாசம்.

மூன்றுமிடத்ததிபனும் அங்காரகனும் நாலாமிடத்ததிபனும் கூடி இந்த மூவர்களும் குற்றமில்லாதவர்களாகில் தன்னுடைய சகோதரர் பங்குமனை தனக்குவந்து சேருமென்று அறியவும்.

அங்காரகனுடைய ஸ்புடத்திலிருந்து இராகுவினுடைய ஸ்புடத்தை கழித்து நின்றமிச்சம் எவ்வளவோ அந்த இராசியில் குரு வருங் காலத்தில் இளைய சகோதரர்களுக்கு அரிஷ்டம் வரும். இராகுவின் ஸ்புடத்திலிருந்து செவ்வாயின் ஸ்புடத்தைக் கழித்து நின்ற மிச்ச இராசியில் குரு வரும்போது மூத்த சகோதரனுக்கு அரிட்டம் வருமென்று அறிய வேண்டியது.

மூன்றுமிடத்தில் செவ்வாய் நிற்க, அல்லது பார்க்கிலும் துணைரில்லையால் பதினோராமிடத்தில் செவ்வாய் நிற்க, மூத்தோருண்டாம் இரண்டாமிடத்தில் செவ்வாய் நிற்க, துணை

ருடனே பிறக்கும், இவ்விதம் மும்மூன்றாகப் பார்த்து எண்ணி ஆண் பெண் இத்தனை யென்று அறிய வேண்டியது.

மூன்றுமிடத்ததிபன் இலாபாதிபதிக்கு உறவாகி, அதிகபலவானாகவும் மித்துருவுடன் கூடி இலாபத்தில் இருக்க அவருடன் வந்து கூடி பலமாக நிற்கும் கிரகம் எத்தனையோ அந்த தொகைப்படி துணைவருண்டாமென்றும் அந்த கிரகங்களின் செயலறிந்து ஆண் பெண் இத்தனை என்றும் சொல்லவேண்டியது.

கடகம், விருச்சிகம், மீனம் இலக்கினமாகக்கண்டு அதையொன்பது பாகம் செய்து அதில் ஐந்தாம் பங்கில் பிறந்தவனுக்குப் பின் பிறந்த கன்னிக்கு இலக்கினம் கடகமாகில், தூலதேகத்தை யுடையவளாக இருப்பாள் விருட்சிகமாகில் பேய்போல் கால் கைகள் குருகிப்பெருத்து உருக்குலைந்து இருப்பாள். மீனமாகில் மூடமாகித் திரிவாளென்று அறிய வேண்டியது.

மூன்றுமதிபதியின் கிரகஸ்புடத்தில் செவ்வாயின் ஸ்புடத்தைக் கூட்டி அதை பன்னிரண்டால் கழித்து வந்த மிச்சம் எத்தனையோ அந்த ராசியில் குரு வரும்போது சகோதரர்கள் உண்டாவார்கள். அவ்விதம் ஸ்புடங்களைக் கூட்டி மேஷ முதல் அங்கிச இராசிவரையில் எண்ணிவர தொகை எத்தனையாகிறதோ அந்தனை சகோதரர்கள் உண்டாவார்கள். மேற்சொன்ன இராசியில் பாவக்கிரகங்கள் வருங்காலத்தில் சகோதரர் பீடையும் நஷ்டமுமுண்டாகும்.

ஆறுமிடத்தில் இராகு பலவானாயிருக்க அவன் திசை நடக்கும் போது சகோதரமார்க்க முண்டாகுமென் றறியவேண்டியது. சகோதரர்கள் அங்கிச இராசி ஆண் பெண் இத்தனையென்று சொல்லுமிடத்தில் தகப்பனுக்கு ஒன்பதாமிடத்திற்கு ஒன்பதா மிடத்தோனாலும் தாயாருக்கு நாலாமிடத்திற்கு நாலாமிடத்தோனாலும் இளைய சகோதரத்திற்கு மூன்றுமிடத்திற்கு மூன்றுமிடத்தோனாலும் மூத்த சகோதரத்திற்கு பதினோராமிடத்திற்கு பதினோராமிடத்தோனாலும் மாமனுக்கும் புத்திரர்களுக்கும் ஐந்தாமிடத்திற்கு ஐந்தாமிடத்தோனாலும் சகோதர பாகம் கூறவேண்டு மென்பதாம்.

மூன்றுமிடத்தில், சுபக்கிரகம் பலமாயிருக்க அல்லது பார்க்க மூன்றிற்குடையவனும் அதிக பலமாகவிருக்க மூன்றில் எந்தக் கிரகம் உச்சமாகுமோ அந்த கிரகமும் வந்திருக்கப் பிறந்த

வன் காதுக்கணிகலமாகிய கர்ணபூஷணங்களை யணிந்தும் அதுகளை காப்பாற்றவும் செய்வார்களென் றறியவும். அப்படி மேற் சொன்னவிதமாக யிருக்குமிடத்தில் சுக்கிரன் மூன்றுமிடத்தில் இருந்தால் முத்துக்களினுல் செய்யப்பட்ட கடுக்கனையும் குரு விருந்தால் அபரஞ்சிக் கடுக்கனையும் புதனிருந்தால் சாமள வர்ணக்கடுக்கனையும், சந்திரனிருந்தால் சகலவிதமான ஆபரணங்களையும் அடைவார்களென்பதாம்.

சனியும் இராகுவுமிருந்தால், நீலவர்ணக்கடுக்கனும் கேதுவிருந்தால் சிகப்பு வர்ணக்கடுக்கனும் அணிவனென்பதாம். மூன்றுமிடத்துக்குடையவன் ஏறிநின்ற வீட்டுக்குடையவன் பலவானுயிருக்கில் காதுக்கடுக்கனும் சகலாபரணங்களு முண்டாம். இவைகளெல்லாம் இடது காதுக்கென்றும் லாபாதிபதி ஏறி நின்ற வீட்டிற்குடையவன் கேந்திரத்திலேறி நல்லோர்கள் பார்க்க விருந்தால் வலதுகாதுக் கணிகலங்களும் அதிகமாக உண்டாகு மென்பதாம்.

மூன்றுக்கதிபன் இரண்டுக்கதிபன் லாபாதிபதி இந்த மூவர்களும் பாவர்கள் பார்க்கும்படி தனியே நின்ருல் சாப்பிடுவதற்கு பாத்திரங்களில்லாதவனுகவும், இரண்டாம் வீட்டில் சூரியனும் சனியுமிருக்க இரண்டாம் வீட்டிற்குடையவன் மூன்ருமிடத்தில் சுபக்கிரகங்கள் பார்க்கவிருந்தால் வெள்ளியினுல் செய்யப்பட்ட கலங்களும் பாவக்கிரகங்கள் பார்க்கவிருந்தால் வெண்கலப்பாத்திர முடையவனுகவு மிருப்பானென் றறியவும்.

மூன்ருமிடத்தில் நீசக்கிரகமிருக்க நாலாமிடத்துக் குடையவன் சஷ்டாஷ்டம வியங்களிலிருக்கப் பாவிகள் பார்க்க * களரோகம் வரும். மூன்ருமிடத்திற் குளிகனிருக்க மூன்ருமிடமுடையவன் ஆருமிடமுடையவனுடனேகூடி இராகு குளிகன் பார்க்க களரோகம் வரும்.

சுக்கிரனும் சந்திரனும் பலவானுகை சுபர்கூடப்பார்க்க பொன்பாத்திரத்திற் சாப்பிடுவான். மூன்ருமிடத்தில் புதனிருக்க சவுமியாள் பார்க்க காரகனு மப்படியே யிருக்கக் கடுக்கன் அணிவான்.

மூன்ருமிடத்தில், பாவிகளிருக்க மற்றக்கிரகங்கள் அபரோகத்திலிருக்க விசேஷமாய்க் களரோகமுண்டு. மூன்ருமிடத்தில் இராகு விருக்க சுபர் பாராதிருக்க களரோகம் வரும்.

* களரோகம்-ஓர் வியாதி

செவ்வாயுடனே ஆருமிடத்துக் குடையவன்கூடி சஷ்டாஷ்டம வியத்திலிருக்க செவி கெட்டுப்போம், மூன்ருமிடத்திற் சுக்கிரனிருக்க வியாழன்பார்க்க அல்லது இருக்க நீலக்கல் கடுக்கன் போடுவான்.

சந்திரனுடனேயும் செவ்வாயுடனேயும் சவுமியாள்கூட வயிரக்கல் பதித்த ஆபரணம் பூணுவான். சந்திரன், வியாழன், புதன், இவர்கள் மூன்றிலிருக்கப் புராணங்கள் கேட்பன் புண்ணியவான்.

மூன்ரும் பாவபலன் முற்றிற்று.

---

## நான்காம் பாவபலன்

சூரியன் இருந்தால் அங்கவீனன் பீடையாயிருப்பான். ஜனங்களுக்கு விரோதி, பந்துக்களுக்கு விரோதி, திரவியம் பூமி இவைகளை யிழந்து விடுவான். அதிக மனஸ்தாபமுள்ளவன், பல விசார முடையவன்.

சந்திரன் இருந்தால், குதிரையுண்டு, சந்தன புஷ்பப் பிரியன் வெகுஜன போஷகன், வீடு விஸ்தாரமாகக் கட்டுவான்.

செவ்வாயிருந்தால், மாதுருகண்டம், பிதுர்ரோகம், வீட்டில் சண்டை. பராதீனம், களத்திரபீடை, தைரியமுள்ளவன், ஸ்திரீகளுக்கு வெறுப்புண்டு, இராஜாவிடத்தில் கோபியாவான், தீர்க்காயுளுண்டு.

புதனிருந்தால், வித்தையுண்டு வெதுவினையன், பண்டிதன், கீர்த்தியுள்ளவன், தரித்திரனுவான், வாகனட்னுதை ‑ஜனிய முள்ளவன் பந்து ஜனங்கள் ஆதிபத்தியமுள்ளவ... ன தூஷணமுள்ளவன், சுகபோஜனமுண்டு, கல்வியுண்...

வியாழனிருந்தால், சுகஜீவனம், சோபனமுண்டு, பால்... சு பாக்கிய முடையவன் வாகனமுண்டு. ஜனங்களை போ...ப் பான், வீடு பந்துக்கள் விஸ்தாரமுண்டு, நல்ல தர்மமுள்ள வன், புத்தி வித்தையுண்டு, மாதாவுக்கு தீர்க்காயுளுண்டு. சுகசரீரம்.

சுக்கிரனிருந்தால், போசனப்பிரியன், மாதுரு சௌக்கியன், நானுவிதத் தொழிலில் லாபமுண்டு, பால்பாக்கிய முடையவன்,

வாகனக் குதிரையுடையவன், பந்து ஜனப்பிரியன், தா
தானிய முடையவன், சகோதரமுண்டு, வித்தை கல்
புத்தி யுடையவன், பண்டிதன், ஸ்திரீவிரோதன் மாத
வுக்கு அற்பாயுளுண்டு.

சனியிருந்தால், மாதுருகண்டம், மாதா இரண்டு, மூலரோக
சௌக்கியமில்லை, மித்திரபேதங் கற்பன், எள் உளுந்
பிரியன், பெரிய மனுஷாள் சேர்க்கை, பூர்வ சம்பாத்தி
பூமியை போக்கிடுவான், சரீரபுஷ்டி, சகோதரமுண்டு
வாகனமுண்டு, பந்துக்கள் விரோதம்.

இராகு கேது விருந்தால், வெகு பூஷணமுண்டு, பெண்சா
இரண்டு, மாதா இரண்டு, சேவகவிர்த்தி, மூடன், கல்வி
னுக இருப்பான்.

நாலாமிடம் சுபக்கிரகங்களிருக்க, தனமும் பிரபுக்கள் சேர்க்கை
முண்டு, சுபரும் சனியும் நிற்க, பிரதேசவாசம் பண்ணு
வான், சத்துருஸ்தானமிருந்தால் இனத்திலே தள்ளப்
டிருப்பன். செவ்வாய் பாபருடன்கூடி இருக்க இரு
நட்புகள் அற்பமாயிருக்கும். செவ்வாயும் சனியும் நிற்க, ஏ
காரியமும் ஒருவரறியாமல் செய்வான். சுக்கிரனும் வியா
னும் நிற்க வித்துவானுவான். எந்தக் காட்டிலே போனு
சகல போக பாக்கிய மனுபவிப்பான், குருவும் சனியுமி
தால் இராஜயோகம், குதிரை, யானை, பல்லக்கு, வெ
ஜனங்களைப் போஷிப்பான்.

சூரியன், சந்திரன், இராகு, செவ்வாயிருக்க, பிறந்தவன் வீ
பகையாய்ப்போம். இவர்கள் பலத்திருந்தால், பிறந்த
வீடு மூன்று வருஷத்தில் ஜீரணம், அக்கினிவாதை, பா
பெருச்சாளி குடியிருக்கும். இடம் பேதிக்கும், கிட்டின ப
வர்க்கத்தில் மனவருத் தமுண்டு.

சந்திரன், பாவருடன்கூடி நாலில் இருக்க, வயிறு அல்லது கா
நோய் உண்டு.

ஒன்பதுக்கதிபனும் இராசிக்கதிபனுங்கூடி ஒன்பதில் நா
இருக்க அப்பாவகன் பதினறு வயதுக்குமேல் யோகவா
இராஜபூஜிதனுக இருப்பான்.

நாலு ஒன்பதுக்கதிபன் சுபனுக ஒரு இராசியிலிருந்தால் செ
ஜனங்களுக்கு அதிகாரியாக இருப்பான்.

நாலாமிடம் சுபவீடாக இருந்து அந்த வீட்டுக்கதிபன் திரிகோ ணம்கேந்திரம் நட்பாயிருந்தாலும், அவனை சுபர் பார்த்தாலும், அவன் பிறந்த வீடு கெட்டி மச்சுவீடாயிருக்கும்.

அல்லது பாபர்வீடாயிருந்து ஆறு எட்டு பன்னிரண்டி லிருந்தாலும் நீசம் அஸ்தங்கிதனு இருந்தாலும், அவன்கூரைவீட்டில் பிறந்தவனுக இருப்பான். அல்லது பாபருடையவீடாயிருந்து பாபர் பார்த்தாலும், பகைவீடாயிருந்தாலும், சொந்த மில்லாத அஜீரணமான கூரைக்கட்டு வீட்டில் பிறந்திருப்பான். இலக்கினத்துக்கு ஆறு இராசிக்குமேல், மூன்றும் இராசிக் கதிபன் பலவீனமா யிருந்தால் அவருக்கு சொந்தவீடில்லை அவன் பலத்திருந்தால் வீடு உண்டு.

ஒன்பதுக்கதிபன் நாலில் இருக்க அவருடன் சுபர் கூடில் அல்லது சுக்கிரன், வியாழன் பார்க்க அவன் திசையில் ஏழுக்கதிபன் புத்தியில் நல்ல வாகனம் பெறுவான்.

சந்திரன் கூடினுல் குதிரையுண்டு; நாலுக்கதிபன் பலத்து, ஏழுக் கதிபன் நட்பு, ஆக்ஷி உச்சமாயிருந்தால் அவன் கனகதண் டிகை ஏறி வெண்சாமரம் வீசும்படியான யோகவானு யிருப்பான்.

நாலுக்கதிபன் ஒன்பதிலிருக்க, ஒன்பதுக்கதிபன் நாலில் இருக்க அது சுபர்வீடாயிருந்து, சுபர்பார்க்க அல்லது கூடினுல் அவன் நரவாகனமும், அசுவவாகனமும் உடையவனுக இருப்பான்.

நாலுக்கதிபனும், சந்திரனும் ஒரு இராசியிலிருக்க அல்லது இரா சிக்குடையவனும் கூடியிருக்க பார்க்க அவனுக்கு குதிரை வரும். சுக்கிரன் இந்தால் தண்டிகைவரும் வியாழன் இருந் தால் திரவியம் வரும்.

நாலில் வியாழன் இருந்து இராசிக்கதிபன் பலத்திலிருந்தால் அவன் ஆனை குதிரை தளங்கள் முதலானதை அனுப விப்பன்.

நாலுக்கதிபனும் வியாழனும் இலக்கினத்திலிருந்து புதனுடன் கூடி யிருந்தால் அவன் வீடு வெந்து தனதான்னிய சேத மாய் தரித்திரவானு யிருப்பான்.

நாலில் குளிகன் இருந்தால் பிள்ளை ஒருவன் வீட்டில் வளருவான். வியாழன் சுக்கிரன் சந்திரன் இருந்தால் மகாசௌக்கியமாய் போக பாக்கியங்களை அனுபவிப்பான், தருமம் செய்வான்.

நாலுக்கதிபன் கேந்திரத்திலும், இரண்டுக்கதிபன் லக்கினத்தி லும் இருந்தால் வெகுபணக்காரனு யிருப்பான்.

நாலாமிடத்தை சனி செவ்வாய் பார்த்தாலும், நாலுக்கதி னுடனே கூடினாலும் மாதுருக்கு விபசாரி தோஷமுண்டு.

நாலுக்கதிபனுடனே இராகு கேது கூடினால் அவனுக்கு பாபி யான பெண்சாதி அமருவாள்.

சந்திரன் வாகனாதிபதி ஜன்மாதிபதி இம் மூவர்களும் ஒன்று கூடி நிற்கில் இவனுக்கு அசுவவாகனங் கிடைக்கும். இவ களோடு சுக்கிரன் கூடில் தண்டிகை கிடைக்கும். நா மிடத்திற் குடையவன் கெட்டுப்போகாமலும், வியஸ்தான திலு மில்லாதிருந்தால் சிவிகை யுண்டென்றும் சொல் வேண்டும்.

பாக்கியாதிபதி வாகனஸ்தானத்தில் குரு சுக்கிரனோடு கூ யிருக்க அல்லது பார்க்க, இவனுக்கு கனகதண்டிகை வரு இவர்ளோடு சந்திரன் பாபியுமாகக் கூடி நிற்கில், இவனு பூச்சக்கரக்குடை கிடைக்குமென்று சொல்லவேண்டும்.

வாகனாதிபதி பாக்கியத்தில் நிற்க, பாக்கியதானாதிபதி கேந்தி தைப்பற்ற, இருவர்கள் நிற்கும் இராசி நல்லோர் மனைய இருக்க சுபக்கிரகங்களோடு கூட இலக்கினாதிபதி வாக ஸ்தானத்திலும் கேந்திரத்திலுமேவ, இவனுக்கு கன தண்டிகையும் மிகுந்த தனமும் யானை வாகனமும், வாக காரகனாகிய சுக்கிரன் கொடுப்பானென் றறியவேண்டும்.

சுக்கிரன் நாலாமிடத்ததிபனுடன் கூடினாலும், அல்லது இருவ கேந்திரமேறினாலும், நாலாமிடத்தோன் சந்திரனுடன்லாப தில் நிற்கினும், வாகனலாபமுண்டாம். நாலாமிடத்தில் வி விருக்க நாலாமிடத்தோனை சுக்கிரன் கூடில் தண்டிகை கிடைக்கும். சுக்கிரன் நாலாமிடத்தோனாகி ஜென்மாதிப யைக் கூடில் வெறுஞ்சஞ்சாரமே என்று அறியவேண்டும்.

சந்திரனுக்கு மூன்றுமிடத்தில் சுக்கிரன் இருக்க, சுக்கிரனு மூன்றுமிடத்தில் சந்திரன் இருக்க, அல்லது ஒருவர்க்கொரு வர் பார்த்திருக்க குடும்பஸ்தானத்தை நல்லோர் நோக்க அல்லது இலக்கினத்தைப் பார்க்கிலும், இவனுக்கு வாகன கிடைக்கு மென்று அறிய வேண்டியது.

நாலாமிடத்ததிபன் இலக்கினத்தில் நிற்க, இவனுக்கு பல கோடு செல்வ முண்டாய் வாழ்வன். இலக்கினத்தில் வி மூன் நிற்க, அவரை நல்லோர் பார்க்க, தண்டிகை மெனக் கூறவும்.

வாகனாதிநின்ற இராசி நல்லவர் வீடாய் பணபரம் அல்லது கேந்திரமாகியுமிருக்க, சனித்த சிறுகுடிசையானது பெரிய வீடாகும், தாயாருக்கு இன்பமுமுண்டாகும்; வாகனாதிபதி சனி குருவாகில் தண்டிகை கிடைக்குமாம். பூர்வபக்கத்து சந்திரனாகில் பூச்சக்கரக்குடை கிடைக்குமாம். சுக்கிரனாகில் பல்லக்குண்டாம். மாடு முதலிய வாகனங்கள் கிடைக்கும். புதனாகில், விசித்திரப் பல்லக்கு வாகனமாக கிடைக்கும்

நாலாமிடத்தோன் ஸ்புடத்தோடு சுக்கிரன் ஸ்புடத்தைக் கூட்டிக் கண்ட ராசியிலும் அதற்கு கேந்திர திரிகோண ராசிகளும், குரு வருங்காலத்தில் வாகன லாபங் கிடைக்கும்.

சுக்கிரனுக்கு மூன்று எழில் சந்திரனிருக்க, சந்திரனுக்கு மூன்று எழில் சுக்கிரனிருக்க இவனுக்கு வாகனமுண்டாம்.

நாலாமிடத்தோன் நல்லோருடன் கூடி சந்திரகேந்திரம் பெற்று நிற்க வாகனமோடு திரவியந்தேடி நாட்டில் அரசனைப் போல் வாழ்ந்து நல்ல புத்திமானாக இருப்பான்.

நாலாமிடத்தாதி இலக்கினாதியோடும் பாவியோடுங்கூடி ஒரு வீட்டில் நிற்க, அந்த வீடு ஜென்மாதிபதியின் உச்சமனையாகில் இவனுக்கு குதிரைவாகன முடையவனும் புத்திமானும் மன்னர்களை எந்நாளும் சேவித்து வாழ்வான்.

ஜன்மாதிபதியும், நாலாமாதிபதியும், நல்லோர்களும், கேந்திரத்திலிருக்க நல்ல பலனுண்டாம்.

சூரியன், சந்திரன், சுபக்கிரகங்கள் இவர்கள் மூவரும் ஒன்றாய்க் கூடி கேந்திரத்திலிருக்க, ஆனைவாகனம் வந்து சேரும்.

ஜன்மாதிபதியும், பத்தாமாதிபதியும் நிறைந்த சுபரோடுகூடி கேந்திரத்தில் நிற்க மதகரி வாகனம் சேரும். பருவமுள்ள நல்ல சவுந்தரியமான மனையாளை மருவுவன்.

ஜன்மாதி, இலாபாதி, நல்லோர்கள் இவர்கள் மூவரும் சேர்ந்து கேந்திரத்திலிருக்க சுபம் உண்டாகும்.

ஜன்மத்திலும், பத்தாமிடத்திலும், உத்தமகிரகங்களிருக்க அன்னியரால் அதிகார முடையவனுவன்.

ஜன்மாதிபன், பத்தாமதிபனோடும் நல்லோர்களோடும் மேவி நிற்க, இவன் அரசர்களைச் சேவிக்கும் ஆபரணாதிகளைப் பெற்றும், சத்திர சாமரைகளோடு கூ... வும் கீர்த்திமானாக இருப்பான்.

5

ஜன்மாதிபதி பத்தாமிடத்திலிருக்க, பத்தாமிடத்தாதி நாலாமிடத்திற்கூட, நாலாமிடத்தோன் உச்சமாக, இவன் வேந்தனாவும், சுகவானுகவும் வெகு லீலாவினேதனுகவு மிருப்பன்.

பத்தாமிடத்ததிபன், நாலாமிடத்தில் நிற்க, நாலாமிடத்தோன் பத்தில் நிற்க, ஜன்மாதிபன் உச்சனுக இருக்க, பலவிதமான வாகனங்களோடு மன்னவனுக இருப்பான்.

இரண்டாமாதிபதி இலாபத்தில் நிற்க, இலாபாதிபதி இரண்டாமிடம் மேவ நாலாமாதிபதி யுச்சமாக நிற்க, சகல வாகனங்களோடு அரசனுக இருப்பான்.

இரண்டாமாதிபதியும், இலாபாதிபதியும் இரண்டாமிடத்திலிருக்க பத்தாமாதிபன் உச்சமாகவிருக்க தண்டிகையுண்டாம்.

மாதுர்ஸ்தானுதிபதி சனியோடுகூடி அட்டமத்தில் நிற்கவும், பின் கோச்சாரத்தில் மாதுர்ஸ்தானத்திற்கு ஐந்து ஒன்பதாம் சனி வருங்காலத்திலும் தாயாருக்கு அரிட்டம்.

ஷ ஸ்தானங்களில் நற்கோள்கள் உச்சமாகில் நன்மையுண்டாம்.

நாலாமிடம், இரண்டாமிடம், ஏழாமிடத்திற் றுடையவர்கள் மேற்கண்ட ஸ்தானங்களில் சனி செவ்வாயுடனேகூடி இருந்தாலும், நாலு இரண்டு, ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க சனி பார்த்தாலும் தாயாருக்கு அரிட்டம்.

சனி செவ்வாய் இவர்களுக்கு ஐந்து, ஏழு, ஒன்பதாமிடங்களில் சந்திரன் நின்ருல் தாயாருக்கு தோஷம். குரு பார்த்தால் தோஷமில்லை.

இலக்கினத்தில் சந்திரன் நிற்க, பாவக்கிரகம் அதைப் பார்க்க ஏழாமிடக்தில் செவ்வாய் நிற்க, பிறந்த பிள்ளையை பிறர் வளர்ப்பார்கள்.

பன்னிரண்டாமிடத்திலும், இரண்டாமிடத்திலும், இலக்கினத்திலும் சந்திரன் பாவரோடுகூடி இருந்தால் அன்னைக்கு அரிட்டம்.

நாலாமிடத்ததிபன் திசையில் மாதுருஸ்தானத்திற்கு எட்டாமிடத்தில் சனியும், நாலாமிடத்ததிபனுங் கூடிநிற்க, அன்னைக் கரிட்டமாம்.

நாலாமிடத்தோனுடனே செவ்வாயாகிலும் சூரியனுகிலும் கூடிவு இடருண்டாம்.

புதன் ஷ நாலாமிடத்தோனுடன் கூடியிருக்க நோயுண்டாம்.

புதனும் நாலாமாதிபனும், தீயோர் வீட்டில் சுபக்கிரகம் பார்வையில்லாமல் வந்து நிற்கும் காலத்தில் அன்னைக்கரிட்டம்.

நாலுக்குடையவனுடன் தனுதிபதிகூடி எங்கேயிருந்தாலும் தனம் சேதமாகும்.

அன்னைக்கு நாலாமாதியுடன் சனி, செவ்வாய் கூடில் அவர் திசையில் அன்னைக்கரிட்டம் வரும்.

நாலாமிடத்தில் செவ்வாய் நிற்க, சனியும், சந்திரனும் மருவி எங்கேயிருந்தாலும் அன்னைக்கு மரணம் வரும்.

மாதுர் ஸ்தானுதிபதி அஸ்தங்கமாய் வியத்தில் நிற்க, நாலாமிடத்தில் சந்திரன் நிற்க, இவர்க்கேழில் சனி இருந்தாலும், சுக்கிரனுக்கு ஏழில் செவ்வாய் நிற்கவும் அன்னைக்கு அரிட்டம் வரும். சுபக்கிரகங்கள் இவர்களைப் பார்த்தால் தோஷமில்லை.

சூரியனுடன் சனி சேர்ந்து குடும்பஸ்தானத்திலிருந்து மூன்றுமிடத்ததிபனையும் நாலாமிடத்தையும் சனி பார்க்க, சந்திரன் பாம்புகளுடனேயாவது பாவிகளுடனேயாவது சேர்ந்து பலமற்றிருக்கும்போது நாலுக்குடையவன் உச்சமாயிருந்தாலும் தாய்க்குப் பீடை.

மாதுர்ஸ்தானத்தில் சந்திரனும், சுக்கிரனும், பாம்பும் மூன்று பேருமிருக்க, இவர்க்கு ஏழில், ஐந்தில் சனி நிற்க, சூரியனுடன் மூன்றுமிடத்தோன் ஐந்தாமிடத்தில் நிற்க, இவர்களை சனி பார்க்க குடும்பஸ்தானத்தை அங்காரகன் பார்க்க, தாய்க்கு அரிட்டம்.

மேடலக்கினத்திற்கு மாதுர் ஸ்தானத்தில், சுக்கிரனும் புதனும் நிற்க அதற்கேழில் குரு நிற்க, அப்போது சந்திரனுக்கு ஏழில் சனி யிருந்தால், மாதாவைப்பெற்ற மாதா போய் விடுவாள்.

சந்திரனுச்சமாகி சுபக்கிரகங்கள் பார்க்க அன்னைக்குத் தோஷமில்லை. சனியும், அங்காரகனும் இரண்டாமிடத்தையும், நான்காமிடத்தையும் பார்க்கில், மாதுர்காரகனும் வலிமை கெட்டு விரையத்தில் நிற்க, அன்னைக்கு பலமான நோய் காணும்.

அங்காரகனோடு பாம்பு வலிமைபெற்று இரண்டு நாலாமிடத்தைப் பார்க்க, மாதுர் காரகனும் முன்போல் கெட்டு நின்றால் அன்னைக் கரிட்டமாம். வியாழன் பார்த்தால் பூமியில் சிலகாலமிருப்பான்.

நாலாமிடத்திற்கு இரண்டாமிடத்தி லிருந்தவர்களும், குடும்பாதிபதியும் பலவான்களாகில் அன்னைக்கு சவுக்கியமுண்டாம்.

நாலாமிடத்ததிபன் உச்சமாகி ஆண் அங்கிசத்திலிருந்தால், அன்னை புருஷனுடைய கண்டிப்புக்குள்ளாகாள்.

சந்திரலக்கினத்திற்கு ஏழில் செவ்வாய் நிற்கில் அன்னைக்கரிட்டமாம். மாதுர் ஸ்தானம் கடகமாகில் அதில் சந்திரன் நிற்கில் வயது பூரணமாம்.

இதற்கு இரண்டுபுறமும் பொல்லாக்கிரகங்கள் நிற்க, சந்திரன் நடுவில் நிற்க, தாயாருக்கு அரிட்டம்.

மாதுர் ஸ்தானுதிபதியும், பிதுர்ஸ்தானுதிபதியும் சூரியனுடன் கூடி 6 8-12-ல் நீசமாகி நீசஸ்தானத்தில் நிற்க, பிறந்த பாலன் தாய் தந்தைக்குப் பிரியமில்லாத பிள்ளையாவான்.

மாதுர்பிதுர்ஸ்தானுதிபதிகள் சேர்ந்து எந்த ஸ்தானத்திலிருந்தாலும், சந்திரனும் சூரியனும்கூடி மாதுர் பிதுர்ஸ்தானங்களில் நிற்கில், தாய் தகப்பனுக்கும் மரணமுண்டாம்.

நாலாமிடத்தோனும் ஒன்பதாமிடத்தோனும் பலத்திருக்கில் பாலனுக்குப் பெற்றோரால் சுகமுண்டு.

நாலாமிடத்தோனும், ஒன்பதாமிடத்தோனும், தனத்திலும், பாக்கியத்திலும் இலாபத்திலும், சுகமாயிருக்கினும் அல்லது உச்சத்திலும், கேந்திரத்திலும், திரிகோணங்களிலும் மேவி நிற்கில், தாய்தந்தை மைந்தர்களோடு சந்தோஷமாக வாழ்ந்திருப்பன்.

ஒன்பதாமாதிபதியும், ஜன்மாதிபதியும், நான்காமாதிபதியும், பெலமற்று இருக்க, தாய் மறுகர்ப்பமாக யிருக்கும் நாளில் அரிட்டம்.

சந்திரனும் செவ்வாயும் ஆருமிடத்தோனுங்கூடி நாலாமிடத்தில் நிற்கில், தாய் சோரம் போவாள்.

நாலாமிடத்தோனும் ஒன்பதாமிடத்தோனும், லக்கினுதிபதியும் கூடி திரிகோண கேந்திரங்களில் நிற்க, தாயார் வரமுறையில்லாத பரஸ்திரியாவாள்.

பத்தாமிடத்ததிபனும், நாலாமிடத்தோனும், அங்காரகனும், 6-8-12-ல் நீசஸ்தானத்தில் நிற்க, இவனுக்குப் பங்குமனையில்லை. இந்தக் கிரகங்கள் பலமுற்றுநிற்க, மனைபங்கு லாபமுண்டாம் நாலாமிடத்தோன் உச்சம்பெறின் மாடகூட முண்டாகும்.

நாலாமிடத்தோன் சத்துரு வீட்டிலும், நீசத்திலும் நிற்க, வியத்தானுதிபதி தனஸ்தானத்தில் நிற்க, இலக்கினுதிபதியும், சூரியனும் நாலாமிடத்தோனுங்கூட நல்லோர் பாராதிருக்க, இவன் தன்பங்கு மனையாவுங் குறையாய்ப் போய்விடும்.

ஆறுமிடத்ததிபதி பத்து ஏழில் நிற்க, இலக்கினத்தில் அங்காரகன் நிற்க, சுபக்கோள் பார்க்க, அல்லது சேர, சத்துருக்களின் மனைகளெல்லாம் வந்து சேரும்.

நாலாமிடத்ததிபன் இலக்கினுதிபதியோடுகூடி நாலாமிடத்தில் நிற்க, இவன் ஒருவர் வீட்டிலிருந்து வாழ்வன்.

நாலாமிடத்தோனுடன் சேரும் பாவர் எத்தனையோ அத்தனை வீடு கட்டி சேதமாகும்.

இலக்கினுதிபதி பலமற்று ஆறுமிடத்திலும் பன்னிரண்டா மிடத்திலும் நிற்க, ஜன்மத்தைப் பாவர்காண, இவனுக்கு மனை பங்கு மில்லை.

வியஸ்தானுதிபதி இரண்டாமிடத்தில் நிற்க, நல்ல வீடுகட்டி சகல பாக்கியமுஞ் சேர்ப்பன்.

அதில் வியஸ்தானுதிபதியோடு எத்தனை கிரகங்கள் சேருகின்றதோ அத்தனை வீடுகட்டிச் சமர்த்தனுக வாழ்வன்.

ஜெனனமான இராசி சரமாகில், பரதேச சஞ்சாரஞ் செய்வன், திரராசியாகில் சுதேசந்தன்னில் வாழ்வன்.

உபயராசியாகில் பரதேசத்தில் சிலநாளும், சுதேசத்தில் சில நாளுமாய்ச் சஞ்சாரஞ் செய்வன்.

பன்னிரண்டாம் வீடு சுபர்வீடாகில் இராஜபிரபுக்களை யடுத்து வாழ்வன். அது சூத்திரஜாதி கிரகத்தின் வீடாகி இலாபாதிபதிக்கு உறவுபெற்று இருக்கில், சூத்திரர் மனைக்கருகில் வாழ்வன்.

பன்னிரண்டாமதிபன் மாதுர்ஸ்தானம், சகோதரஸ்தானம், பிதுர்ஸ்தானம் களத்திரஸ்தானம், புத்திரஸ்தானம் இவை

களில் போய் நிற்கிலும், அந்த ஸ்தானுதிபதியுடன் சேரினும் அந்தந்த அதிபர்களின் வீடுமனை அந்தந்த கிரககாரகர்களால் கிடைக்கும்.

நாலாமிடத்தை பாபக்கிரகங்கள் மருவிநிற்க, அல்லது பார்க்க ஜன்மாதிபதி பலமில்லாதிருந்து பாவரோடு கூடிநிற்க, நல்லோர் பாராதிருக்க இவன் பரஸ்திரீலோலன்.

ஜன்மாதிபதி நாலாமாதிபதி பாக்கியாதிபதி இவர்கள் மூன்று பேரும் ஆருமிடத்தைச் சேர்ந்திருக்க அல்லது ஆறுக்குடையவனேறிய அங்கிசத்திலாவதிருக்கவும், நாலாமாதிபனுடன் பாம்பாவது அல்லது சனியாவதிருக்க, இவன் பரவிஷயமுள்ளவன்.

நாலாமிடத்தாதிபனும், ஆருமிடத்தாதிபனும், பலயீனப்பட்டு கூடி சந்திரனும், சுக்கிரனும், துர்ப்பலமா யிருக்க நாலாமிடத்தை பாவக்கிரகங்கள் பார்த்தாலும், நாலாமிடத்ததிபதி சந்திரனேடும், இராகுவோடுங் கூட ஜன்மாதி, நாலாமாதி, ஆருமாதி, ஒன்பதாமாதி இவர்கள் நால்வரும் ஏழாமிடத்தில் கூடியிருக்க, பிறந்தவன் பரஸ்திரீ லோலனுவன்.

சந்திரனையும், ஜென்மராசியையும், குரு பாராவிடில் சூரியனும் சந்திரனும் ஒன்பதாமிடத்தில் நிற்க, பிறந்தவன் பரசாதகனுவான்.

இலக்கினத்தில் சூரியனுஞ் சந்திரனும் நிற்க, வியாழனும் நீசனும் சனி அங்கிசத்திலிருக்க, பிறந்தசேய் பரசாதகனுவன்.

ஞாயிற்றுக்கிழமை சுவாதிநக்ஷத்திரம் துதிகை திதியிலும், புதன் கிழமை ரேவதி நக்ஷத்திரம் சப்தமி திதியிலும், சனிக்கிழமை அவிட்ட நட்சத்திரம் துவாதசி திதியிலும் பிறந்த பாலகன் பரசாதகனுவான்.

மூன்ருமிடத்தாதிபன் சனியுடன் கூடி, ஐந்தாமிடத்திலிருக்க சூரியன் ஆறு, ஐந்து, நாலு இவ்விடங்களில் நிற்கில் இவன் தாய் ஐந்து வருஷத்தில் இறப்பாள்.

மாதுர், பிதுர்த்தானுதிபதிகள், தன்வீடுமாறி ஒருவர் வீட்டிலொருவராக இருந்தாலும் அல்லது அஸ்தமனமாக இருந்தாலும் அன்னை மரணமாவாள்.

நான்காம் பாவபலன் முற்றிற்று.

---

## ஐந்தாம் பாவபலன்



ஐந்தாமிடத்தில் சூரியனிருந்தால் தயவு தாக்ஷண்ணியமில்லாத வன் அல்பபுத்திரனுண்டு, சேவகவிர்த்தி, வயறு பெரிதாயிருக்கும். தீவிரபுத்தி தரித்திரமுடையவன், ஞானமுண்டு, பிதாவுக்கு தோஷமுண்டு.

சந்திரனிருந்தால், பெண்சாதி ரூபவதியாயிருப்பாள், நானுவிதத் தொழிலில் இலாபமுண்டு, பால் பாக்கியமுண்டு, மாய தந்திர மந்திர முடையவன், டம்பமாக இருப்பான், பிரபுக்கள் அபிமானமுண்டு, வெகுபுத்திரனுண்டு, விரதவிக்கினன், மாதாவுக்கு அரிஷ்டம், நல்ல புத்தியும் நல்ல வசனமுமுடையவன்.

செவ்வாயிருந்தால், மாமன் சகோதரங்களுக்கு தோஷமுண்டு, புத்திரனுண்டு, துஷ்டன், இராசகோபன், இனத்தாருக்கு பீடை உண்டு, முன்கோபி, புராணகதையில் வல்லவன், மாதாவுக்கு ரோகம்.

புதன் இருந்தால், சரீரத்துக்கீனம், சௌக்கியம், இராஜபூஜிதன், நானுவிதவஸ்திரப்பிரியன், வித்தையுண்டு, டம்பன், கலகப்பிரியன்.

வியாழன் இருந்தால், நேத்திரம் பெரிதாயிருக்கும், இராஜசேனுதிபதியா யிருப்பான், அற்பப்புத்திரனுண்டு, புத்திமான் செலவு அதிகம் உண்டு பிதுர்சகோதர முடையவன். புத்திரன் மூலியமாய் ஐசுவரியம் தாயாருடைய தகப்பனுக்கு கெண்டம். பிள்ளைகளுக்கும் இஷ்டர்களுக்கும் சௌக்கியம் செல்வமுண்டு.

சுக்கிரனிருந்தால், மந்திரி, சேனுதிபதி, புத்தியுள்ளவன், திரவியமுண்டு. மாதுரு அரிஷ்டமுண்டு, வித்துவான் பூபதியாவான்.

சனியிருந்தால், புத்திரவிசனம், துர்புத்தி, துர்விசாரம், இராஜகோபன் பெரிய மனுஷவிரோதி, தத்துபுத்திரன் உண்டு. தர்மசிந்தை, சத்துருஜெயம், அல்பபுத்திரன் பிறந்தபோது தத்து இல்லாதிருந்தால் தீர்க்காயுளுண்டு.

இராகு கேது இருந்தால், அற்ப புத்திரயோகம், தயவுள்ளவன் முன்னே பெண் பிறக்கும், பவுத்திர ரோகமுண்டு, துன்மார்க்கன், இராஜகோபன், பிரதாபன் புத்திர தோஷமுண்டு, சுபர் பார்க்க கூடி ஏழு எட்டிலிருக்க புத்திரனுண்டு.

ஏழு எட்டுக்குடையவர்கள் ஷ ஐந்தாமிடத்தில் கூடினல், புத்திரனுக்கும், பெண்ஜாதிக்கும் தோஷமுண்டு, புத்திர மத்திபம் உண்டாகில் சேதமாகும்.

ஐந்தாமிடம் கடகமாகில், அதிக சூரியனிருந்தால் வெகு புத்திரனுண்டு.

இதில் செவ்வாய் நிற்கில், முன்தாரத்துக்குப் பிள்ளையில்லை, பின்தாரத்துக்குப் பிள்ளையுண்டு.

கடகம் ஐந்தாமிடமாகி அதில் சந்திரன் நிற்க, பரஸ்திரீபோகமுண்டு. பாபர் ஐந்தில் ஆட்சி உச்சமாயிருக்க அற்ப புத்திரயோகம். ஐந்து இரண்டில் பாபர் நிற்க, வெகுபுத்திரர். ஐந்தாமிடம் சிம்மமாகில் அற்பபுத்திரயோகம்.

இரண்டு, மூன்றில் பாவர் இருந்தால் இவர் திசை பொசுப்பில் புத்திரருண்டு இலக்கினதிபதி ஐந்திலிருக்க பிள்ளையுண்டு.

ஐந்துக்கதிபன் ஆறில் அல்லது ஆறுக்கதிபனேடு கூடியிருந்தால் புத்திரயோகம், அற்பாயுள்.

ஒன்பதுக்கதிபன் மூன்றுக்கதிபனேடு கூடியிருந்தால் நல்ல பிள்ளைகள் பிறக்கும், பாக்கியவானுக இருப்பான், தீர்க்காயுளுண்டு.

ஐந்துக்கதிபன் எட்டில் நிற்க, ஏழுக்கதிபன் ஐந்தில் நிற்க, அவனுக்கு புத்திரர் பிறந்து இறந்துபோம்.

ஐந்தில் பாபர் நிற்க, புத்திரர் அற்பம், தேகபலஹீனமாய் இருப்பான்.

ஐந்தில் சுபர் இருந்தால், ஆதாயம் வந்துகொண்டே இருக்கும், இராஜப்பிரியன், பெற்றோர் பிரியன், உறவின் முறையார் பிரியன், நல்ல புத்திரனுண்டாம், புத்திரர் சம்பார்த்தியமுண்டாம்.

ஐந்துக்கும், இலக்கினத்துக்கும், பத்துக்கும் அதிபன் ஆட்சி உச்சம் கேந்திரமாய் சுபனுயிருந்தால், அதிகார உத்தியோகமுடையவன்.

ஐந்தாமிடத்தை மூன்றுக்கதிபன் பார்த்தாலும் இருந்தாலும், நாள் சென்று பிள்ளை பிறக்கும். செவ்வாயிருந்தால் பிள்ளைகள் பிறந்து இறந்துபோம்.

கன்னி, ரிஷபம், விருச்சிகம், நாலு ஐந்தாமிடமாகில், அற்பபுத்திரர்ம், ஐந்துக்கதிபன், சந்திரன், சுக்கிரன், இராசியில்கூடினுல்

புத்திரயோகம், ஐந்தாமிடத்தில், சனி, சந்திரன், அங்காரகன், சூரியன், இவர்கள் கூடிநிற்க மாமனுக்கு அரிட்டம், சுபர்கள் நோக்க துன்பமில்லை

பூசநக்ஷத்திரம், இரண்டாம்பாதம், மூன்ரும்பாதமாகில் தாயைப் பெற்ற அன்னைக்கு அரிட்டம். அப்படிக்கரிட்டம் வராவிட்டால் மாமனுக்கே நோயும் அரிட்டமும் உண்டு.

ஜன்மலக்கினத்தில், ஜன்மாதிபதியோடு ஐந்தாமிடத்ததிபன் நிற்கிலும் அல்லது ஒருவர் ஸ்தானத்தில் ஒருவர் மாறிநிற்க பெருமையாக புதல்வர்கள் தீர்க்காயுளோடு பிறப்பார்கள்.

ஐந்தாமிடத்தில் சனியிருந்தால் குழவிக்கும், சூரியனிருந்தால், தந்தைக்கும், சந்திரனிருந்தால் அன்னைக்கும், புதனிருந்தால் அன்னையின் சுற்றத்தாருக்கும், குருவிருந்தால் தந்தையின் சுற்றத்திற்கும், கருங்கோளிருந்தால் சுதனுக்கும், செவ்வாயிருந்தால் அம்மானுக்கும் தோஷமாம். குரு ஐந்தாமிடமேவ சந்தானம் மத்திபமாம்.

இலக்கினுதிபதியும், பஞ்சமாதிபதியும், தங்கள் ஸ்தானங்களிலிராமலும், சுபர்களால் பார்க்கப்படாமலு மிருந்தால் புத்திரரில்லை. அவர்கள் சுபாங்கிசம் பெற்றிருந்தால் புத்திரருண்டாம்.

பஞ்சமாதிபதி மூன்ருமிடத்தி லிருந்தால் அற்ப புத்திரருண்டாம்

புத்திர ஸ்தானுதிபதி ஏகனுய் புதன் வீட்டிலிருக்க புத்திரரில்லை. நல்லோர் கூடி நிற்கில், புத்திரர் பிறந்து மரிப்பர். பாவர் கூடி நிற்கில் மகவில்லையாம்.

ரிஷபம், கும்பம், இலக்கினமாகப் பிறந்தவர்களுக்குப் புத்திரரற்பம்.

ஏழாமிடத்தோன் உச்சநீச்சமின்றி களங்கமில்லா திருந்தால் குடும்பத்துக்கு தலைமையான மனைவிக்கு புத்திரனில்லை.

ஏழாமிடத்தோன் உச்சநீச்சம்பெற்று அல்லது அந்த அங்கிசமாவது பெற்றிருந்தால், மேற்சொன்ன இளங்கொடியாளாகிய மனைவிக்கு புத்திரருண்டு.

ஐந்தாமிடத்தில் சூரியனேடு இராகு கூடியிருக்கில், தந்தைக்கும், மைந்தனுக்கும் பகை வரும்.

இலக்கினுதிபதியுடன் நாலாமாதிபன் சேர்ந்து உறவாகக் கூடி யிருக்க தந்தைக்கு மைந்தர்கள் அதிகமுண்டு.

இலக்கினத்தில் அங்காரகனும், அவர்க்கேழில் சனியும், பன்னி ரண்டாமிடத்தில் சூரியனும் நிற்கப் புத்திரரில்லை.

ஐந்தாமாதிபன் பாவனுய் ஏழாமிடத்திலும், ஏழாமிடத்தோன் பாவனுய் ஐந்தாமிடத்திலும் இருந்தால் புதல்வரில்லை.

புத்திர ஸ்தானுதிபதியிருக்கும் அங்கிசத்தைத் தொட்டு இலக்கி னம் வரைக்கும் எண்ணி கண்ட லக்கம் எத்தனையோ அத்தனை புதல்வர் பெறுவர்.

அலியோகமென்பது சந்திரனுக்கு ஏழில் சூரியனும், சனிக்கு ஏழில் புதனும், சூரியன் இரட்டை ராசியிலிருக்க செவ்வாய் பார்க்கவும் இவை மூன்றும் அலியோகமாம்.

இலக்கினம் ஒற்றைராசியாகில், அதில் சந்திரனிருந்தாலும் அல் லது ஒற்றை, இரட்டை இராசிகளில் சந்திரனிருக்க செவ் வாய் புதன் பார்த்தாலும் சந்திரன்வீடு சனிவீடு, அங்கிச லக்கினமாக வந்தபோதும் அலியாம்.

அட்டமாதிபதி ஐந்தாமிடத்திலிருக்க, ஐந்தாமிடத்தாதிபதி எட்டாமிடத்திலிருக்க, சுபர்பார்வை யில்லாதிருக்க புத்தி ரில்லை.

ஐந்தாமிடத்தோன் வியத்திலும், ஆறு, எட்டிலும் இருக்க மைந்த ரில்லை.

புத்திர ஸ்தானம் சனி, புதன், வீடாக அந்த வீட்டை சனியும் குளிகனும், சேர்ந்து பார்க்க தத்துபுத்திரனுண்டு.

சுபர்கள் ஐந்தாமிடத்தில் நிற்க, ஐந்தாமிடத்துக் குடையவன் பார்வையில்லாவிட்டால் தத்துபுத்திரனுக வாழ்வான்.

மீனலக்கினத்திற்கு ஐந்தாமிடத்தில் குரு உச்சமானுல் ஸ்தி பிரமை உண்டாகும்.

ஐந்தாமிடத்தோன் அங்காரகன் ஆறுமிடத்தோன் இவர்கள் மூவரை நேசமில்லாதவர் சேர்ந்தாலும் பார்த்தாலும் இவ னுக்கு சத்துருக்களால் புத்திரபீடை வரும்.

நாலாமிடத்தில் பகைவர் நிற்க, ஐந்தாமிடத்தில் குருவும், சனி யும் நிற்க, வியஸ்தானத்திலும் பகைவர் வந்தால் புத்தி தோஷமுண்டு.

ஐந்தாமிடத்தில் இருப்பவர்கள் பாவிகளானுலும் பகைவர்களானு லும் தோஷம் உண்டு.

புத்திரஸ்தாஞதிபதியும் சந்திரனும், சுக்கிரனும்கூடி பெண் ராசி யிலும், பெண் அங்கிசத்திலுமிருக்க இவர்களைப் பகைவர்கள் பார்த்தால் பெண் பிள்ளைகளையே பெறுவான்.

சந்திர இலக்கினத்தையும் ஜன்ம இலக்கினத்தையும், ஐந்தா மிடத்தையும் சுபக்கிரகங்கள் பார்க்க புத்திரருண்டு.

சனி முதலிய பாவக்கிரகங்கள் பார்த்தால் புத்திரரில்லை.

புத்திர ஸ்தானத்தில் இராகு கேது நிற்க புத்திரருண்டு.

இலக்கினதிபதி ஐந்தாமிடத்தில் நிற்க, ஐந்துக்குடையவன் வலி மைபெற வாலிபத்தில் புத்திரர் உற்பத்தியாகும்.

ஜென்மாதி ஏழில் நிற்க, நாலாமாதியும், ஏழாமாதியும், ஒரு வீட் டில்நிற்க, பாம்புகளோடு இரண்டாமாதியும் இலக்கினத்தில் நிற்க புத்திர தீர்க்கமுண்டு

இரண்டா மிடத்தோன் ஐந்தில் நிற்க மகவுண்டாம்.

ஐந்தா மிடத்ததிபன் ஸ்புடத்தையும், சூரியன் நின்ற ஸ்புடத்தை யும் கூட்டி அந்த ராசியில், குரு வருங் காலத்தில் புத்திர உற்பத்தியாகும்

சூரியன் நின்ற வீட்டிற்கு ஐந்து, ஏழு, ஒன்பது வியத்தில் சந் திரன், நட்பு, ஆட்சி, உச்சமாய் இருக்க, குருவும் சந்திர னைப் பார்க்க தந்தைக்கு மேலான யோகமுள்ள புத்திரன் பிறப்பான்.

ஐந்தாமதிபதி, இலாபாதிபதி; இவர்கள் சேர்ந்து மித்துருவாக யிருக்க சேதப்படாத புத்திரர் அனேக முண்டாம்.

அவரோடு எத்தனை கிரகம்சேருகிறதோ அத்தனை புதல்வர் உண் டாகும்.

ஐந்தாமதிபனேடு சூரியன் சேர்ந்தால் வெகு புத்திரருண்டாம்

ஐந்தாமதிபனுடன் பாம்பும் எட்டில் கூடி நிற்கில், தத்துபுத்திர னுண்டாகும்.

ஐந்தாமதிபனுடன் பாம்பு, சூரியனுங்கூடில், மிருகம் போலிருப் பான்.

மிதுனம் இலக்கினமாக, துலாத்தில் அங்காரகனிருந்திட, இவன் தந்தைக்கு விரோதமாகி பொல்லாத வஞ்சகனுவன்.

கிரகங்கள் இப்படி நிற்காதிருக்கில், மேற்சொன்னவர்களுடன் உறவாகக் கூடி வாழ்ந்திருப்பர்.

பத்தாமிடத்ததிபனும், ஐந்தாமிடத் ததிபனும் மித்துருவாகி சுபக் கிரகங்களுமாகி சுபர் வீட்டில் கூடி நின்றால் வருத்தமின்றித் தனந்தேடி வாழ்வான்.

ஐந்தாமிடத்ததிபனும், அங்காரகனும் கூடி ஐந்தாமிடத்தில் நிற்க, சனி நோக்க, இவன் தத்துபுத்திரனாவான்.

ஐந்தாமிடத்ததிபன், அங்காரகன், சனியம்சத்தில் சனி பார்க்க நின்றால் அன்னியர்களால் வளர்க்கப்படுவன்.

சூரியன் ஐந்தாமிடமேறி சனியம்சத்தில் நின்றால் புத்திரரில்லை.

ஐந்தாமிடத்ததிபதியும் சூரியனும் சனியினுடைய அங்கிசமேற் சனி பார்க்க, ஐந்தாமிடத்தில் நின்றால் இவனுக்கு பரவிஷ யத்தால் புத்திரனுண்டு.

ஐந்தாமிடத்தில் அங்காரகன் சனி அங்கிசமாகவும் நிற்க, இவன் உத்தம புத்திரனாவான்.

இலக்கினத்தில் சந்திரன் இருக்க, ஆறாமிடத்தில் சுக்கிரன் நிற்க, இவனுக்கு புதல்வன் ஏகனும்.

சூரியனும் சந்திரனுங்கூடி கேந்திரத்திலிருக்க பிதுருக்கு கடினமு வான்.

உபயராசியாகி சூரியனும் சந்திரனும் கூடி நிற்கில் பிதாவுக்கு மரண கண்டம் இரண்டு வரும்.

சுபக்கிரகங்கள் ஐந்தாம் வீட்டைப்பாராதிருக்க, அதில் ஐந்தா குடை யவனோடு இராகு கூடியிருக்க இவனுக்கு நாகசாபத்தி னால் புதல்வரில்லை, நாகப்பிரதிஷ்டைசெய்ய மைந்தருண்டு.

கேந்திரகோணத்தை சுபக்கிரகங்கள் பார்வை யில்லாதிருக்கு யினும் மைந்தரில்லை. ஜெப ஓமஞ்செய்ய மைந்தருண்டு.

ஐந்தாம் வீட்டதிபனுடன் ஆறுமிடத்தோன்கூடி சுபக்கிரகம் பாராதிருக்க இவனுக்கு சத்துருவின் சாபத்தினால்மகவில்லை.

ஐந்தாம் வீட்டில் ஐந்தாமதிபதி இருக்க இவரை பாவக்கிரகங் கள் பார்க்குமானால் தெய்வசாபத்தினால் புத்திரரில்லை ஓ கர்மம் செய்யவேண்டும்.

நாலாமிடத்தில் தீயோர்கள் நிற்க ஐந்துக்கதிபனோடு சனியுங் கூட, பன்னிரண்டாமிடத்தில் பாவக்கிரகங்கள் பற்றி நிற்க, இவனுக்கு தாய் சாபத்தினால் புதல்வரில்லை, ஓமங்கள் ஜெபங்கள் தானங்கள் அனேகமாகச் செய்தவர்களுக்கு மைந்தருண்டு.

இரண்டாமிடத்திலும், பன்னிரண்டாமிடத்திலும், சுபர்கள் நிற்க, அது பாவர் மனையாகில் பாக்கியாதிபதி வியஸ்தானத்தி லிருக்க ஐந்தாமிடத்தில் இலக்கினாதிபதி பாவர்களோடு கூடி நின்று அஸ்தமனமாகில் புத்திரரில்லை.

ஜென்மத்திலும் வியத்திலும், எட்டாமிடத்திலும் பாவக்கிரகங்கள் சனி செவ்வாயோடு நின்றால் புதல்வரில்லை.

புதனும் சுக்கிரனும் பத்திலாவது, எட்டிலாவது நிற்க ஐந்தில் எட்டுக்குடையவனும் ஜென்மத்தில் பாவர்களும் நின்றால் புத்திரரில்லை.

புத்திரகாரகனுடைய ஸ்புடத்தையும், ஐந்தாமிடத்ததிபனுடைய ஸ்புடத்தையும், கூட்டவந்த இராசியில் வியாழன் வருங் காலத்தில் மதலை தோன்றும். மேஷமுதலாக கூட்டிவந்த ராசி யங்கிசம்வரை யெண்ணிப்பார்க்கில் பாபர் வருங்காலத் தில் புத்திர சேதமுண்டாம்.

ஆறுமிடத்தில் சந்திரன் நிற்கில் ஒரு குழந்தை பிறக்கும். அது வும் பிழைப்பது அரிதாகும்.

ஒன்பதாம் வீட்டிற்குடையன் குருவாகவர சனி அவரை நோக்க புதனோடு சூரியன்கூடி எவ்விடமிருந்தாலும் குழந்தையை அன்னியர் வளர்ப்பர்.

ஐந்தாமிடத்திற்கதிபன் பாவனாகி ஆறு, எட்டு, பன்னிரண்டில், குருவோடு நின்றாலும், அல்லது சுபர்கள் பார்வைபட்டாலும் பன்னிரண்டு ஆண்டில் நாசம் வரும்.

புத்திர ஸ்தானாதிபதியும், ஏழாமாதிபதியும், கேந்திரகோணத் தில் பலமாக சேர்ந்திருக்க ஆறுமிடத்ததிபன் இவர்களோடு சேர்ந்தாலும் அல்லது பார்த்தாலும், சுத்தமாகப் புத்திர ரில்லை.

ஐந்தாம் பாவபலன் முற்றிற்று.

---

## ஆரும் பாவபலன்

ஆருமிடத்தில் சூரியனிருந்தால் அல்ப நினைவு, சத்துருஜெய புத்தியுண்டு, பிரபல கீர்த்தியுண்டு, சவுக்கியன், சேனு பதியா யிருப்பான், பலனுண்டு, இராஜப் பிரியன், சத்து விரோதியா யிருப்பான்.

சந்திரனிருந்தால், தரித்திரியன், பெண்சாதி மிகுதியுண் அதிக தாமதன், மதுபானன், விரோதியுண்டு, அன்னி முலைப்பால் குடித்து வளருவான், விசனமடைவன் பிரத் மனுஷாள் பேரில் பார்வையுண்டு, அலட்சியம் பேசுவான் நினைவு மறதியாயிருப்பன் மேதகன் உத்தியோக பலமுண்டு

செவ்வாயிருந்தால், பெண்சாதி பீடை, அற்பாயுள் தெண் முண்டு, சீக்கிரம் விவாகம் இரண்டு, சுகசீவனமுண்டு, ச துரு விரோதம் பராக்கிரமமுடையவன்.

புதனிருந்தால், ராஜபூஷணமுண்டு, வித்தை அல்பம், ட முடையவன் கலகப்பிரியன் சத்துருஜெயம், மாதுரு ஆ குஷ்டரோகம், திரவியநாசம், சத்துரு விரோதம், பித் தினுல் துக்க முடையவன்.

வியாழனிருந்தால், சத்துருஜெயம், சாஸ்திரவிர்த்தி, பவுத் ரோகம் ரணசரீரம் பிரியன், வயிற்றில் அக்கினிபந்தமுடை யவன், ஞானயீனன், தனயீனன்.

சுக்கிரனிருந்தால் சத்துருஜெயம், புத்திமான், பவுத்திரரோ பரஸ்திரீசம்போகம், பெண்சாதி யீனன், உலுத்தன், சோ பயம், சத்துருநாசம், வியாதியால் பீடை.

சனியிருந்தால், அல்பப்பிணி, களவு, சத்துருஜெயம், தனவிர்த் வெகுபுத்திரனுண்டு. பரிசுத்தனு யிருப்பான் ராஜப்பிரியன் சுபக்கிரகங்கள் கூடி நிற்க சரீரத்தில் வடிவுண்டு, சூரிய சனி கூடில் ஜாதியில் விரோதமுண்டு.

இராகு கேதுவாயிருந்தால் ஸ்திரீபிரசையுண்டு, பலஸ்தி விரோதமுண்டு.

ஆருமிடத்தில் சூரியனுவது செவ்வாயாவதிருந்தாலும், அல் கூடியிருந்தாலும் அவனுக்கு சத்துருவும் வியாதியும் இல்

சந்திரன் ஆறு, எட்டு, பன்னிரண்டிலிருக்க, நாலில் ஐந்தில் பாபரிருந்து அவர்களை சுபர் பாராமலிருந்தால் அவன் பிற விக் குருடனுவான்.

லக்கினதிபனும் ஆறுக்கு அதிபனும், ஆறு, எட்டு, பன்னி ரண்டிலிருந்து இவர்களுடன் பாபர்கூடினல் மரணபரியந் தம் ரோகியாக இருப்பான்.

லக்கினத்துக்கு ஆறு, எட்டுக்கு அதிபன் இராசிக் கதிபனுனல் தேசாந்திரம் போய்வருவான்.

ஆறுக்கதிபனும் இராசிக்கதிபனும் ஒரு இராசியிலிருக்க, அது அவர்களுக்கு பகைவீடாயிருந்து இவாளை செவ்வாய் பார்த் தால் அல்லது'கூடி னுலும் அவன் கோள்சொல்லி குடிகெடுக்க வல்லவனுவான்.

ஆறுக்கதிபன் சுபனுக பாபர் பாராமல் கேந்திரம் திரிகோணங் களில் நட்பில்லாதிருந்தாலும் ஆறிலிருந்தாலும் அவன் தீரா வியாதியுடையவனுக யிருப்பான். சத்துருவால் கடன்ருணத் தால் கஷ்டப்பட்டு பாவியாகயிருப்பான்.

பாவிகள் சம்பந்தப்பட்டாலும் இந்த தோஷமில்லை.

ஆறு, எட்டில் செவ்வாய் சூரியனிருந்தால், விவசாயம், நிலம், பூமி உண்டானவனுக யிருப்பான்.

ஆருமிடத்தில் நல்லோர்கள் நின்ருல், இவன் தாயாதி விவகாரங் களில் கஷ்டப்பட்டு ராஜாங்கமேறியும் துக்கப்படுவன்.

ஆருமிடத்தில் சுபக்கிரகங்கள் வலிமைபெற்றிருக்குமானுல் தன் வமிசத்தோர்களை மெலியச்செய்விப்பதுடன் புவியில் விவகார கார விஷயங்களைத் தெரிந்து அதை முடிவுசெய்ய வல்லவனு வான்.

ஆருமிடத்தில் கடினமாகிய தீக்கோள்நிற்க, இவன் துட்டர் களுக்கு துஷ்டனுயும், தன்னை எதிர்த்தவர்களுக்கு வலிமை பொருந்திய மிடியனுகியுமிருந்து யாவராலும் புகழப்படுவான்.

ஆருமிடத்தில் பாவக்கிரகங்கள் வலிமை பெற்றிருக்குமானுல் யாவருங்கண்டு அச்சங்கொள்ளும்படி தீரனுகவும், சத்துருக் கள் கைகூப்பி நிற்கவும், செல்வமுண்டாகி வாழ்வான்.

இராகு ஆருமிடத்தில்நிற்க, இவனுக்கு விலங்குமுதலிய யாதொரு தடையும் நேரிடாது, தேள்முதலிய பலவிஷங்களும்இவனைத்

தீண்டாது, பலபேர்களும் போற்றும்படியாக கீர்த்திமானு விருப்பான்.

ஆறுமிடத்ததிபன் பாவனுகி கேந்திரத்திலிருக்க, அவரை சுபக் கிரகம் பார்க்க இவன் உலகத்தில் யாவராலும் போற்றிசெய் யப்பட்டு கொடியோர்களுக்கு மிண்டனுகவும் இருப்பான்.

ஆறுமிடத்ததிபனும் ஜென்மாதிபதியும் சூரியனுடன் கூடினு சுரத்தினுல் கெண்டம் வரும்.

சந்திரனுடன் கூடினுல் ஜலகண்டம் வரும்.

அங்காரகனுடன் கூடினுல் ஆயுதகண்டம் வரும்.

சனியுடன் கூடினுல் சோரர்களால் கண்டம் வரும்.

சுக்கிரனுடன் கூடினுல் ஸ்திரீகளால் கண்டம் வரும்.

அரவு கூடில் விஷத்தினுல் கண்டம் வரும்.

ஜென்மாதிபதியும், நாலாமாதிபதியும், அட்டமாதிபதியைக் கூ னுலும், அல்லது ஆறுமிடத்திலிருந்தாலும், அஜீரணத்தா கண்டம்.

இலக்கினுதியோடும் வாகனுதியோடும் சனிகூடில் விஷபக்ஷண தால் கண்டம் வரும்.

நாலாமாதியுடன் சனிசேர்ந்து ஜென்மலக்கினத்தில் நிற்க, வி பக்ஷணத்தால் கெண்டம் வரும்.

இலக்கினுதியோடும் வாகனுதியோடும் பாம்புகூடில், பந்தனமா மரணம் வரும்

இலக்கினுதிபதி நல்லோர் வீட்டில் நிற்க ஏழாமிடத்ததிபன் இல கினத்தில் நிற்க, மாதா பிதா இருவருக்கும் மரணத் உண்டுபண்ணும்.

ஆறுமதிபனேடு பாவர்கூடி, இலக்கினத்திலும் எட்டாமிடத் லும் நிற்க, சித்தப்பிரமைகொண்டு அங்கத்தில் விரண முண்டாகும்.

அப்படி சேர்ந்தவர்கள் அவரவர் ஸ்தானங்களிலும் எட்டிலுமி கில், மேற்கூறிய பிணியென்று சொல்லவும்.

ஆறுமிடத்தில் சுபக்கிரகங்கள்மேவ, ஆறுமிடத்ததிபன் கேந் ரத்திலிருக்க சுபக்கிரகங்கள் பார்த்திடின் பெரியோர்களுக் உபகாரங்கள் செய்து நலியில்லாமல் வாழ்வான்.

தீக்கோளாகினும் நன்மையடைந்தால் எதிரிகளுக்கு எதிரியா கவே யிருப்பான்.

சூரியனும், சந்திரனும், ஒருவர்க்கொருவர் பார்க்கில் பிறந்தசேய் அலியாம்.

சனியும், புதனும் அவ்வாறு நோக்கில் அலியாம்.

சூரியனுடன்கூடி சுக்கிரன் வீட்டிலிருக்க, சந்திரன் ஆண் அங்கி சத்திலிருக்க, பிறந்தசேய் அலியாகும்.

ஜென்மத்தில் சந்திரனிருக்க, சூரியன், புதன், சந்திரன், மூவரு மிரட்டை ராசியிலிருக்க, இம்மூவரையும் அங்காரகன் பார்க்க அலியாவான்.

ஆறுமிட முடையவன் குரூரக்கிரகமாக லக்கினத்திலிருக்க அல்லது அஷ்டமத்திலிருக்கச் சரீரவிரணமாக யிருப்பான்.

ஐந்தாமிட முடையவன், ஆறுமிடத்தில் அந்தத் தானுதிபதி யுடனே கூடியிருக்க சத்திதுன்மம் வரும்.

ஏழாமிடத்தி லாதித்தன் நிற்க, இலக்கினுதிபதி எட்டிலிருக்க வியாதிபதி ஆறில் நிற்க, சோரஸ்திரீ மருந்தினுல் சக்தி குன்மம் வரும்.

சந்திரனும், புத்திரத்தானுதிபதியும் ஆறில் நிற்க, ராகு கேது வுடனே கூடக் குஷ்டரோகத்தினுல் மரணம்.

லக்கினுதிபதி நாலில் நிற்க, ஆறுமிடமுடையவன்கூட அல்லது பார்க்க ராகு கேது லக்கினத்திலிருக்கச் சோகை ரோகமும்; நொறுக்குநோயு முண்டாம்.

புதன் ராகுவுடனே கூடி ஆறிலே நிற்க, சனிகூட அல்லது பார்க்க ஏழில் ஆதித்தன் நிற்க, இலக்கினத்தைப் பார்க்க வாதசூலையினுலும் சரீரம் விழும்.

ஆதித்தனும், ஆறுமிடமுடையவனும், இலக்கினுதிபதியும் ஒரு ராசியிலிருக்கச் சந்திரனுடனேகூட அல்லது சந்திரன் பார்க்க ஜலக்கரையில் வெட்டுபட்டுச் சாவான்.

இராகுவானுலும், கேதுவானுலும், ஆறுமிடமுடையவனுடனே கூடி ஆறில் நிற்க, செவ்வாய் பார்க்க, அக்கினியி லகப்பட் டுச் சாவான்.

இலக்கினுதிபதி, ஏழாமிடமுடையவனுயிருக்கப் பாவிகளாற் பார்வைபெறக் கர்மாதிபதியுஞ் சஷ்டாதிபதியும் இலக்கி னத்திலிருக்க, ஸ்திரீ நிமித்தம் விஷபட்சண மரணம்.

இராகு கேதுக்கள், கேந்திர திரிகோணத்திலிருக்க, ஆருமிட முடையவனுலே பார்க்கப்பட, மித்துருத்தானுதிபதி காரகன் அஷ்டமத்திலிருக்க மரத்திலேறி விழுந்து மரணம்.

இரண்டாமிட முடையவனுங் களத்திராதிபதியும், ஆருமிட முடையவனும் பார்க்க, ஒன்பதாமிடமுடையவனும், ஆதித்த னும் எட்டில் நிற்க, மரத்திலேறி விழுந்து மரணமாவான்.

இரண்டாமிடமுடையவன், ஏழாமிடமுடையவன், சத்ராதிபதி யுடனே கூட சுக்கிரன் பார்க்க, ஸ்திரீ மருந்தினுல் சாவான்.

சந்திரனே இராகுபார்க்க ஏழாமிடமுடையவனுடனே கர்மநாதன் கூட ஸ்திரீயினுல் மரணம்.

சஷ்டாஷ்டம் வியங்களிற் சந்திரன் இலக்கினுதிபதியாலே பார்க் கப்பட சனி, குளிகன் பார்க்க, கயிற்றினுல் மரணமாம்.

அஷ்டமாதிபதியும், லக்கினுதிபதியுங் கூடியிருக்க, ராகுவாலே பார்க்கப்பட பாவர் திரேகாணமேறக் கயிற்றினுல் மரணமாம்.

சனி குளிகனுடனே வியாழங்கூட, அஷ்டமாதிபதியாலே பார்க்க, அல்லது சனியாலே அஷ்டமாதிபதியைப் பார்க்கப்பட முன் சொன்ன பலனும்.

ஆறில், எட்டில், செவ்வாய் மூன்ருமிடமுடையவனுடனே கூடி நிற்க, சனி குளிகன் கூடி நிற்க ஆயுதத்தால் மரணம்.

அஷ்டமத்தில் பாவரிருக்க, செவ்வாயுடனே சந்திரன் குரு சஷ்டியங்கிசம் ஏற, ஆயுதத்தால் மரணமாம்.

செவ்வாய் மேடவிருச்சிகத்தில் நிற்க, ஆதித்தனும், அவனும் அன்னியோன்னியம் பார்க்க, அல்லது அங்கிசத்தில் அ படியிருக்க, ஆயுதத்தால் மரணமாம்.

ஆருமிடமுடையவன் குரூர சட்டியங்கிசமேறப் பாவிகள் பார்க்க சூரியன் கூடியிருக்க, அவன் தரை மரணமாம்.

ஆறிற் செவ்வாயும், புதனும் நிற்க, சுக்கிரன் பார்க்க, குரு அங்கிசமேறச் சயரோகம் வரும்.

ஆறில் சனியும் செவ்வாயும்நிற்க, சூரியனுவது ராகுவாவது பார்க்க, இலக்கினுதிபதி பார்க்க, இலக்கினுதிபதி ஈனமாக தீராத ரோகமுமாம்.

ஆறில் சனியனும், குளிகனும் நிற்க, இராகு, கேது, ஆதித்தன், செவ்வாய் பார்க்கச் சுபதிருஷ்டி யில்லாதிருக்கச் சயரோகத் தால் மரணமாம்.

சந்திரன் ஜலராசியாயிருக்கச் சஷ்டாதிபதியும் ஜலராசியிலிருக்க, ஜலத்தானுதிபதி பார்க்க, மூத்திரக்கிரிச்சனரோகமும்வரும்.

ஆறில் சந்திரன் நிற்கச் சனி கேந்திரத்தானத்திலிருக்க,வியத்தா னத்தில் பாவிநிற்கப் பாவியங்கிசம் ஏற பீனிசம்வரும்.

ஆருமிடமுடையவன் பலயீனனுகயிருக்க, இலக்கினேசனும் பல யீனனுக யிருக்கச் சத்திகுன்மம் வரும்.

சஷ்டேசுரன் ஏறின அங்கிசாதிபதி சூரியன் சனியாயிருக்கச் சத்தி குன்மம் வரும்.

சத்துருத்தானுதிபதி கேந்திரத்திலிருக்க பாவக்கிரகம் பார்க்க, ஆருமிடமுடையவனைப் பாவிகள் பார்க்க, சத்துருவர்த்தனை வரும்.

இலக்கினேசன் ஆறில்நிற்க,ஆருமிடமுடையவன், இலக்கினத்தி லிருக்க, சனி குளிகன் கூடியிருக்க சத்துருவர்த்தனைவரும்.

சத்துருத்தானுதிபதி அத்தமன நீசனுயிருக்க, அல்லது நிர்மூடமா யிருக்க, இலக்கினுதிபதி பலவானுக சத்துரு நாசமுண்டாம்.

இலக்கினேசன் ஆறில்நிற்க அல்லது சஷ்டேசனுலே இலக்கினுதி பதியைப் பார்க்கப்பட, அல்லது ஆருமிடமுடையவன் இலக்கினத்தில் நிற்க, ஞாதிபீடை வரும்.

குரு சுக்கிராள் ஆருமிடமுடையவனுடனேகூடி இலக்கினத்தி லிருக்க, சனி இராகு, செவ்வாய் பார்க்க, ஞாதி பீடைவரும்.

இலக்கினுதிபன் சுபனுயிருக்க ஆருமிடமுடையவனுஞ் சந்திர னுங் கூடியிருக்க, கேந்திரகோணத்திற் புதனிருக்க, ஞாதி களாலே ஜீவனம்.

ஆருமிடமுடையவன் பாவியாக நீசாங்கிசமேறிய குரூர சஷ்டி யங்கிசத்திலிருக்க, ஞாதி க்ஷயமாம்.

ஆருமிடமுடையவன் ஆரும்வர்க்கமேறிப் பாராவ தாங்கிசமா யிருக்க அவன் பலயீனனுக ஞாதிக்ஷயமாம்.

பாக்கியோன் ஆறிலிருக்க, ஆருமிடமுடையவன் பார்க்க, அல்லது ஆருமிடமுடையவன், சனி, செவ்வாய், கூடிப்பார்க்க, அக்கினியால் மரணம்.

லக்கினன் பூரண பலமாயிருக்க, சஷ்டேசன் குளிகனுடன் கூடிப் பார்க்க அக்கினியால் மரணமாம்.

சுக்கிரன் ஆறில் பலவானுயிருக்க, சுபக்கிரக திருஷ்டியுண்டாக நித்தியம் மதுபானம் புசிப்பன்.

ஆரும் பாவபலன் முற்றிற்று.

---

## ஏழாம் பாவபலன்

---

ஏழாமிடத்தில் சூரியனிருந்தால் ஸ்திரீ விரோதத்தால் அற்பனுவான், விவாகம் விளம்பரமாய் நடக்கும். சாஸ்திரசம் போகன், தேசாந்திரம் போவான். அன்னியர் வீடுகளில் புசிப்பான். ஸ்திரீ மூலியமாய் ஐஸ்வரியமுண்டு. ஸ்திரீ வார்த்தையில் பிரியமாயிருப்பான்.

சந்திரனிருந்தால், பெண்சாதிபேரில் பிரியமும் அவள் வார்த்தையும் கேட்பான். தூஷணமாயிருப்பான், நல்ல விவாகமுண்டு களத்திரத்திற்கு நோயுண்டு. உடனே அவளிருக்க மறுகலியாணம் செய்வான், களத்திரம் இரண்டு. செவ்வாய் திசையில் பொசிப்பில் கடைசியந்தரத்தில் ரோகமுண்டு, ஸ்திரீ விரோதத்தினுல் அற்பனுவான்.

செவ்வாயிருந்தால் வயிற்றில் இரத்தம்விழும், க்ஷயரோகம், சகோதரங்கள் மெத்தவுண்டு. வெகு புத்திமான், வெகுமாதருண்டு களத்திர தோஷமுண்டு.

புதனிருந்தால் மாதர் சவுக்கியம், அஸ்வவாகனம், சரீர சவுக்கியும், சரீரகாத்திரம், ஸ்திரீதனமுடையவன்.

வியாழனிருந்தால் வித்வான், நல்ல பெண்ணுடையவன், வாலி பத்தில் விவாகமுண்டு, விசனமுடையவன், வாணிய வியா பாரத்தில் லாபமுண்டு.

சுக்கிரனிருந்தால் துஷ்டன், மந்தன், வெகுலுத்தன், கீர்த்தி யுடையவன், ஸ்திரீகளுடன் சேருவான் விபோகசம்பன் னன், சுக்கிரதசை, சனி புத்தியில் ஸ்திரீவிபசாரி தொழி லுண்டு.

சனியிருந்தால் சரீரதோஷம், விவாகமிரண்டு, வேசிசம்போகன், ஸ்திரீவிரோதி, தேசாந்திர சஞ்சாரன், அன்னியகிரகத்தில் புசிப்பன், களத்திர ஆனி, பெரிய மனுஷாள் வஞ்சனை, ரோகம், கைபதட்டம், துடுக்கன் காதில் ரணம், சனி திசை யில் சுக்கிரன் புசிப்பில் ஸ்திரீ விபசார தோஷமுண்டு.

இராகு கேது விருந்தால் விவாகமிரண்டு வித்வசங்கமன், மூத்திர ரோகம், மகரலக்கினம், ஏழாமிடமாகி சந்திரன், செவ்வாய் கூடி நிற்க, நல்ல ஸ்திரீயுடையவன், சனி சந்திரன் கூடி நிற்க, ஸ்திரீயில்லாமல் போவான், சூரியன் இராகு நிற்க, ஸ்திரீ மூலியமாய் திரவியநாசம்.

ஏழாமிடம் கன்னியாய் வியாழன் நிற்க, நாலுபாபர் கூடிநிற்க களத்திரநாசம்.

ஏழில் சனியிருக்க இலக்கினத்தில் சூரியனிருந்தால் களத்திர நாசம். ஏழில் செவ்வாய் நிற்கில் களத்திரநாசம்.

ஏழில் செவ்வாயிருந்து சுக்கிரனைப் பார்த்தாலும், கூடினாலும் களத்திரம் இரண்டு, சனி கூடில் தாரம் மூன்று. இவர்களைப் பாபர் பார்த்தால் அண்டவியாதி வரும்.

இலக்கினத்தில் சனியிருந்து சுக்கிரன், கடகம், விருச்சிகம், மிது னம் இந்த இராசிகளிலிருந்தால் மலடனுவான்.

ஒன்று ஏழு பன்னிரண்டில் பாவியிருக்க பெண்சாதியும் புத்திரி யும் ஈனம்.

சுக்கிரன் மூன்றுக்கு அதிபனுக யிருந்தால் அதிகாமியா யிருப் பான்.

ஏழில் சுக்கிரன் செவ்வாயிருக்க பாவிபார்க்க அவன் உந்திக் கமலத்தில் வியாதியுண்டு.

ஏழில் சுக்கிரன், செவ்வாய், சந்திரன் நிற்க அல்லது பார்க்க களத்திரம் புருஷனறிய தேடியுண்பாள்.

ஏழில் சூரியன் பாபருடன் கூடியிருந்தால் பல்லாவது கண்ணு வது ஊனமாகும்.

ஏழு பன்னிரண்டில் பாவியிருந்து சீரணச்சந்திரன் ஏழு ஐந்தி லிருந்தால் ஆண் மலடாம்.

ஏழில் சனியிருக்க மகரம், விருச்சிகம், மேஷம் இந்த ராசிகளில் சுக்கிரனும் சந்திரனும் கூடியிருந்தால் அவனுடைய ஸ்தி மற்றவருடன் கூடி புருஷனறியத்தேடி புருஷனுக்கு போடு வாள்.

ஏழில் சூரியனிருந்து சந்திரன் பாபருக்கு நடுவேயிருந்தால் வியா தியா யிருப்பாள்.

ஏழிலும் லக்கினத்திலும் பாபியிருந்து ஒன்பதில் சுக்கிரன் சூரி னுடன் கூடியிருக்க தாரமில்லாமல் தரித்திரனுவான்.

ஏழுக்கதிபன் பகையுடன் கூடினுலும் நீசமானுலும் முந்தி பெண்சாதிக்கீனம்.

சுக்கிரன் ஆறு எட்டு பன்னிரண்டிலிருந்து பாவி பார்த்தாலு சம்பந்தப்பட்டாலும் கல்யாணமில்லை. எத்தனை கல்யாண மானுலும் நல்லது.

இலக்கினத்திற்கு நாலில் சனி, சந்திரன் கூடிநிற்க இரண்டா களத்திரத்திற்கு புத்திரருண்டு.

சுக்கிரனிருந்த இராசிக்கு ஏழுக்கு அதிபன் எந்தத் திக்கிலி கிருனே அந்தத் திக்கிலேயிருந்து களத்திரம் வரும். ஏழு கதிபன் ஏழில் சுபனுக இருந்தால் தயாளமுள்ளவன்.

ஏழில் இராகு, கேது இருந்தால் அவன் திசை பொசிப்பில் தா சாவகாசம் பண்ணுவான்.

சுக்கிரன் ஒன்று, ஐந்து, ஒன்பதிலிருந்தால் மரண பரியந் போகியா யிருப்பான்.

சுக்கிரன் மூன்றுக்கு அதிபன் கூடினுலும் பார்த்தாலும் பரஸ் களுக்கு எவ்வளவு கொடுத்தாலும் விசுவாசமிராது.

சுக்கிரனுடன் சனி கூடினுலும் அல்லது பார்த்தாலும் தனது ஸ் ரீயை விட்டு பிறஸ்திரீயோடு சம்போகம் பண்ணுவான்.

இலக்கினத்தை அல்லது சந்திரனை வியாழன் பார்க்கில் கூடில் வாலிபத்தில் விவாகம்.

ஏழுக்கதிபன் சுபனுயிருந்து நீச அங்கிசனுய் ஆறு, எட்டு, பன்னிரண்டில் இருந்தால் அவன் ஸ்திரீ வாலிபத்தில் மரணம், கைம் பெண்ணுடன் புணர்ச்சி.

ஏழுக்கதிபனேடு இராகு கேது கூடினுல் ஈனஸ்திரீயை புணர்ச்சி செய்வான்.

ஜாதகன் பிறக்கும்போது சுக்கிரனேடு வியாழன்கூடில் இராஜ கன்னிகையோடும், சூரியனும் அங்காரகனுங் கூடினுல் க்ஷத்திரிய ஸ்திரீயோடும், சந்திரனும் புதனுங்கூடில் வைசியகுல மாதரோடும், சனிகூடில் சூத்திரமாதரோடும், குரு கேது கூடினுல் புலையர்குலத்தில் பிறந்த மாதர்களோடும் பெருமையோடு கூடியிருப்பான்.

களத்திர தானுதிபனைக்கூடி எத்தனைக்கோள் நின்கின்றதோ அத்தனை களத்திரமுண்டாம்.

களத்திரகாரகன் ஸ்தானுதிபதி சுபனுக இருக்க சுபக்கிரகம் பார்க்க உத்தமம்.

இவர்கள் வியஸ்தானத்திலும் சிம்மவிராசியிலுமிருக்க பாவர்கள் காண மத்திபமாம்.

பாம்புகளும் செவ்வாயும் களத்திரதானத்தி லிருந்திடில் களத்திரப் பீடையுண்டாகும். சுபக்கிரகங்கள் பார்க்கில் உத்தமமாம்.

களத்திரஸ்தானுதிபதியும் இலக்கினுதிபதியும்கூடி தங்கள் மனைகளிலும் ஒன்பதிலும் நிற்பாராகில், இவன் பல ஸ்திரீகளை கூடினுலும் களத்திரம் ஒன்றே நடக்கும்.

களத்திராதிபதியும், குடும்பாதிபதியும், பாவர்களும், வெள்ளியுங் கூடி மூன்றில் ஒன்றில் ஆறில் மருவிநிற்க, மனையாளுக்கு ஈனமுண்டாம்.

இலக்கினுதிபதியும், ஏழாமதிபனும்கூடி, வியத்திலும் ஆறிலும், எட்டிலும் நிற்க, விவாகமில்லையாம்.

ஏழாமிடம் சுத்தியாக, ஏழாமிடத்ததிபனேடு ஊனமில்லா கிரகங்கள் பலர்கூடினும் விவாகமொன்று.

சுக்கிரனும் அங்காரகனும் ஏழில் நிற்கில், விதவை ஸ்திரீயை மணம் புரிவான்.

சந்திரனும், அங்காரகனும், ஆருமாதியுங்கூடி நாலாமிடத்தில் நின்ருலும், அல்லது லக்கினம் ஒன்பது, நாலு, ஆறு இந்த ஸ்தானுதிபதிகள் மேற்சொன்ன ஸ்தானத்தில் கூடிநிற்கில், இவனுக்கு வேருெரு விஷயமு முண்டாகும்.

ஏழாமிடத்தில் பாவர்கள்நிற்க, இவன் களத்திரத்திற்கு ரோக முண்டாம்.

சூரியனேடு பாம்புகூடி, இரண்டாமிடத்தில் நிற்க, களத்திரத் திற்கு வெகுநோய் காட்டும்.

இரண்டாமிடத்தை பாபர்கள் பார்க்கிலும் நிற்கிலும் களத்திரம் பிணிகொண்டு வாழும், குடும்பம் ஏழையாம்.

ஏழாம்வீட்டிற்கதிபன் சரராசியில் நிற்கில், இவநக்கு தாரம் இரண்டு. ஸ்திர ராசியில் நின்ருல் உத்தமம்.

உபயராசியில் நிற்கில், மாதர்கள் பலருண்டாம். ஷை ஸ்தானுதி பதியுடன் சேர்ந்த கிரகம் பார்த்த கிரகங்களால் பலன்கள் கூடும்.

இலக்கினுதிபதி சுக்கிரன் வீட்டில் இருந்தாலும், அல்லது கூடிநிற் லும் அல்லது சுக்கிரன் பார்க்க, உத்தம ஸ்திரீ யுள்ளவனும்.

ஏழுக்குடையவனும் இரண்டுக்குடையவனும் சுக்கிரனும் இவர்கள் மூவரும் பாவிகளுடன் சேர்ந்து ஆறில் எட்டில் பனிரண்டில் நிற்க, இவனுக்கு கலியாணம் நடக்கும். ஆகி லும் இவனுக்கு களத்திரம் தங்காது.

இரண்டாமதிபனும் ஏழாமதிபனும் கேந்திரகோணத்திலுமிருக்க இவனுக்கு ஏகதாரமுண்டாம்.

அவ்விருவர்களுடன் சுக்கிரனும் பாபருடன்கூடி ஜென்மத்திலும் ஆறிலும் எட்டிலும் இருக்க, வேசியர்க்கு இனியனுவன்.

ஏழாமாதியும் குடும்பாதியும் இவர்கள் கேந்திர திரிகோணங்களில் நிற்க, அல்லது அவரவர்கள் வீட்டில் இருந்தாலும் ஏகதார முடையவன்.

சுக்கிரனும் ஏழாமதிபனுந் தனித்துக்கூடி பாவர்களுக்கு மத்தி யில் நிற்க, ஏழாமிடத்திலும் பாவர்கள்சேர மேற்சொன்ன வர்களையும் பாவர்கள் பார்ப்பாராகில் களத்திரத்திற்கு அரிட்டம் வரும்.

சனியும் சூரியனுங்கூடி கன்னியில் நிற்க, அந்த வீடு ஜென்ம லக்கினமாக, குரு மீனராசியில் நிற்க, இப்பேர்ப்பட்டவன் மனைவி துன்பத்தோடு அரிட்டமாவான்.

இலக்கினத்திற்கு ஏழாமிடத்திலும், சந்திரனுக்கு ஏழாமிடத்திலும் சுபக்கிரகங்கள் பார்வையிருந்தால் களத்திரபலனுண்டு.

பாபக்கிரகங்கள் பார்வையிருந்தால் களத்திரத்தை மணம் புரியாத வஞ்சகனாக யிருப்பான்.

ஏழாமதிபனும் சுக்கிரனும் நீசமாகி, ஆறில் எட்டில் பன்னிரண்டில் நிற்க, மனையாளுக்கு யீனமாம்.

சுக்கிரன் இருக்கிற வீட்டிற்குடையவன் ஆறில் எட்டில் பன்னிரண்டில் நிற்க, இவன் மனைவியும் யீனமாம்.

ஏழாமதிபன் பாவர் வீட்டில் நிற்கில் அல்லது பார்க்கில் இவனுக்கு விவாகம் தூரதேசத்திலாகும். களத்திராதிபன் சுபாங்கிச மேற, களத்திரம் சமீபத்தில் கிடைக்கும்.

ஏழாமதிபன் சூரியனாகில் கிழக்குத் திசையும், சுக்கிரனாகில் வன்னி திசையும், செவ்வாயாகில் தெற்கு திசையும், ராகு, கேதுகளுக்கு நிருதி திசையும், சனியாகில் மேற்குத் திசையும், சந்திரனாகில் வாயு திசையும், புதனாகில் வடக்கு திசையும், குருவாகில் ஈசானிய திசையிலும் களத்திரம் வருமாம்.

ஏழாமிடத்தோன் ஆறில் எட்டில் பன்னிரண்டாமிடத்தில் போய் அதிக பாவனாகயிருக்க அவனைப் பார்த்த கிரகங்கள் எத்தனையோ அத்தனை தாரமாம்.

களத்திர ஸ்தானாதிபதி பாவிகளுடன் சேர ஏழாமிடத்தில் ராகுவிருக்க, அதற்கு கேந்திரத்தில் பாவர்கள் இருக்க, அல்லது பார்த்தால் அவன் மிருகாதிகளை விரும்புவன்.

ஏழாமிடத்ததிபன் சூரியனுடன்கூடி ஆறு எட்டு வியத்திலிருக்கில், இவனுக்கு வாலிபத்திலே மனைவி விண்ணுலகம் சேர்வாள்.

களத்திராதிபன் சுபக்கிரகங்களுடன் கூடினால் இவன் மனைவி அடக்க முடையவளாயும் சுபகளத்திரமாகவும் பாவர்களால் கூடிப் பார்க்கப்பட்டால் பாவகளத்திரமாகவும் இருப்பான்.

சனி ஏழாமிடத்ததிபனாகி, ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்கில் விதவை ஸ்திரீயைச் சேர்வான்.

ஏழாமிடத்ததிபன் பாம்போடிகூடி ஆறு, எட்டு, வியத்தில் இருக்க, ஈனகுலத்து மாதரை சேர்வான்.

ஏழாமதிபன் சனியின் வீட்டில் நிற்க, சனி பார்க்க ஏழாமிடத்திற்கு ஒன்பதாமிடத்தாதிபன் எட்டாமிடத்திலாயினும் அல்லது சனி வீட்டிலாயினும் வந்திருந்தால், இவன் மனைவியின் விபசாரத்தனத்தினுல் ஜீவிப்பவனுவான்.

ஏழுக்குடையவன் வலிமைபெற்று நட்பு கிரகங்களைக்கூடி இலாபஸ்தானத்தில் எத்தனை கிரகங்களோடு கூடி யிருக்கிறதோ அத்தனை களத்திரம் உண்டு. அந்த லாபஸ்தானம் ஸ்திர உபய ராசியாகில் சுகமுண்டு.

அந்த லாபஸ்தானம் சரராசியாகில் களத்திரத்திற்கு கொஞ்சம் அரிட்டமுண்டு.

இலக்கினம், கன்னிராசியாக, சந்திரனுஞ் சனியும் கேந்திரத்திலிருக்க பந்துகளத்திரத்தை மணம்புரிந்து பூபதியாய் வாழ்வான்.

ஏழாமிடத்தில் சுக்கிரனும், சன்மத்தில் குருவும், சுபமாக இருக்கில் களத்திரம் அனேகமுண்டு அவர்களை ரக்ஷிக்கமாட்டான்.

சுக்கிரன், அங்காரகன், சந்திரன், சூரியன், குரு, ஐந்து பேர்களும் ஒரு ராசியில் கூடிநிற்கில், மனைவியில்லாமல் வியாதி கொண்டு அலைகுவான்.

சந்திரன், சூரியன், புதன், சனி, வெள்ளி, இந்த ஐந்து பேர்களும் ஒரு ராசியில் நின்ருல், மனைவி மக்களை ஓட்டிவிட்டு வியாதி கொண்டு தேசசஞ்சாரியாக விருப்பான்.

இலக்கினுதிபதி நின்ற அங்கிசாதிபதியின் வீட்டில் குரு வருங்காலத்தில் கலியாண முண்டாகும்.

ஏழுக்கதிபன் நின்ற அங்கிசத்தில் குரு வருங்காலத்திலும் நல்ல களத்திரத்தை மணமுடிப்பன்.

குடும்பாதிபதியும் களத்திராதிபதியும், ஆருமாதியும் சுக்கிரனும் கூடிப் பாவருடன் லக்கினத்திலிருக்கப் பிறந்தவன் பரதாரகமனனுவான்.

மேற்சொன்னவர்கள் பாக்கியஸ்தானத்திலும், இவ்வாறு கூடி நிற்கில் பரதாரகமனனுவான்.

சுக்கிரனும், ஏழாமாதியும், ஆருமாதியுங்கூடி ஒரு வீட்டில் நிற்கில் போகமில்லை.

இரண்டாமாதி மூன்ருமாதி இவர்கள் சேர்ந்து ஆறு, எட்டு, பனிரெண்டில் கூடியிருக்கில் களரோகம் வரும்.

ஜென்மாதியும், ஏழாமாதியும், கேந்திரக்கோணத்தில் கூடியிருக்க அந்த வீட்டோன் இலக்கினத்தில் மேவினல் அவன் திசை பொசிப்பில் இந்த ஜாதகனுக்கும் களத்திரத்திற்கும் மரணம் வரும்.

சப்தமாதி அட்டமாதியோடு பாவராயினும், அந்த ஸ்தானங்களில் பாவர்களாயினும், வியஸ்தானத்தில் குரு அங்காரகனுடன் கூடினுலும் இந்த ஜாதகனுக்கு இரண்டு விவாகம் நடக்கும்.

ஏழாமாதி, இரண்டாமாதி, இவர்களிருவரில் யாவரேனும் ஒருவர் பலவீனனுகவிருக்க, அவர்கள் வீட்டில் பாவர்கள் நிற்க, இந்த ஜாதகன் இரண்டு விவாகஞ் செய்து வாழ்வான்.

இரண்டாமிடத்தில் பாவர்கள் வந்திருக்க, ஏழிலும் பாவர்கள் நிற்க, அந்த ராசிகளிலும் அவர்களோடும் பாவர்கள் வந்து நிற்க, இரண்டு விவாகஞ்செய்து வாழ்வான்.

ஜென்மத்திலும், இரண்டிலும் ஏழிலும், பாவர்களாக நிற்க, களத்திராதிபதி அஸ்த நீச்சமாக சத்துருவீட்டில் நிற்கில், இரண்டு தாரம் நடக்கும்.

களத்திராதிபதி கேந்திரகோணத்தில் பாவிகள் வீட்டில் நிற்க, அதில் பத்தாமிடத்தோன்கூட ஏழாமிடத்தோனுடைய அங்கிசமேற இவன் அநேகம் பெண்களை விவாகம் புரிவான்.

ஏழாமிடத்தில் குரு பலமாக இருக்க சுக்கிரனும் வலுவுபெற்றிருக்க குடும்பாதிபதி நட்பு அங்கிசத்திலிருக்க, அதிக அழகுள்ள பெண்ணை விவாகஞ் செய்வான்.

இலாபாதிபதியும், ஏழாமாதியுங்கூடி திரிகோணத்திலிருக்க, சுபர்கள் பார்க்க, இவன் அனேகம் பெண்களை விவாகஞ் செய்வான்.

இரண்டாமாதியும், ஏழாமாதியும், இலக்கின கோபுராங்கிசத்திலிருக்க பத்தாமாதி ஏழாமிடத்திலிருக்க, இவன் பத்து பெண்களை விவாகம் செய்வான்.

களத்திராதிபதி சுபராசியிலேறி, அங்கிசமும் நல்லவீடாய் சுக்கிரனும் அவ்வாறிருக்க, அல்லது பத்தாமிடத்ததிபனுடன் பலவான்கள்கூட இவன் மோகனப் பெண்ணை விவாகம் செய்வான்.

களத்திராதிபதி வியாழனுடன் கூடினாலும், அல்லது அவர்கள் பார்வையுற்று சுபராசியில் நின்றாலும், சுக்கிரன் பலவானாயிருக்க, இவனுக்கு தானதருமமுள்ள களத்திரம் கிடைக்கும்.

இலக்கினம் தனுசு மீனமாகி அதில் புதனும் சந்திரனும் நீச்ச அஸ்தமனமாகி அங்கிசமும் சத்துருவின் அங்கிசமாகில், களத்திர ஸ்தானத்தில் பாவர்கள் இருந்தால் இவன் வேசியை விவாகம் செய்வன்.

குரு களத்திர ஸ்தானாதிபதியாகி பாபருடன்கூடி, பாவ இராசியிலிருக்க, பாவர்களாலும் பார்க்கப்பட்டு சனி, செவ்வாய் அங்கிசத்திலிருந்தால் இவன் களத்திரம் சோரம் போவாள்.

சுக்கிரன் களத்திர ஸ்தானாதிபதியாகி பாவருடன்கூடி பாவர்கள் பார்க்க ஏழாமிடத்தில் சத்துரு அங்கிசையில் இருந்தால் இவன்தாரம் சோரம்போவாள்.

ஏழாமிடத்தோன் பாவருடன்கூடி இரண்டாமிடத்திலிருக்க, அங்காரகன் பார்க்க, இவனுக்கு விபசாரத்தொழிலால் புத்திரனுண்டாகும்

இலக்கினாதிபதியும் ஆறு, எட்டு, பன்னிரண்டில் இருக்க, இவன் இரண்டு தாரம் விவாகம் செய்வான்.

இலாபாதிபதியும், களத்திராதியும் கூடினாலும், பார்த்தாலும் பலவானாகி திருகோணத்திலிருந்தாலும், இவனுக்கு விவாகம் ஒன்றுதான் நடக்கும்.

இலக்கினத்திற்கு ஏழிலும், வியத்திலும், சந்திரன் பாவாங்கிசமேறி யிருக்க, சுக்கிரன் பாவரோடுங்கூடி யிருக்க, இவன் மனைவி புருஷனைக் கொல்லத் துணிந்திடுவாள்.

ஏழாம் பாவபலன் முற்றிற்று.

---

# எட்டாம் பாவபலன்

எட்டாமிடத்தில் சூரியனிருந்தால் நேத்திரரோகம், ஆயுள் விருத்தி திரவிய பூச்சியம், தருமசிந்தனை யில்லாதவன், அழகுடையவன், கல்விப்பிரியன், அங்கினிகிலேச முடையவன்.

சந்திரனிருந்தால் அல்ப புத்திரனுண்டு, பித்தசரீரம், வியாதி பீடிக்கும், நேத்திரரோகம், பின்னுல் சௌக்கியம், மாதுரு அரிட்டம், பிறமாதர் விரோதமுண்டு, அற்பாயுள், பாலாரிட்டம், சுகசந்தோஷமுண்டு, தியாகி, சூரன், குணமுடையவன்.

செவ்வாயிருந்தால் அல்பபுத்தி சொல்ப நேத்திரரோகம், அற்பாயுள் பாட்டனுக்கு ரோகம், மாதுருகண்டம், பெண்ஜாதி கடினன் அபகாரமுடையவன், வேசிசம்போகன், ராஜப்பிரியன், தனமுடையவன், ஆயுதத்தினுல் தத்துடையவன்.

புதனிருந்தால் தீர்க்காயுள், வெகு சேத்திரமுண்டு, சம்பன்னன், புத்திராள் அற்பம், குணமுடையவன், வெகு திரவியவான், ஜலத் தத்துண்டு.

வியாழனிருந்தால் ஜாதிப் பிரவேசபிரியன், சாதிசங்கமன், ஆசாரமுடையவன், மூலரோகம், தீர்க்காயுள், சரீரம் பெருத்திருக்கும், புத்திமான், வியாதியால் தத்துண்டு.

சுக்கிரனிருந்தால் நல்ல குணவான், தீர்க்காயுளுண்டு, சுகியாயிருப்பான், மாதுருகண்டம், ஸ்திரீபோகன், துன்மார்க்கன் ஆயுள் பரியந்தம் செல்வவானுக யிருப்பான். பெண்சாதி விபசாரியால் தனமுடையவன்.

சனியிருந்தால் தீர்க்காயுளுண்டு, அதிக தரித்திரமுண்டு, சூத்திர ஸ்திரீசம்போகன், சேவகவிர்த்தி, அற்ப புத்திரனுண்டு, நேத்திரரோகம், உத்தியோகபங்கம். ஒருத்தன் பெண்சாதியைக் கை பிடிப்பான், தனயீனன், கோபவான், சூரன், பிதாவுக்கு தோஷமுண்டு, பசியினுலே தத்துடையவன்.

ஏழில் ராகு, பத்தில் சூரியன், நாலில் சனியிருக்க மலை சுவர் மரங்கள் இதுகளின்மேலே ஏறி விழுந்து மரணம்.

ஏழில் சனி, பத்தில் சந்திரன் இலக்கினத்தில் செவ்வா யிருந்தால், அவன் கிணற்றில் குளத்தில் பள்ளங்களில் விழுந்து மரண மாவான்.

ஏழாமிடம் கன்னியாகி சூரியனும் சந்திரனுமிருக்க, இவர்களை பாவர் பார்க்க, கூடியிருக்க பந்துக்களால் மரணம்.

உபயராசிகளில் இவர்களிருந்து பாவர் சம்பந்தப்பட்டால் தண்ணீரில் மரணம்.

கடகத்தில் சனி, சந்திரனிருத்தால் வயிற்று வியாதியுண்டு, சந்திரனும் செவ்வாயும் ஆட்சியாகப் பாவருக்கு நடுவே நிற்க ஆயுதத்தினுல் அக்கினியால் மரணம்.

சந்திரன் சனி ஆட்சியாய் பாவருக்கு நடுவே நிற்க, கழுத்தில் கயறு மாட்டிக்கொண்டாவது அக்கினியாலாவது மரணம்.

ஐந்து ஒன்பதில் பாவர் இருக்க, சுபர்பார்க்க காற்றினுலாகிலும் விலங்கினுலாகிலும் மரணம்.

மீனலக்கினத்தில் சூரியனும், அதற்கு ஏழில் பாவியும், சந்திரனு மிருக்க மேஷத்தில் சுக்கிரனிருக்க ஸ்திரீயால் மரணம்.

நாலில் சூரியனும் பத்தில் செவ்வாயும் அமரபட்சத்து சந்திரனும் கூடியிருக்க, அல்லது பார்க்க மரத்தின்மேல் ஏறி விழுந்து மரணம்.

எட்டில் சீரணசந்திரனும், பத்தில் செவ்வாயும், லக்கினத்தில் சனியும், ஐந்தில் சூரியனிருந்தால் கழுத்து கட்டியினு மரணம்.

இலக்கினத்தில் சனி, நாலில் செவ்வாய், ஏழில் சூரியன், பத்தில் சனியிருந்தால் ராஜா அக்கினி ஆயுதத்தினுல் மரணம்.

இரண்டில் சனி, நாலில் சந்திரன், பத்தில் செவ்வாயிருக்க வாகனத்தின்மேல் ஏறி விழுந்து மரணம்.

இல்க்கினத்தில் சீரணச்சந்திரனும், சூரியனுமிருந்து ஏழில் செவ்வாயிருக்க பீரங்கிவாயால் மரணம்.

துலாத்தில் செவ்வாய், மேஷத்தில் சூரியன், மகரத்தில் சந்திரனிருக்க நீரினுல் மரணம்.

பத்தில் சந்திரன், ஏழில் சூரியன், நாலில் செவ்வாயிருந்தால் ரோகத்தால் மரணம்.

அமரபட்சத்து சந்திரன் பலவீனமாயிருந்து செவ்வாய் பார்க்க சந்திரனுக்கு எட்டில் சனியிருந்தால் குய்யத்தில் கட்டி புறப்பட்டு மிட்டு புழுபுழுத்து மரணமாவான்.

எட்டில் சூரியன், சந்திரன், செவ்வாய், சனிநிற்க பட்சி தோஷத்தினுல் மரணம்.

இலக்கினத்தில் சூரியன், எட்டில் செவ்வாய், ஐந்தில் சனி, ஒன்பதில் சந்திரன் இருக்க, மலையிலிருந்து விழுந்தாவது இடி விழுந்தாவது சுவர்விழுந்தாவது மரணம்.

எட்டில் நீச்சக்கிரகமிருக்க, பன்னிரண்டில் வியாழனிருந்தால் ஒரு வித்தையும் வராமல் மூடனுவான் அற்பாயுள்.

ஆயுள் கிரகபலமில்லாமல் அஷ்டமத்தையாவது அஷ்டமாதிபனை யாவது சனிபார்த்தால் ஆயுள்விர்த்தி, எட்டில் வியாழனிருந் தால் ஆயுள் பலமாம்.

இலக்கினத்தில், சனி எட்டில், குரு இருக்கப் பார்க்க கன்னியில் சுக்கிரன் நிற்க, சந்திரன் சீரணமாய் பாபர் கூடியிருக்க, அவன் மாருகால் மாருகை அறுப்பட்டு துக்கமாயிருப்பான்.

இலக்கினுதிபனும், அஷ்டமாதிபனும், ஆறு, எட்டு, பன்னிரண் டில் இருந்து, இலக்கினத்தை சந்திரன் வியாழன் பாராமல் கேந்திரங்களில் சுபக்கிரகங்க ளில்லாவிட்டால் பாலாரிஷ்டம் அற்பாயுள்.

அஷ்டமாதிபன் மூன்று, ஒன்பது, ஐந்தில் இருந்து அஷ்டமத் தைச் சனிபார்த்தால் வயது எழுபத்து ஐந்து.

இலக்கினுதிபனும், அஷ்டமாதிபனும், இலக்கினத்திலிருக்க இவர் களை வியாழனுவது சுக்கிரனுவதுபார்த்தால் பூரணுயுசு.

பிதுர்ஸ்தானுதிபதி விரையஸ்தானத்தில் பலயீனமாயிருந்து சூரி யன் சனிபார்த்தால் பிதாவுக்கு அற்பாயுள் வியாழன் பார்த் தால் மத்திப ஆயுள். இவ்விதமாக ஒவ்வொரு காரகர்களுக் கும் பார்த்துச் சொல்லவும்.

ஆறு, எட்டில், பாவர் இருக்க இலக்கினுதிபன் பகை நீசங்களி லிருந்தால் அற்பாயுளும், பிறந்த கோத்திரத்திற்கும் ஆகாது.

வியாழன், சுக்கிரன், நீசமாயிருந்து ஒன்பதில் செவ்வாயிருக்க, சந்திரனும், சூரியனும் ஏழில் இருக்க, இவர்களை சனி பார்த் தால் தாயும் பிள்ளையும் ஒருவருக்குள் அடக்கமாவார்கள்.

சூரியன்வீட்டில் சந்திரனும், சந்திரன்வீட்டில் சூரியனுமா யிருக்க, அல்லது கூட சரீர் ஊனமா யிருப்பான்,

இலக்கினத்திற்கு எட்டில் சூரியன் உச்சமாய் அவனுடன் கூடில் கண் ஊனமாகும்.

கடகத்தில் சந்திரன் இருந்து அவனை சனி செவ்வாய் பார்க்கில் அல்லதுகூட காது செவிடனுவான்.

மகரம் இலக்கினமாக, அதில் சூரியன் இருக்க, சுபர் பாராவிட்டால் மூடனுவான். சூரியன் சந்திரன், இலக்கினத்தைப் பார்க்க மூடனுவான்.

இலக்கினுதிபதியும் சனியும் எட்டு பத்துக்கதிபனும், இவர்கள் நட்பு ஆட்சி உச்சம், திரிகோணங்களிலிருந்து மித்துரு கிரகம் பார்க்க நின்றால் பூரண ஆயுளும் யோகபோக்கியமும் அனுபவிப்பான்.

எட்டில் ஏழில் பாவர்கள் இருக்க, அல்லது பார்க்க தாயும் குழந்தையும் மரணம்.

சூரியன் சந்திரன் சுக்கிரன் இவர்கள் பாவர்களுக்கு மத்தியிலிருக்க, சுபர்கள் பாராவிட்டால் மாதா பிதாவுக்குப் பீடை.

இலக்கினத்தில் செவ்வாயிருக்க, ஏழில் சூரியனிருக்க தாயும் குழந்தையும் மரணம்.

சூரியன் சனி செவ்வாய் இவர்கள்கூடி நின்றால் பிதாவுக்குப் பீடை.

எட்டில் செவ்வாயும், இலக்கினத்தில் பாபருமிருக்க சூரியனும் சந்திரனும், பாபருடன் கூடினுல் தாயும் குழந்தையும் மரணம்.

கேந்திரேசன் பாவியுடனே சஷ்டாஷ்டம வியத்திலிருக்க எட்பமிட மூடையவனு மப்படியிருக்க அற்பாயுள்.

அஷ்டமாதிபதி ஸ்வட்சேத்திரவுச்சத்திலிருக்க சனியுஞ் சுபக்கிரகத்துடனே கூடியிருக்க தீர்க்காயுள்.

கேந்திரேசன் இலக்கனத்திலிருக்க இலக்கினுதிபதி வியத்தில் சுபக்கிரகத்துடனே கூடியிருக்க சஷ்டாதிபதி லக்கினுதிபதியுடனே கூடியிருக்க சுபக்கிரகம் பார்க்க தீர்க்காயுள்.

கர்மேசனுடனேகூடி இலக்கினுதிபதி இலக்கினத்திலிருந்து சுபர்கள் பார்க்கத் தீர்க்காயுள்.

நாலாமிட முடையவன் கேந்திரத்திலிருக்க ஸ்வட்சேத்திர கோணங்களிலே அஷ்டமாதிபதியிருக்க தீர்க்காயுள்.

ஒன்று, நாலு, ஏழு, பத்தில் சுபக்கிரகமிருக்க இலக்கினுதிபதி சுபக்கிரகத்திலிருக்க குருவாலே பார்க்கப்படத் தீர்க்காயுள்.

கேந்திரத்தில் இலக்கினுதிபதியிருக்க குரு சுக்கிரன் பார்க்க இலக்கினுதிபதி சுபனுகவிருந்து அஷ்டமாதிபதியைப் பார்க்கத் தீர்க்காயுள்.

பாவர்கள் மூன்று, ஆறு, பதினென்றிலிருக்க சுபாளெல்லாங் கேந்திரத் திரிகோணங்களிலிருக்க தீர்க்காயுள்.

அஷ்டமத்தினுச்சனுக ஒரு கிரக மிருக்க அஷ்டமாதிபதியை வியாழம் பார்க்க தீர்க்காயுள்.

சஷ்டாஷ்டம வியங்களில் பாவரிருக்க இலக்கினதிபதி பலயீனமாக அற்பாயுளாம்.

அஷ்டமாதிபதி சஷ்டியங்கிசமேறினும் சூரியனுடனே கூடினும் அற்பாயுளாம்.

வியத்தாதிபதி பாவியுடனேகூடி நிற்கச் சுபக்கிரகம் பாராது இருக்க அற்பாயுள்.

அஷ்டமாதிபதிக்கு ஆதித்தன் சத்துருவாயிருக்க இலக்கினுதிபதிக்கும் அப்படியேயிருந்தும் சமமாயுமிருக்கில் மத்திமாயுள் மித்திரனுனல் தீர்க்காயுள்.

சுபக்கிரகங்கள் மூலத்திரிகோணங்களி லிருக்க சஷ்டாதிபதியும் அஷ்டமாதிபதியும் பாவிகளுடனே கூடியிருக்க மத்திமாயுள். இந்தத்திசை பிறந்தவுடனே அஷ்டமாதிபதி சஷ்டமாதிபதி திசையாக அவன் சஷ்டாஷ்டம வியத்திலிருந்தால் பிறந்தவுடனே மரிப்பான்.

அஷ்டமாதிபதியுடனே ஆரும்இடத்துக் குடையவன்கூட அல்லது கேதுவுடனேயும் சனியுடனேயுங் கூடியிருக்கச் சத்திரவிரணத்தால் சாவான்.

இலக்கினுதிபதியும் வாகனுதிபதியுங் கூடியிருக்க அஷ்டமாதிபதியுடனே கேதுகூட அன்னிய தேசத்தில் மரணம்.

இலக்கினத்திற் சந்திரனிருக்க வியத்திற் பாவியிருக்க ஸ்திரீ கிரகங்களினுற் பார்க்கப்பட அவனுக்கு ஸ்திரீயேதுவினுலே மரணம்.

ஏழில் சூரியனிருக்க சந்திரன் இலக்கினத்திலிருக்க பாவர்
வியத்தில் நிற்க, சுக்கிரனாலே பார்க்கப்பட அவன் ஸ்திரீ
ஏதுவினால் விஷமருந்தி சாவான்.

மூன்றுக்குடையவன் சஷ்டாஷ்டம வியங்களிலிருக்க பல ஸ்திரீ
ஏதுவால் மரணம்.

இலக்கினாதிபதி பூரண பலமாகி இருந்தாலும் ஸ்திரீ ஏதுவினால்
மரணம்.

இலக்கினாதிபதி பரிபூரண பலவானாக நாலில் நிற்கப் பாக்கி
யேசன் சஷ்டாஷ்டம வியங்களில் நிற்க அதைச் சுக்கிரன்
பார்க்க அந்த மாது சோரபர்த்தா நிமித்தம் தன் பிள்ளையைக்
கொல்வாள்.

அஷ்டமாதிபதியும் பத்தாமிடமுடையவனுங்கூட ஏழாமிடத்தில்
இருக்க அல்லது நாலாமிடத்திலிருக்க முன்சொன்ன பலன்.

மூன்றுமிடத்துக்குடையவன் ஏழாமிடத்திலிருக்க, நாலாமிட
முடையவன் அஷ்டமத்திலிருக்க பாக்கியாதிபதி பார்க்க
முன்சொன்ன பலன்.

பாக்கியாதிபதி பலவானாக நாலாமிடமுடையவன் சந்திரனுடனே
கூடியிருக்க சுக்கிரனாலே பார்க்கப்பட அந்தப் பிள்ளையை
மாதா பிரியமாய் போஷிப்பாள்.

ஆறுமிட த்திற் பாவியிருக்க அஷ்டமாதிபதி பாவருடனே கூடி
யிருக்க குய்யத்தானத்தில் வியாதி வந்து மரிப்பான்.

எட்டாமிடத்துக்குடையவன் சந்திரன் இவர்கள் அங்காரகன்
கூடி நோக்கினும் ஆயுதத்தாலும் இரத்த விரணத்தாலும்
மரணமாவான்.

எட்டாமிடத்தில் சூரியனிருக்கில், அபவாதத்தாலும், நோயாலும்
மரணமாவான்.

பன்னிரண்டில் சுக்கிரன் இருக்க எட்டில் சனியிருக்க தன்னால்
மரணமாவான்.

எட்டாமிடத்துக்குடையவன் இருந்த இராசி அங்கிசக்காலன்றி
இருக்கில் அந்த இராசிமாதம் மரணமாதமும் மரணவ
தினமுமாம்,

எட்டாமிடத்திற்குடையவன் வாரமும் இவனைச்சேர்ந்த கிரகங்களின் நாளும் இதற்குத் திரிகோணமும் பாவக்கிரகங்கள் சேருங் காலமே மரணகாலமாம்.

இலக்கினாதிபதிக்கு ஆறுமிடத்தில் எட்டு பத்தாமிடத்திற் குடையவர்கள் உச்சஸ்வட்க்ஷேத்திர மித்துருக்ஷேத்திர கேந்திர திரிகோணங்களாக இருக்க ஒருவர்க்கொருவர் மித்துரு கிரகங்களாகவும் கூடியிருக்க தீர்க்காயுளாம்.

மேஷவிருச்சிகம் இலக்கினமாக அதில் அங்காரகன் இராகு சூரியன் சந்திரன் இவர்கள் கூடியிருக்கில் ஆயுதத்தால் மரணமாவான்.

சந்திரனோடு சனி அங்காரகன் சூரியன் இவர்கள் கூடில் திரேக பங்கங்களால் மரணமாவான்.

எட்டாமிடத்தில் சூரியன் நிற்கில் அக்கினியாலும், சந்திரன் நிற்கில் ஜலத்தாலும், செவ்வாய் நிற்கில் ஆயுதத்தாலும், புதன் நிற்கில் முனியாலும், மலையாலும், வஞ்சனையினாலும், வியாதியினாலும், குரு நிற்கில் வியாதியினாலும், நீரினாலும், சுக்கிரன் நிற்கில் பசிதாகங்களாலும், சனி பாம்புநிற்கில் விஷத்தாலும் வியாதியாலும் மரணமாவான்.

சனி கடகத்திலும், சந்திரன் மகரத்திலும் நிற்கில் உதரநோயாலும் நாராசத்தாலும் மரணமாவான்.

அங்காரகனும் சனியும் நாலாமிடத்தில் நிற்க சூரியன் எட்டு பனிரண்டில் நிற்கில் கிணற்றில் விழுந்தாவது மலைகளிலேறி விழுந்தாவது மரணமாவான்.

சூரியன் சந்திரன் இவர்கள் கன்னியில் நிற்க, இவர்களைப் பாபக்கிரகங்கள் பாக்கினும் கூடினும் விஷத்தினால் அல்லது அலகையால் மயக்கத்தால் மரணமாவான்.

இலக்கினம் மீனமாக அதில் சந்திரன் சூரியன் இவர்கள் நிற்க, இவர்களைப் பாபக்கிரகங்கள் கூடில் குளத்தில் வீழ்ந்து மரணமாவான்.

கன்னியில் சூரியன் சந்திரன் நின்று இவர்களுக்கு முன்னும் பின்னும் பாபக்கிரகங்கள் நெருங்கில் வாயினால் இரத்தம் கக்கி மரணமாவான்.

சந்திரன் பாபரோடு மகர கும்பங்களில் இருக்க பாசத்தால் மரணமாவான்.

சந்திரனுடனேயாவது அல்லது சந்திரனுக்குத் திரிகோணத்திலேயாவது பாபக்கிரகங்கள் இருக்கில் உடல் பிளப்புண்டு மரணமாவான்.

சனி சூரியன் பத்தாமிடத்தில் இருக்க அங்காரகன் நாலாமிடத்தில் இநக்கில் வாகனத்தால் மரணமாவான்.

சூரியன் நாலாமிடத்தில் இருக்க இவனைச் சந்திரன் அல்லது சனி பார்க்க அங்காரகன் பத்தாமிடத்தில் இருந்தாலும், அல்லது நாலாமிடத்தில் சூரியன் எட்டாமிடத்தில் சனி இருந்தாலும், அல்லது இலக்கினத்தில் சனியும் பத்தாமிடத்தில் அங்காரகன் இருந்தாலும் சர்ப்பத்தால் மரணமாவான்.

சனி நாலாமிடத்தில் நிற்க, சந்திரனை அங்காரகன் பார்க்கினும் சூரியன் சந்திரன் இவர்கள் பத்தாமிடம் இரண்டாமிடம் நாலாமிடம் இப்படியிருக்கில் புழுத்து மரணமாவான்.

ஐந்து நாலு ஏழாமிடங்களில் அங்காரகன் சூரியன் நிற்கில் வல்பிணியால் மரணமாவான்.

இலக்கினத்தில் சூரியன் சந்திரன் இருக்க, ஏழாமிடத்தில் அங்காரகன் இருக்கில் தேரில் இருந்து வீழ்ந்து மரணமாவான்.

சனி மகரகும்பங்களில் இருக்க சூரியன் அங்காரகன் கூடினாலும், அல்லது சூரியன் சந்திரன் அங்காரகன் இவர்கள் நாலு ஏழு பத்தாமிடங்களில் இருந்தாலும் துர்மரணமாவான்.

சூரியன் அங்காரகன் இவர்கள் ஏழாமிடத்திற் கூடி இருக்க, சனி எட்டாமிடத்தில் இருக்கினும், சந்திரன் நாலாமிடத்தில் இருக்கினும் சமுத்திரத்தில் வீழ்ந்து மரணமாவன்.

சூரியன் அங்காரகன் சந்திரன் இவர்கள் இலக்கினம் ஐந்து ஒன்பதாமிடங்களில் இருக்க எட்டாமிடத்தில் சனி இருக்கினும் இடி வீழ்ந்து மரணமாவான்.

சனி சரராசியிலிருக்க அன்னியதேசத்தில் மரணம்.

திரராசியிலிருக்கத் தன்வீட்டில் மரணம்

உபயராசியிலிருந்தால் பிறந்தவீடல்லாமல் வேறே வீடுகட்டி அதில் மரிப்பான்.

கடகம் இலக்கினமாகத் தோன்றிய அங்காரகனும் புதனும் இருக்க அட்டமாதிபதி மூன்றிலும் இலக்கினேசனும் கேதுவும்நாலாமிடம் நிற்க ராகுவும், குருவும் இலக்கினேசனைக்காண சூரியனும் சுக்கிரனும் வியத்தான மேறினுல் அற்பாயுளாய் ஏழாவது ஆண்டில் மரணமாவான்.

இராகுதிசை இரவிபுத்தியும் முப்பத்தி நாலாவதாண்டு முதல் மாதமும் ஷ அற்பாயுளுக்கு மாரகமாம்.

சிம்மராசி இலக்கினமாக இலக்கினுதிபதி அங்காரகன் புதனுேடு கூடி லாபமேற சந்திரன் உச்சம்பெற்று ராகு சுக்கிரனுேடு கூடி கர்மஸ்தானத்தில் நிற்க, சனி இலக்கினத்தில் நின்று குருபார்வையினுல் பூர்ணுயுள் வயது அறுபத்துக்குமேல் நடக்கும்.

ரிஷபம் இலக்கினமாகி இரண்டில் சுக்கிரன் மூன்றில் சூரியன் நாலில் அங்காரகன் புதன் ஒன்பதில் சந்திரனும் நிற்க அட்டமாதிபதி அட்டமத்திலும் ஆயுள்காரகனும் ராகுவும் ஆருமிடமேறி நின்ருல் பூரணுயுளும் சந்ததி விருத்தியும் சுகஜீவியுமாக இருப்பார்கள்.

எட்டாம் பாவபலன் முற்றிற்று.

---

## ஒன்பதாம் பாவபலன்

---

ஒன்பதாமிடத்தில் சூரியனிருந்தால் பூமியுடையவன் தருமசிந்தையுள்ளவன் தபசியாக இருப்பான். அல்பபாக்கியம், நல்ல குணமுண்டு சுகமுண்டு தகப்பன் திரவியத்தால் ஜீவிப்பன் கலகப் பிரியன் கிரந்திரோகமுண்டு வியாபாரம் செய்வான்.

சந்திரனிருந்தால் நல்ல சுகசரீரன் புத்திமான் ஆலயங் குளம் கட்டுவான் பிரதிஷ்டை பண்ணுவான் தனதான்ய முடையவன் சுக கருமங்களுண்டு நினைத்த காரியம் சித்தியுண்டு நல்ல புத்திரனுண்டு வெகுபாக்கியவான் குருவையும் பிதாவையும் பூசிப்பான். வாணிபம் பலனுண்டு, சூரன், அற்பாயுள், பாலாரிட்டம் தப்பினுல் சுகமுண்டு பாபங்களை வெல்லத்தக்கவன் செல்வமுண்டு தேவதாபக்தியுண்டு.

செவ்வாயிருந்தால் தெய்வபக்தியில்லாதவன், பிதுர் ரோ முண்டு, சேவுகாவிர்த்தி, கொடூரன், வியாபாரமுள்ளவ பாக்கியநாசம்.

புதனிருந்தால் வெகுஜனமுடையவன், திரவியமுண்டு, வித்தை யுண்டு ஆசாரமுண்டு, தருமசிந்தனையுண்டு.

வியாழனிருந்தால் தர்ம கருமமுள்ளவன், சுபமுடையவன், வி முடையவன், ரோகம், அனுஷ்டானமுள்ளவன், தானதரு முள்ளவன், தனகர்த்தனுவான், பிதுர் தீர்க்காயுள், ராஜசபு மந்திரியாவான், ஆசாரம் தீர்க்காயுள் உண்டு.

சுக்கிரனிருந்தால், தருமகுணவான், ஞானவான், தபசி, அனு டானமுள்ளவன் சுபகாரியப்பிரியன், குரு விசுவாசமுள் வன், பிதுர் தேவதையை பூசிப்பான், பாக்கியமுள்ளவ நல்ல ஸ்திரீயும் பெரும்புகழுமுண்டு, தருமசிந்தையுள்ளவ

சனியிருந்தால் கோவில் திருப்பணி செய்வான். குளம், கிண கட்டி வைப்பான், மாதுர்பீடை, நந்தவனம் பிரதிஷ்டை பண்ணிவைப்பான், ஸ்திரீ நாசம், பாக்கிய பூச்சியம்.

ராகுகேதுயிருந்தால் பெண்சாதி வசமாவான், புத்திரன் பூச்சிய சாஸ்திர சம்பிரதாயம், சேவுகாவிர்த்தி, தருமசிந்தையில்லா தவன், ஸ்திரீதோஷம், பாக்கியநாசம் பிதுர் தோஷமுண்

ஒன்பதில் சுக்கிரன் வியாழனிருந்தால் ஞானயோகம், ரா யோகம், தீர்க்காயுள்.

ஒன்பதுக்கதிபன் ஒன்பது மூன்று ஒன்றில் சூரியனுடன் நிற் பிதுருக்கு தோஷமுண்டு.

சூரியன் ஆறுக்கதிபனுடன்கூடி ஒன்பதில் நிற்க, தத்து புத் னுவான், சந்திரன் செவ்வாயிருந்தால் பிதாவுக்கு உஷ் வியாதியுண்டு.

ஒன்பதில் கேது இருந்து சூரியன் சனியாததால் வெகு பாக் முண்டு, செவ்வாய் புதன் நிற்க யாகம் பண்ணுவான்.

சந்திரன் புதன் நிற்க தருமசிந்தையா யிருப்பான் திரவியமுண்

ஒன்பதாமிடத்தில் சுக்கிரன் வியாழன் புதனிருந்தால் அ ராசிக்கதிபதி உச்சனுயிருந்தால் புதன் திசை புத்தியில் பூ தனம் புதையல் எடுப்பான்.

ஒன்பதில் ராகு தனித்திருந்து ஆயுட்கிரகம் பலயீனமாயிருந்தால் ஜாதகனுக்கு புதன் திசை வந்தால் பிதுருக்கு மரணம்.

ஒன்பதுக்கதிபன் மூன்றில் அல்லது பத்தில் இருந்தால், அவன் குருடனுவான் அல்லது சூதுகாரனுகவும் பலபேர் தூஷணிக்கப்பட்டவனுகவும் திருடனுகவுமிருப்பான்.

ஐந்து ஒன்பதில் ராகு கேது இருந்தால் சங்கீதவித்தையில் ஜீவனம் பண்ணுவான்.

நாலுக்கதிபன் ஒன்பதில் இருந்து சுபர்பார்த்தால் அல்லது கூடினுல் அவன் அஞ்சனவித்தையைக் கற்றிருப்பான்.

சுக்கிரன் பகை நீச்சமாய் அவனுக்கு ஐந்து ஒன்பதில் பாபர் நிற்க கல்யாணமில்லை, சந்நியாசியாய் முத்தியடைவான்.

ஐந்து ஒன்பதுக்குடையவர்கள் சூரியனுடனேகூடி சனிபார்க்கயிருந்திடில் மாதாவுக்கரிட்டம்.

ஐந்து ஒன்பதுக்குடையவர்கள் சூரியனுடனேகூட சனியும் செவ்வாயும் மூன்ருமிடத்திலிருக்க பிதாவுக்கரிட்டம்.

ஜென்ம இலக்கினத்திற்கு ஒன்பது ஐந்து பத்தில் சனி செவ்வாய் சூரியன் இந்த மூவரில் ஒருவர் நின்ருல் பிதாவுக்கரிட்டம்.

ஜென்மத்தில் செவ்வாயும், ஏழில் சூரியனுமிருக்க பிதாவுக்கீனம், குருபார்க்க மூன்று வருஷம் வரைக்கும் தந்தையிருப்பான்.

ஒன்பதாமிடத்தில் சனிநிற்க, கேந்திரஸ்தானங்களில் செவ்வாய் நின்ருல் தந்தைக்கரிட்டம்.

ஒன்பதாமிடத்ததிபதிக்கு அஷ்டமத்திலும், ஜென்மாதிபதியோடும் சூரியன் செவ்வாய் கூடிநிற்கில் பிதாவுக்கரிட்டம்.

ஜென்மலக்கினத்திற்கு ஐந்து ஒன்பதாமிடத்தில் பாவர்நிற்க, கேந்திரஸ்தானங்களில் ராகு கேதுயிருக்க தந்தைக்கரிட்டம்.

ஒன்பதாமிடத்ததிபதிக்கு ஏழில் சனி செவ்வாய் நிற்க, சுபக்கோள் பார்வையில்லாவிடில் தந்தைக்கரிட்டம்.

ஒன்பதாமிடத்தில் சனியும், பஞ்சமஸ்தானத்தில் சூரியனும், பாம்பும் இருக்க தந்தைக்கரிட்டம்.

கும்ப இலக்கினமாகி சூரியன் ஒன்பதாமிடத்திலிருக்க, சுக்கி அட்டமத்தில்போக சுக்கிரதிசை சூரியபுத்தி நடக் காலத்தில் பிதாவுக்கரிட்டம்.

கும்போதயமாகி இரவி ஒன்பான்நிற்க, அவருடன் தனலாப பதியும், கர்மாதியும்சேர பிதுர்பாக்கியமுண்டு.

அவர்களுடன் அட்டமாதிபதிகூடி ஒன்பதோன் அட்டமத் லிருக்க பிதுர்பாக்கியம் கிடைத்தாலும் தங்காது.

ஒன்பதாமிடத்ததிபன் பலவானுக இருந்து அவனிருந்த ராசிப பதி கேந்திரத்திலிருந்தால், தந்தைக்கு மேலான பாக் மும் கீர்த்தியும் பெற்று இராஜப்பிரியனுமாக சஞ்சரிப்பா

பாக்கியாதிபதி சூரியனைக்கூடி ஆறுமிடத்தில் நிற்க, பிதா சொல்லைக்கேட்டு அடங்கி நடப்பன்.

பாக்கியஸ்தானுதிபதி ஏறிய அங்கிசாதிபதியை பிதுர்கா பார்க்கில் தெய்வபக்தி குருபக்தியுடையவனுக இருப்ப

கர்மாதிபதியும் சப்தமாதிபதியும் மித்துருக்கிரகமாகி சேர் சுபக்கிரக ராசியில் நின்ருல், இவனுக்கு களத்திரத்தி தனம் வந்து சேரும்.

கர்மாதிபதி உச்ச க்ஷேத்திரத்திலிருந்து பத்தாமிடத்தைப் பா திடில் அவனுக்கு பூமியில் பொருள் கிடைக்கும்.

ஒன்பதாமிடத்தோனும் குருவும் சுபவர்க்கமேற ஒன்பதாமி தில் நின்றவனும் சுபக்கிரகங்களாக அவர்களுடைய தி பொசிப்பில் பாக்கியங்கள் வந்து சேரும்.

பாக்கியஸ்தானத்தில் பாவக்கிரகங்கள், அஸ்தமன நீச்சங் யிருக்க தானதருமம் செய்யமாட்டான்.

பாக்கியஸ்தானத்தில் பாவக்கிரகங்கள், உச்சமாட்சியாக நி தால் நாள்சென்று பாக்கியங்கள் வந்து சேரும்.

ஒன்பதாமிடத்தில் நின்றவனும், பத்துக்குடையவனும், உ மாட்சி யங்கிசத்தே இருந்தால், ஐந்தாமிடத்தோ உச்சாங்கிசத்திலிருந்தாலும் இராஜயோகம் வரும்.

ஒன்பதாமிடத்திற்குடையோன் தனது வீட்டிலிருந்தாலும், பா தாலும் நன்று, ஒன்பதாமிடத்தில் பாவக்கிரகமிருக்க, சு

னுங்கூட ஒன்பதாமிடத்தோனுடன் சுக்கிரனும் கூடி நின்ருல் அவன் குருத்துரோகியாவான். ஒன்பதாமிடத்தை குரு பார்க்க தோஷமில்லையாம்.

ஒன்பதாமிடத்தையாவது ஸ்தானுதிபதியையாவது செவ்வாய் பார்க்கில் நிலங்களும் பூமிகளுங் கிடைக்கும். புதன் பார்க்கில் பாக்கியங்கள் கிடைக்கும். சுக்கிரன் பார்க்கில் வாகனப் பிராப்தி கிடைக்கும். சந்திரன் பார்ப்பானுகில் நல்ல சுகவானுவன்.

ஒன்பதாமிடத்தை சனி பார்க்கில் இவனுக்கு உதடுகள் பெருத்துக் காணும்.

ஷ ஸ்தானத்தை சூரியனும் சந்திரனும் குருவும் பார்க்கில் ஆடு, மாடு வாகனுதிகளும் வித்தை லாபமுங் கிடைக்கும்.

சூரியன், செவ்வாய், புதன் இவர்கள் ஒன்பதாமிடத்தைப் பார்க்கில் சேனுதிபதியாகவும், வாகன பலன்களும், விநோத வித்தையுங் கற்பன்.

சூரியன், சுக்கிரன் குரு மூன்று பேர்களும் ஒன்பதாமிடத்தை பார்ப்பார்களாகில் தீர்க்கமாக வித்தையில் வல்லவனுவான்.

சூரியனும் சனியும் பார்ப்பாராகில் நல்ல குணமும் புத்தியும் பாக்கியங்களு முடையவனுவான்.

ஷ ஸ்தானத்தில் நின்ருல் யாகாதி முதலிய கர்ம காரியங்களைச் செய்ய வல்லவன்.

சந்திரனும், குருவும், செவ்வாயும் ஒன்பதாமிடத்தைப் பார்ப்பார்களாகில் ஜனச்சேர்க்கையும் சுகமும் நல்ல ஸ்திரீகளையு முடையவனுவான்.

சந்திரனும் புதனும் பார்க்கில் நல்ல வீடுகளும் கட்டில், மெத்தை முதலிய சயனசுகங்களும் ஸ்திரீகளையு முடையவனுவான்.

குருவும் சுக்கிரனும் புதனும் ஒன்பதாமிடத்தைப் பார்க்கில் அதிக வித்தையும், எல்லாக் கிரகங்களும் பார்க்குமாகில் தனவானுகவும் ராஜசமானனுகவும் ஐந்தாமிடத்தில் சுபர்களு மிருந்தால் இவனுக்கு சமானமில்லாத ஐஸ்வரியனுகவுமிருப்பான்.

10

ஒன்பதாமிடத்தில் சந்திரன் நிற்க, புதனுஞ் சனியுஞ் சேர்ந்து பார்க்குமாகில் பூபதியாக இருப்பான்.

சூரியனும் சந்திரனும் ஒன்பதாமிடத்தில் நிற்க பாக்கியவானுவன்.

சூரியனும் செவ்வாயும் சேர்ந்து பார்க்கில் ராஜர்களுக்குப் பிரியனுவான்.

சூரியன், சந்திரன், சுக்கிரனும், ஒன்பதாமிடத்தில் நிற்க, தனது ஸ்திரீயோடு எந்நேரமும் சண்டை சச்சரவு செய்யக்கூடியவனுவன்.

சூரியனும் சனியும் ஒன்பதாமிடத்திலிருக்க தனது வெள்ளாட்டியைச் சேர்ந்தும் விரோதியுமாவான்.

சூரியன், செவ்வாய், சுக்கிரன் ஒன்பதாமிடத்தில் நிற்க, கடுங் கோபியாகவும், வம்பு விவகார வழக்குகளில் பிரியனுகவுந் தனது மனேவியுடன் சண்டைக்காரனுகவும் இருப்பான்.

ஒன்பதாமிடத்தில் சனியிருந்தால் பிதாவுக்கு பீடையும், தான் ஒருவருக்கும் அடங்காத தன்னிஷ்டப் பிரபுவாயும், துஷ்டர்கள் பிரியனுயும் சுகமில்லாதவனுயு மிருப்பான்.

ஒன்பதாமிடத்தில் சூரியன், குரு, சுக்கிரனிருந்தால் பரத்தைப் நேசனுகவும் பண்டிதனுகவும் பொருளுடையவனுகவும் இருப்பான்.

மேற்படி ஸ்தானத்தில் சூரியன், சனி, வியாழன் இருக்கில் சிறந்த கல்வி யுடையவனுவான்.

ஒன்பதாமிடத்தில் சூரியனும் சுக்கிரனும் நின்ருல் இராஜ தண்டனைகள் மிகுதியாய் வரும்.

மேற்படி ஸ்தானத்தில் சுக்கிரன், செவ்வாய், புதன் இருந்தால் சதா மனச் சஞ்சல முடையவனுகவே யிருப்பான்.

ஒன்பதாமிடத்தில் குரு, சுக்கிரன், புதன், சந்திரன் இந்த நான்கு பேர்களும் நிற்பாராகில் தானதர்ம யாகாதி கர்மங்களைச் செய்யும் தர்மராஜனென்றே பெயர் எடுப்பான்.

ஒன்பதுக்குடையோர் ஆறு, எட்டு, பன்னிரண்டில் சத்ரு வீட்டில் நீச்சர் பார்க்க கொடுரோங்கிசமேறி நீச்சம் பெற்றிருந்தால் அவனுடைய திரவியங்கள் முழுவதும் நாசமுற்றுப் போய்விடும்,

ஒன்பதாமிடத்தோன் சுபக்கிரகங்களோடுகூட, சுபர்கள் பார்க்க ஒன்பதாமிடத்தில் சுபர்கள் நிற்க, பார்க்கப் பிறந்தவர்கள் சகல பாக்கியமும் பெற்று சுகத்தை அனுபவிப்பார்கள்.

ஒன்பதாமிடத்தோன் சிங்காங்கிசமேற ஜென்மாதிபதியும், பத்துக் குடையவனும் பார்க்க நின்ருல், சகல பாக்கியமும் பெற்று தானதர்மங்களும் செய்யக்கூடிய கீர்த்திவானுவான்.

ஒன்பதாமிடத்திற் குடையவன் கோபுராங்கிசமேறி இலக்கினுதிபதியும் பத்துக்குடையவனும், பார்க்க நின்ருல், தன் குடும்பங்களுக்கும் பந்துக்களுக்கும் சிரேஷ்டவானுகயிருந்து நன்மை தீமைகளுக்குச்செய்யும் சடங்குகளை செவ்வையாகத் தெரிந்து நடத்திவைப்பவனுவான்.

ஒன்பதாமிடத்தில் சூரியன் புதன் சுக்கிரன் மூவர்களும் நிற்க, ஒன்பதுக்குடையோர் சுபர்களுக்கு மத்தியில்நின்று பார்க்க தருமவானுகவும் பாக்கியவானுகவும் இருப்பான்

ஒன்பதாமிடத்தில் எல்லாக் கிரகங்களுமிருக்க, ஒன்பதுக்குடைய வனும், சூரியனும்கூடி, ஆறு எட்டு பனிரெண்டில் பாவர்கள் பார்க்கநின்ருல், இவன் தந்தைக்கு அந்திய காலத்தில் உதவாத புத்திரனுவான்.

ஒன்பதாமிடத்திற் குடையவனும் சூரியனுங்கூடி கேந்திரங்களில் நிற்க, ஐந்து ஒன்பதில் சுபக்கிரகங்கள் பார்க்க சுபர்கள் நின்ருல் தகப்பனுக்கு அந்தியகாலத்தில் கூடவேயிருந்து உதவி செய்து சகல கிரியைகளையும் செய்யக்கூடிய ஜென் மாந்திர புத்திரனுவான்.

சுக்கிரனும் சந்திரனும் நாலாமிடத்திற் குடையவனும், ஆறு எட்டு பனிரண்டில் நின்ருல் இவன் தகப்பனுக்கு இராத்திரி காலத்தில் மரணங் கிடைக்கும்.

ஐந்து ஒன்பதுக்குடையவர்கள் கேந்திர கோணங்களில் சுபக்கிர கங்கள் பார்க்கநின்ருல், இவன் தந்தைக்கு பகற்காலங் களில் மரணங் கிடைக்கும்.

ஒன்பதுக்குடையோன் வலிமைபெற்று சுபர்கள் வீட்டில் நற் கோள் பார்க்க நின்ருல் தெய்வங்களை இகழாமல் அறிவைச்

செலுத்தி ஜெபதபதியானங்களை செய்வதன்றி மேல
தபசி யென்றும் உலகில் வாழ்வான்.

ஒன்பதாமிடத்தில் சூரியன் செவ்வாய் புதன் குரு இவர்க
நிற்க, ஒன்பதுக்குடையவனும் இலக்கினாதிபதியும் அ
மத்தைச் சேர கும்பம் இலக்கினமாகில் சோதிட சாஸ்தி
தெரிந்து சுயபாக்கியம் பிதுர்பாக்கியமில்லாமல் யாவருக்
பிரியனாகி பந்துக்கள் கிலேசனாகவு மிருப்பான்.

ஒன்பதுக்குடையவன் அட்டமாதிபனது அங்கிசம்பெறி
ஒன்பது எட்டுக்குடையவர்கள் இலக்கினத்தில் நிற்கி
மதிக்கு ஒன்பதுக்குடையவன் பதினோராமிடத்தி லி
னும் இவன் பிதிர்வாக்கிய பரிபாலனம் பண்ணுவான்.

ஒன்பதாமிடத்திற்குடையவன் சுபக்கிரகங்களுடனேகூடி கே
திர கோணங்களிலே நட்பாட்சி யுச்சம்பெற்றிருக்கில் 
கடாட்சம், ஞானம், கல்வி, குணம், தவம், ஒழுக்
தருமம், ஐஸ்வரியம் இவை முதலியனவும்பெற்று வாழ்

சூரியன் ஒன்பதாமிடத்திற் குடையவன் இவர்கள் பகை நீ
ராசிகளில் இருக்க இவர்களுக்கு குருதிருஷ்டி இன்றி பா
திருஷ்டி அல்லது பாபசையுத்தம் இருக்கின் துரோகி
அல்லது சகலரையும் நிந்திப்பவனும்.

சூரியன் ஒன்பதாமிடத்திற் குடைய்வன் இவர்கள் பகை நீ
ராசிகளில் இருக்கினும் கூடினும் இவர்கள் பாபக்கிரக
டனே கூடி அல்லது திருஷ்டியாவதும் பெற்று சஷ்டாஷ்ட
வியஸ்தானங்களில் இருக்கினும் இவன் பிதா வியாதியா
நொந்து சாவான்.

ஒன்பது இரண்டு பத்தாமிடத்திற் குடையவர்கள் நட்பா
யுச்சம் பெற்று கேந்திரகோணங்களில் இருக்கில் இரா
யோகத்தை அனுபவிப்பான்.

சூரியனுக்கு எட்டாமிடத்தில் இருக்கின்ற கிரகங்கள் எட்டாமி
ததிபதி நின்ற இராசியாதிபதி ஏறிநின்ற அங்கிசத்தி
அதற்குத் திரிகோணங்களிலும் சனிவருங்காலம் சனியுட
கூடிநின்ற கிரகங்களின் திசை பொசிப்பில் பிதுர்மரணம்

ஒன்பதாமிடத்திற் குடையவன் சூரியன் சந்திரன் இவர்கள் பு
களை ஒன்றாகக்கூட்டி இலக்கினாதிபன் புடத்திலே மாறி

நாளில் சனிவரும் நாள் பிதுர்மரணம். இலாபாதிபன் அங்கிசமான இராசிமாதமே நிரியாணமாதமாம்.

ஒன்பதாமிடம் சரராசியாய் ஒன்பதாமிடத்திற் குடையவன் சரராசியில் இருக்க சூரியன் திரிகோணம் ராசியாக ஒன்பதாமிடத்திற் குடையவனுக்கு சஷ்டாஷ்டாதிபதிகள் சரக்காலாக இவன் பிதாவின் மரணகாலத்திற் குதவுவான்.

ஒன்பதாமிடத்திரேகாணாதிபன் சூரியனாகில் இவன் பிதா சுரரோகம், பித்தரோகம் இவற்றால் மரணம். சந்திரனாகில் உதிரரோகம், அதிசாரம் ஜலதோஷம் இவற்றால் மரணம், அங்காரகனாகில் இரத்தரோகம், ஆயுதவிரணம் வெப்பு இவற்றால் மரணம். புதனாகில் வாதரோகம், பயித்தியரோகம் இவற்றால் மரணம். குருவாகில் சூலைநோய், குன்மரோகம் இவற்றால் மரணம். சுக்கிரனாகில் நீர்ப்படு விஷம், சிலேஷ்மரோகம் இவற்றால் மரணம். சனியாகில் வாதரோகம் சூலைவல்பிணி இவற்றால் மரணம். இராகுவாகில் விஷரோகம் குஷ்டம் சர்ப்பாதி விஷங்கள் இவற்றால் மரணம்.

ஒன்பதாமிடத்தில் இராகு இருக்க அல்லது சர்ப்பத்திரேகாணமாய் இவன் பிதா சர்ப்பந்தீண்டி மரணமாவான்.

ஒன்பதாமிடத்தில் இருந்த கிரகங்கள் மிருகத் திரேகாணத்திலிருக்கில் மிருகத்தால் மரணமாவான்.

குளிகன் இருக்கினும், அல்லது ஒன்பதுக்குடையவன் சூரியனாயிருக்கினும் பஎடத் திரணத்தால் மரணமாவான்.

ஒன்பதாம் பாவபலன் முற்றிற்று.

---

## பத்தாம் பாவபலன்

பத்தாமிடத்தில் சூரியனிருந்தால் நல்ல புத்திமானாகவும் குணவானாகவும் இருப்பான். அதிக திரவியமுண்டு. வித்தை புத்தியுள்ளவனும், சாமர்த்தியவான். சிலவும் உண்டு, பந்துக்களுண்டு, வாகனமுண்டு, பிதுர்பாக்கியமுண்டு.

சந்திரனிருந்தால் அதிகாமியா யிருப்பான், விதவைகளபிப்பி யன் காரியவான், தனவான், தீர்க்காயுளுண்டு, உத்தியோ முள்ளவன், ஆலயம், குளம் கிணறு முதலிய திருப்பணி வேலே செய்து முடிப்பான். பெண்சாதி விரோதம், சற்சன வான், தொடுத்த காரியம் ஜெயம் பண்ணுவான். கல்வியி பிரதானியா யிருப்பான்.

செவ்வாய் இருந்தால் திரவியவான், சரீரபுஷ்டி, குலதிலகன் இராஜப்பிரியன், தேவாலயம் குளம் இதுகளுக்கு அதிகாரி வெகுதனம் புதைத்து வைப்பான், தானியமுண்டு, சது உபாயமுண்டு, சுபர்கள் உண்டு, சூரனுக விடாத நிலை யுண்டு, தாஷ்டிகமும் ஆசாரமுமுண்டு.

புதனிருந்தால் வெகுமங்கள முடையவன். சுப சந்தோஷ முண்டு, தர்ம சித்தியுண்டு, திரவிய சம்பார்த்தனை, நேத்தி ரோகம், யோக ஞானமுடையவன், பிரதானிபத்திய கீர்த்தியும் கல்வியும் உண்டு, கீர்த்திப்பிரதாபம், தெய்வ பக்தி, பிராமணுள் பக்தி, ஆசாரவானுக யிருப்பான்.

வியாழனிருந்தால் வித்துவான், அசுவ வாகனமுண்டு, வெகு தனமுடையவன், அனேகஜனங்களைப் பூசிப்பான், தன தானிய லாபமுண்டு, யோக்கியகர்த்தன், பரதான அதிகாரி தாசி சாவகாசமுள்ளவன், பிடித்து காரியம் கைகூடு தொடுத்த காரியம் நிறைவேற்ற வல்லவன், சகலவுபாயமு கல்வியும் வாகனமும் தீர்க்காயுளும் உண்டு.

சுக்கிரனிருந்தால் வெகுதனவான் கீர்த்திமான், வாதரோகம் தீர்க்காயுள், கல்வி, வாகனம், சிக்ஷையுமுண்டு, ஸ்திரீ கூட்டமுண்டு.

சனியிருந்தால் கோவில் பிரகாரம் குளம் கோபுரம் கட்டுவான் சுயபூமி போக்கிவிடுவான். தூரதேசத்தில் ஜீவனம், மந்தி புத்தியுள்ளவன், குருபக்தி, தானதருமமுண்டு, சூரன், கிரா மாதிகாரன்.

இராகு கேது இருந்தால், சர்வ ஐஸ்வரியம் உண்டு, சோர பெண் சாதி சங்கமன், தாசிமார்க்கன், கெர்வி, வித்தையுள்ளவன் தூரயாத்திரை யுடையவன், வெகு ஸ்திரீயுண்டு, வெகு புத்திரருண்டு, பிரதாபம் உண்டு, பரோபகாரி, பலம் ஜெய தனமுண்டு.

சந்திர இலக்கினத்திற்குப் பத்தில் சூரியனிருந்தால் ராஜப் பிரியன் புத்திரரால் நல்ல பலனை அனுபவிப்பான்.

சந்திரனிருந்தால், அழகு தனமுடையவன்.

செவ்வாய் நின்ருல், கோபி பூச்சிதனுவான்.

புதன் நின்ருல் தூரதேசங்களில் கல்விப் பிரியனுகவும், துர்த் தானமும் பண்ணுவான்.

வியாழன் நின்ருல் தனமுண்டு, போகபாக்கியம் பிரசித்தி யாவான்.

சுக்கிரனிருந்தால் தனமும் போகபாக்கியமும் ஸ்திரீ வசியனு வான். சனி யிருந்தால் வியாதியுடையவன்.

ராகு கேது நின்ருல் நல்ல ஸ்திரீசங்கமன், தூரதேச யாத்திரை, துஷ்டனுகவும் கல்வியுடையவனுவான்.

பத்துக்கதிபன் இரண்டில் அல்லது கேந்திரங்களில் அல்லது பதி னென்றில் உச்சனுகவிருந்தால் நானுவிதத்தில் திரவியம் வரும்.

பத்தாமிடத்துக்கதிபதி சூரிய அங்கிசமானுல் காய்கிழங்கு கனி வர்க்கம் பயிர்செய்தும் வியாபாரத்தினுலும் வயித்தியத்தினு லும் சிறப்பான வேலைகளினுலும், ராஜஉத்தியோகஸ்தர்களை அனுசரித்து திரவியந்தேடுவான்.

சந்திர அங்கிசமானுல் வஸ்திரங்கள் வியாபாரஞ்செய்து ஸ்திரீ தொழிலாலும் வீடுகட்டுகிற சிற்பதொழிலாலும் வியாபாரஞ் செய்தாகிலும் திரவியந்தேடுவான்.

செவ்வாய் அங்கிசமானுல் மந்திர உபதேசத்தாலும், ஜோசிய சாஸ்திரங்களாலும், ஆயுதம் நவரத்தின பரிக்ஷைகளினுலும் திரவியந் தேடுவான்.

புதன் அங்கிசமானுல் எழுத்துவாசனை மூலியமாயாவது அல்லது காவிய வித்தையினுலாகிலும் ஜோசியத்தினுலாகிலும் திரவி யந்தேடுவான்.

வியாழன் அங்கிசமானுல் சிவபூசையினுலாகிலும் ராஜாவினுலாகி லும் திரவியந் தேடுவான்.

சுக்கிரன் அங்கிசமானுல் நவரத்தின வியாபாரத்தினுலும் யானை குதிரை எருமை முதலான நாலுகால் ஜீவன்களாலும் ஸ்திரீ சங்கையாலும் திரவியம் தேடுவான்,

சனி அங்கிசமானுல் ஆளடிமையாலும் சேவகாவிர்த்தியாலும், புஞ்சை தானியங்களாலும் சுமைசுமந்தும் வயித்திய தொழி லாலும் திரவியம் தேடுவான்.

பத்தாமிடத்தில் சூரியனிருந்தால் பிதாவினுல் திரவியம் சேரும்; சந்திரனிருந்தால் மாதாவினுல் திரவியம் சேரும்.

செவ்வாய் நிற்கில், சகோதரத்தினுல் திரவியம் உண்டு, சத் துருக்களாலும் பணமும் சேரும்.

புதனிருக்கில் மாமன் பந்துக்களால் திரவியம் உண்டு.

வியாழன் நிற்க, புத்திரனுல் குருவினுல் திரவியம் சேரும்.

சுக்கிரன் நிற்கில், ஸ்திரீயால் திரவியம் சேரும்.

சனி நிற்கில், ஆளடிமையால் திரவியம் சேரும்.

பத்துக்கதிபன் சரராசியிலிருந்தால் பிரதேசங்களில் போ திரவியந் தேடுவான், ஸ்திரராசியிலிருந்தால் தன்னுடை தேசத்திலேயே திரவியந்தேடுவான், உபயராசியிலிரு தால் தன்னுடைய தேசத்திலாவது பிரதேசத்திலாவது திரவியந்தேடுவான்.

பத்தில் சுபக்கிரகமிருந்து நட்பாட்சி உச்சமானுல் தனவான் கீர்த்திமான் உபாயவித்தை உண்டு. புத்திமான் தருமவான் மேட்சமுண்டு இரண்டு ஏழு பத்துக்கதிபன், இவர்கள் மூவரும் ஒரு ராசியிலிருந்தால் இவன் வெகு ஜனங்க வென்று ஜெயம்பண்ணி பேர் வாங்குவான், யோகவானு யிருப்பான்.

சூரியன் செவ்வாய் சந்திரன் கேந்திரங்களிலிருந்து சுபக்கிர ஆறு எட்டு பன்னிரண்டிலிருந்து இலக்கினுதிபன், பலவீ மாயிருந்தால் தரித்திரம், கெட்ட நடத்தை, வெகு து முடையவன், பிச்சை யெடுப்பான்.

புதன் சந்திரன் கேந்திரங்களில் இருந்து இலக்கினுதிபனை சுப பாராவிட்டால் உன்மத்தம் பித்தரோகமுண்டு.

சந்திரன் சுக்கிரன் கேந்திரங்களில் இருந்து ஐந்து எட்டில் பா இருந்தால் நீர் மகோதரம் குன்ம வியாதியுண்டு.

செவ்வாய் சனி சூரியன் வியாழன் இவர்கள் இலக்கினத் இருந்து ஐந்தில் கேந்திரத்தில் சுபர் இல்லாவிட்டால், சந் யாசியாய் தெய்வபக்தியா யிருப்பான்.

வியாழன் சந்திரன் சூரியன் இவர்களில் ஒருவர் இலக்கினம் அல்லது பத்தாமிடத்திலிருந்து சனி பனிரண்டில் இருந்தால் சந்நியாசியாவன்.

இலக்கினதிபன் நாலுக்கதிபன் ஏழில்நிற்க, ஏழுக்கதிபன் பத்திலிருந்தால் அவன் பாக்கியமுள்ளவன்.

பத்துக்கதிபன் பத்தில் இருந்தால் மாந்திரீகன் யோகவான்.

கேந்திரத்தில் சுபக்கிரகமிருந்து இலக்கினத்தில் பாபர் இருக்க அவன் விபசாரி பெற்ற கன்னியை கலியாணம் பண்ணுவான்.

ஏழுக்கதிபனும் சுக்கிரனுங்கூடி ஒரு ராசியிலிருந்து இவர்களை செவ்வாய் சனிபார்க்கக்கூடில் அவன் அழிந்துபோன கன்னிகையை கலியாணம் பண்ணுவான்.

கேந்திரத்தில் சூரியன் சனிகூடி ஒருபாதமேறியிருந்தால் இவாள் திசை பொசிப்பில் அறிவு பயித்தியமாகும்.

இவர்களை செவ்வாய் பார்த்தால் அறிவுகெட்டு தப்பிதமாய்ப் பேசியாவது கூத்தாடித்தனமாயாவது திரிவான்.

சுக்கிரன் புதன் சந்திரன் பார்த்தால், சித்தப்பிரமையாய் திரிவான், வியாழன் பார்த்தால் சாந்தமாய் ஊமையாயிருப்பான்.

இராகு கேது கூடினால், அடிபட்டு ஆயுள் பரியந்தம் விலங்கில் கட்டுப்படுவான்.

பத்துக்கதிபன் களத்திரம் பிதுர்மாதுரு சகோதரம், புத்திர ஸ்தானம் இப்படி எந்த ஸ்தானங்களில் இருந்தாரோ அந்த ஸ்தானத்திற் குடையவர்களுக்கு அவன் திசை பொசிப்பில் கருமஞ் செய்வான், அல்லது அந்த வர்க்கத்தில் கர்மம் கேட்கப்படுவான்.

நாலுக்கதிபனும் ராசிக்கதிபனும் பத்திலிருக்க, இவர்களுடனே சந்திரன்கூட பார்க்க, அவனுக்கு கெஜகர்னம், கோகர்ன் வித்தை வரும்.

இரண்டுக்கதிபனும் நாலுக்கதிபனும், நட்புஆட்சி உச்சங்களிலிருந்து அவர்களுடன் புதன் கூடினாலும் பார்த்தாலும் ரசவாத வித்தை வரும்.

சூரியன் கூடினால் நல்ல தெய்வங்களை பூசிப்பான். இராகு கேது கூடில் விஷ்ணுபூசை செய்வான். செவ்வாய் கூடினால் வித்தை வரும். சனிகூடினால் பில்லி சூனியம் வரும். கேது குளிகன் கூடினால் ஏவல் அஞ்சனவித்தை வரும்.

11

நாலுக்கதிபனும் இலக்கினுதிபனும், ஒரு ராசியிலிருந்து அவர்களுடன் சுக்கிரனுவது சந்திரனுவது கூடினுல் விஷவித்தைகள் வரும், மகேஸ்வர தரிசனை பண்ணுவான்.

இலக்கினுதிபனும் ஏழுக்கதிபனும் ஒருராசியிலிருந்தால், அல்லது அந்த வீடு பகையாயிருந்தால், அல்லது செவ்வாய் பார்க்க அவனுக்கு மரணவித்தை வரும். ஷ கிரகத்தால் நின்றவீடு பகையில்லாவிட்டால் மனிதரை வியாதியால் விழுத்தாட்டு கிற வித்தை வரும்.

இராசிக்கதிபனுடனே நாலு ஏழுக்கதிபன் கூடியிருந்தாலும் பார்த்தாலும் பில்லி சூனியம் வைத்திருந்தாலும் எடுத்து போட வல்லவனு யிருப்பான்.

இரண்டுக்கதிபனும் ராசிக்கதிபனும் கூடியிருக்க இவர்களுடன் சனி கூடினுல் ஆகாயத்திலும் கோபுரத்திலும் கம்பங்களிலும் ஆடுகிற வித்தை வரும்.

பத்து ஒன்பது இண்டுக்கு அல்லது ஒன்பது பத்துக்கதிபர் கூடி கேந்திர திரிகோணங்களிலிருந்தால் நரவாகனம் வரும் போகவானுகவும் தனவானுகவும் இருப்பான்.

இரண்டுக்கதிபதி இலக்கினத்திலிருந்தால் வெகு திரவியத்தை புதைப்பன்.

பத்தாமிடத்திற்குடையவன் துர்ப்பலனுகி ஆறு எட்டு பன்னிரண்டில் மறைவிடம் பெற்றிருந்தால் துராசாரனுவான்.

சூரியன் புதன் குரு சுக்கிரன், இவர்கள் பலயீனப்பட்டு ஆறு எட்டு பன்னிரண்டில் நின்ருலும் துராசாரனுகவும் துர்க்கர்மனுகவு மிருப்பான்.

பத்துக்குடையவன் சுக்கிரனுடன்கூடி கேந்திரஸ்தானத்தில் உச்சத்திலிருந்தால் இவனுக்கு புண்ணிய தீர்த்த பலன் கிடைக்கும்.

புதன் ஆருமிடத்திலிருக்க ஆறுக்குடையவன் உச்சம் பெற்று புதனை பார்ப்பானுகில் நல்ல தானதருமங்களையும் செய்வான்.

பத்தாமிடத்தில் பூர்வபட்சத்துச் சந்திரன் வலிமைபெற் றிருந்தாலும் புண்ணியதீர்த்த பலன் கிடைக்கும்.

பத்துக்குடையோனும் புதனும் நாலுக்குடையோனும் சுபக்கிரகமாகி வலிமை பெற்றிருந்தால் யாகாதிகருமங்கள் செய்வான்.

இலக்கினுதிபதி பத்தாமிடத்திலிருக்க அல்லது பத்துக்குடையவனேடுகூட சுயசம்பாத்திய பொருளால் யாகாதிமுதலிய கருமங்கள் செய்து முடிப்பன்.

பத்துக்குடையவனும் இலக்கினுதிபதினும் சூரியனுங்கூடினுல் தனக்கு தாழ்ந்த ஜாதியாரின் பொருள்களை யளித்து, யாகாதி கர்மங்கள் செய்வான்.

இவர்களுடன் ராகுவும் கூடினுல் மந்திர தந்திரங்களினுலே திரவியத்தைத் தேடி யாகாதிகர்மங்கள் செய்வான்.

இவர்களுடன் வியாழன்கூடினுல் இராஜர்களுடைய திரவியங்களால் யாகங்களை செய்வான்.

பத்துக்குடையவனேடு ஏழுக்குடையவன் கூடிநின்ருல், தன் மனைவியின் பொருளால் யாகாதிகர்மங்கள் செய்து முடிப்பன்.

கடக ராசியில் சந்திரன் நிற்க, குருவும் சுக்கிரனும் அவரை நயந்து பார்க்க மதியும் பாராவதாங்கிசமேறி நின்ருல், நல்ல கீர்த்திமானுகவும் சகல சம்பத்தும், பொருளுடையவனுகவு மிருப்பான்.

பத்துக்குடையவன் சனியோடுகூடி கொடூராங்கிசமேறி அட்டமாதிபதியினுல் பார்க்க கொடூர ஆக்கினைக்குள் இவன் திரேகம் பதறி நிற்கும்.

பத்துக்குடையவன் சுபர்களோடுகூடி சுபக்கிரகத்துக்கு மத்தியிலிருந்தாலும், அல்லது சுபக்கிரகத்தின் அங்கிசம் பெற்றிருந்தாலும் இவன் அவமான சிக்ஷைக் குடையவனுவான்.

பத்தாமிடத்தில் பாவக்கிரகம் இருக்கப் பாவர்கள் பார்க்க பத்துக்குடையவன் பலவீனனுக இருந்தால், அவமானமில்லாமல் கீர்த்திமானுக நல்ல புகழோடு வாழ்வான்.

பத்தாமிடத்ததிபதி சுபக்கிரகமாய் இருக்க, சத்விஷயங்கள் செய்வான்.

பத்தாமிடத்ததிபதி பகை நீச்சத்திருக்கினும், பாபக்கிரகங்கள் கூடி சஷ்டாஷ்டம வியங்களில் இருக்கினும், துர்விஷயங்கள் செய்வன்.

பத்தாமிடத்ததிபதி புதனுகில் விஷ்ணுபக்தியும், சுக்கிரனுகில் அம்பிகை பக்தியும், குருவாகில்சிவபக்தியும் வேதாத்தியயுன

மும் அங்காரகனுகில் சுப்பிரமணிய பக்தியும், சனியாகில் உருத்திர பக்தியும் செய்குவன்.

பத்தாமிடத்தில் சூரியன்கூடில் மாந்திரீகத்தொழிலும், குளிகன் கூடில் ஆசாரஈனமும் செய்குவன்.

பத்தாமிடத்தில் குரு, சுக்கிரன், புதன் இவர்கள்கூடில் வேள்வி முடிப்டன், இவர்கள் நாலாமிடத்திலிருக்க நாலாமிடத்ததி பதி பத்தாமிடத்தில் இருக்க இவர்கள் ஜலக்கிரகங்களாய் இருக்கின் கங்காதீர்த்த முதலிய புண்ணியதீர்த்தங்கள் ஆடுவன்.

பத்தாமிடத்ததிபதி நாலாமிடத்ததிபதிகள் ஜலக்கிரகங்களாய் வலிதுபெற்று சுபகேந்திரமும் பெறின் புண்ணிய தீர்த்தங் கள் ஆடுவன்.

பத்தாமிடத்ததிபதி ஐந்தாமிடத்ததிபதி இவர்களுடன் வலிது பெற்ற கிரகங்கள்கூடில் அஷ்டாங்கயோக முடிப்பன்.

பத்தாமிடத்ததிபதி இலக்கினுதிபதி பஞ்சமாதிபதி இவர்கள் வலிதுபெற்று பத்தாமிடம் சுத்தமாய் வாக்குஸ்தானுதிபதி வலிதுபெறில் சந்நியாசியாவான்.

பத்தாமிடம் இலக்கினம் ஐந்தாமிடம் ஏழாமிடம் நாலாமிடம் இரண்டாமிடம் இவற்றின் அதிபதிகள் வலிதுபெற்று ஒருவர்க்கொருவர் மித்ருகிரகங்களாயின் இல்லறத்திலே சிறிதுகாலம் இருந்து பிறகு சந்நியாசியாவன்.

சூரியன் இலக்கினுதிபன் சந்திரன் இவர்களில் வலிதுபெற்றோர் களுக்கு பத்தாமிடத்தாதிபதி காலால் கருமமும் ஜீவனமும் சொல்லப்படும். ஷ காலல் சூரியன் காலாகில் வயித்தியத்தா லும், இரத்தினம் சுவர்னம் இவற்றின் வியாபாரத்தாலும் தூதாலும், பிதுரார்ச்சனத்தாலும் ஜீவிப்பன். சந்திரன் காலாகில் வேளாண்மையாலும், மாதுருதனத்தாலும், ஸ்திரீ கள் தனத்தாலும்ஜீவிப்பன். அங்காரகன்காலாகில்வேளாண் மையாலும் பூமியாலும், பிராதுருதனத்தாலும், களவு பொய் கலகம் இவற்ருலும் சீவிப்பன். புதன்காலாகிற் சிற்பம், ஜோதி ஷம், வித்துவன், தந்திரம், கானம்பாடுதல், புரோகிதம்இவற் ருலும், பந்துக்களாலும் சீவிப்பன். குருகாலாகில் இராஜசன் மானம் ஞானேபதேசம் மாந்திரீகம் புராணம் நீதிசாஸ்திரம் இவற்ருல் சீவனம் சுக்கிரன் காலாகில் யானை, பசு, பரி, இரத் தினம், சுவர்னம் இவ்வியாபாரங்களாலும் ஸ்திரீதனங்களா லும் சீவிப்பன். சனியின் காலாகில் சொற்பகாரியங்கள் கோள் வஞ்சகம் சுமைசுமத்தல் ஏவற்ருெழில் இவற்ருல் சீவிப்பன்.

மேற்சொன்னவைகள் அவ்வக்கால்களில் நிற்க பலாபலம் அறிந்து சொல்வதால் இவ்வகையில் ஏவல் செய்வோனும் ஏவுகின்ற கர்த்தாவாய் வாழ்தலும் உளவாம்.

சுக்கிரன் கர்மேசன் தனேசன் புதன் கர்மத்திலிருக்க எக்கியம் செய்வான்.

வியாழமானுலுஞ் சுக்கிரனுறலும் பத்தாமிடத்திலிருக்க உச்ச ஸ்வட்சேத்திரத்திலிருக்க அவன் எக்கியஞ் செய்வான்.

ராகு கர்மத்திலிருக்க அல்லது சூரியனிருக்க கங்காஸ்நானம் லபிக்கும்.

கர்மத்தான மீனமாகியிருக்க அதில் வியாழமாவது சுக்கிரனுவது புதனுவது செவ்வாயுடனே கூடியிருக்க கங்காஸ்நானம் லபிக்கும்.

கர்மத்தானஞ் சலராசியாயிருக்க அதில் வியாழமாவது சந்திரனுவதுநிற்க கேந்திரத்தானம் பத்தாமிட முடையவனுடனே சந்திரனுவது சுக்கிரனுவதுகூடி ஸ்வட்சேத்திரங்களிலிருக்க வியத்திற் புதனிருக்க பாக்கியாதிபதி கேந்திரத்திலிருக்க கங்கா ஸ்நானம் பண்ணுவான்.

சந்திரன் மூன்றில் நிற்கக் கர்மாதிபதியுடனேகூடப் புண்ணியவான்.

புதனுவது * சீவனுவது செவ்வாயுடனே கூடியிருக்க அல்லது செவ்வாய் பார்க்கத் திருப்பணி முடிப்பன்.

கர்மாதிபதியுடனே நாலாமிட முடையவன்கூட, ஜீரணமாயிருக்கும் திருப்பணிகள் செய்வான்.

கர்மேசனுடனே சந்திரன் கூடினுல் குளம் தடாகம் வெட்டி வைப்பான்.

புதன் பத்தாமிடத்தானுடனே பத்தில் நிற்கப் பாக்யாதிபதியைப் பாவிகள் பாராதிருக்க எக்கியமே லபிக்கும்.

கர்மாதியுடனே சந்திரன் கூடியிருக்கப் பாக்கியன் கேந்திரத் திரிகோணத்திலிருக்க ராகு கேது பாராமலும் கூடாமலுமிருக்க எக்கிய கர்த்தாவாக இருப்பான்.

---

* சீவன் - (ஜீவன்) வியாழன்; இது சோதிட கடலகராதியிற் காண்க.

கர்மாதிபதி சஷ்டாஷ்ட நீசத்தில் நிற்க, பாவர்கள் பார்க்க ரா
கூட எக்கியகர்மம்பண்ண நிச்சயித்தால் விக்கினம் வரும்.

தர்மத்தானத்திற் செவ்வாயிருக்க சுபக்கிரகம் நாலில்நிற்க சே
னுங்கிசமேற ஆக்கினைப்படுவன்.

பத்தில் சூரியன் நிற்க செவ்வாயுடனேகூட அல்லது அவர்க
கேந்திரங்களிலிருந்தால் குரூராக்கினை அடைவன்.

பத்திற் சனிநிற்க அஷ்டமாதிபதிகூட குரூராங்கிசமேற தூ
தேசத்தில் ஆக்கினை

ராகுவுங் குளிகனுங் கர்மத்திலிருக்க அஷ்டமாதிபதியுடனே
இராகுகூட ஒன்பதாமிடமுடையவன் நீசமாகக் குரூராங்கி
மேறவும் தூரதேசத்தில் ஆக்கினை.

கர்மாதிபதி சுபனுகக் கேந்திரத்தில் நிற்க குரூரசஷ்டி அங்கி
மேற ஆக்கினை அடைவன்.

கர்மாதிபதியுடனேகூடக் குரு சுக்கிரன் பார்க்கப் பாராவதாங்
சம் ஏற சற்கீர்த்தி யுடையவன்.

கீர்த்தித்தானுதிபதி புதனுக * ஸ்வட்சமித்திர வீடுகளிலிரு
சவுமியான் சஷ்டியங்கிசமேற சற்கீர்த்தியுண்டு.

கர்மாதிபதி தேவலோகாங்கிசமேற அல்லது சிங்காசனுங்கிசமே
சந்திரனுடனே கூடச் சற்கீர்த்தியுண்டு.

பத்தில் பாவிகளில்லாதிருக்க கர்மாதிபதி பலத்திருக்கச் சுபா
சஷ்டியங்கிசமேற சற்கீர்த்தி யுடையவன்.

தர்மாதிபதி நீசச்சனியாக மாந்திகூட செவ்வாய் பார்க்க அ
கீர்த்தி.

பத்தாமிடமுடையவன் சொட்சேத்திரனுக அல்லது சுபா
ளுடனே கூடியிருக்க, இங்கிதவானுன ராஜாவாவன்.

பத்தில் பாவிகளிருக்க அல்லது பார்க்க, செவ்வாய் கூடியிருக்
குரூராக்கினை யுண்டாம்.

பத்தாமிடமுடையவன் நீச்சனுகப் பாவிகள் பார்க்க, பாவாங்
யங்கிசம் ஏற மானபங்கம் நேரிடும்.

* ஸ்வட்சமித்திர வீடு = சொட்சேத்திர வீடும் (சொந்தவீடும்) மித்துரு

கர்மாதிபன் சந்திரனுடனேகூடச் சவுமியாள் பார்க்கச் சுபர்கள் கேந்திரத் திரிகோணத்திலிருக்க சன்னியாசி யாவான்.

கர்மாதிபனுடனே வியாழன்கூடிப் பார்க்க அல்லது கேந்திரத் திரிகோணத்திலிருக்க அல்லது லக்கினத்துக்கு நாலா மிடத்திலிருக்க முனீந்திரனுவன்.

இலக்கினுதிபதி செவ்வாயாக பாக்கியாதியாலே கர்மாதியைப் பார்க்கக் கூட முனீந்திரனுவன்.

கர்மாதிபதி சனி திரேகாணமாகச் சந்திரன் சனி இவர்களுடன் கூட தேவேந்திரனுவன்.

நாலாமிடமுடையவன் சந்திரனுடனேகூட வியாழம் பார்க்க முனீந்திரயோகம்.

பத்தாமிடத்தில் கெட்ட கிரகங்களிருக்க பத்தாமதிபதி, கெட்ட ஸ்தானத்திலாவது சத்துரு நீச்சக்ஷேத்திரத்திலேனும் பலங் குறைந்திருக்க அல்லது மறைவாக பாபக்கிரகங்கள் அதை பார்த்தாலும் கைத்தொழில் யாதொன்றும் செய்யாமலும் பிறர் அன்னமே பொசித்து தனது நாளைக் கழிப்பன்.

பத்தாமாதிபதி கேந்திரம் பெற்று உச்சக்ஷேத்திரத்திலிருந்தால் அரசனை யடுத்து மந்திரியாவன்.

பத்தாமாதிபதி கேந்திரம் பெற்று சுவமித்துரு வீட்டிருந்தால் பெருஞ் செல்வனுவான்.

பத்தாமிடத்தில் குருதவிர சுபக்கிரகங்களிருக்க பத்தாமாதிபதி கேந்திர திரிகோணங்களிலிருந்தால் அஷ்ட ஐசுவரிய னுவன்.

பத்தாமிடத்தில் சுபக்கிரகங்களிருக்க அல்லது அதைப் பார்க்க சத்கர்மங்களையே செய்வன்.

கன்மத்தானத்தை பாபக்கிரகங்கள் பார்க்க அத்தானுதிபதி கெட்ட ஸ்தானங்களிலிருந்தால் துர்க்கர்மங்களையே செய் வான்.

லாபத்தானுதிபதி உச்சத்திலிருக்க லக்கினத்தில் சுபக்கிரகங்க ளிருந்தாலும் அல்லது பார்த்தாலும் வெகு பிரயோசனங்களை அடைவான்.

லக்கினத்திலிருந்து பத்தாமிடமும் சந்திரலக்கினத்துக்கு பத்தா மிடமும் கன்மஸ்தானமென்றும் அத்தானத்தையும் ஸ்தா

னுதிபதியையும் பார்ப்பதும் தவிர அத்தானுதிபதியிரு
நவாங்கிசாதிபனைக் கொண்டு கன்மம் பார்க்கப்படுமென்
பத்தாம் பாவபலன் முற்றிற்று.

## பதினோராம் பாவபலன்

பதினோராமிடத்தில் சூரியனிருந்தால் வெகுதனம் வாகன
யானை குதிரைகளை அடக்கும் தொழிலுண்டு, தைரிய
கீர்த்தி மிருதுவசனன் சரீரபுஷ்டி சித்தியுடையவன் வ
கினுல் திரவியம் சம்பாதிப்பான் ஆள் அடிமையுண்டு.

சந்திரனிருந்தால் வெகு சரீரபூஷகன் புத்திரவான் பரோப
வித்தையுண்டு சம்பன்னன் கீர்த்தியுடையவன்
முண்டு வீடுவாசல் விஸ்தாரமுண்டு. மிகவும் திர
முடையவன் ஆளடிமையும் வெகு ஸ்திரீகளுமுண்டு.

செவ்வாயிருந்தால் சரீரபோஷகன் பூமிலாபம் மாயாவாதி
சகோதரம் உண்டு விவசாயம் மிகுதி திரவியம் சம்பா
தனை உண்டு நல்ல வசனன் சூரனுகயிருப்பான்.

புதனிருந்தால் வெகு மங்களமுடையவன் தனதான்யம்
வாசல் விஸ்தாரம் அநேக ஆதாயம் இதுகளுண்டு அ
காரமுடையவன் சுகியாயிருப்பான் போகபாக்கியவா
மூர்க்கனுவன்.

வியாழனிருந்தால் சங்கீதப்பிரியன் வெகுதனவான் த
புதைப்பான் சுபக்கிரக முடையவன் பெரிய தகப்ப
ருடைய திரவியமுண்டு ராஜசமானன், புத்திரருண்
ஞானமுண்டு.

சுக்கிரனிருந்தால் வெகுதனவான் வித்தை பூமிலாபம் தொ
வாகனம் ஆதாயமிகுதி இதுகளுண்டு ஒருநாளும் தாழ்
லாதவன்.

சனி இருந்தால் வெகுதனவான் பூமிலாபமுண்டு, ராஜ பூஜி
அல்பவித்தை ஜேஷ்டனுவான், புத்தியும் போகபாக்கி
தானியமுடையவன்.

ராகு கேது இருந்தால் காதுநோயுண்டு பண்டிதன் உத்தி
கத்தில் வல்லவன், நல்ல புத்திரருண்டு தன தான்ய வி
யுண்டு.

பதினோராமிடத்திற்கதிபன் நட்பாட்சி யுச்சமாக யிருந்தால் வெகு சமர்த்துண்டு.

பதினொன்றுக்கு அதிபன் நான்கில் இருந்து நாலுக்கதிபன் இலக்கினத்திலிருந்து சுபர்பார்க்க அல்லது கூடினால் அவன் திசை பொசிப்பில் புதையலெடுப்பான்.

ஐந்து ஒன்பதில் செவ்வாயிருந்தால் அவன் திசை பொசிப்பில் பிதாவிற்கும் புத்திரனுக்கும் தோஷமுண்டு.

சூரியனிருந்தால் ஆடுமாடு அதிகமாயிருக்கும் ராகுவாவது குளிகனாவது கூடினால், நாய் பன்றி பல மிருகமும் தான்யமுமுண்டா யிருப்பான்.

ஐந்து ஒன்பதில் பாபியிருந்து சுபர் பார்க்காதிருந்தால், அவன் காவல் விலங்கிலிருப்பான் அல்லது விஷத்தினால் மரணம்.

க்ஷீரண சந்திரன் பத்திலிருந்து செவ்வாய் பத்தில் அல்லது நான்கிலிருக்க இவர்களை சூரியர் பார்க்க அல்லது கூடினால் இவன் மரத்திலேறி விழுந்து மரணமாவான்.

செவ்வாய் நான்கில் சூரியன் ஏழிலிருந்தால் அக்கினியினாலாவது ராஜதண்டனையினாலாவது மரணமாவான்.

லக்கினத்தில் சூரியன் ஒன்பதில் சந்திரன் எட்டில் செவ்வாய் ஐந்தில் சனியிருந்தால் வீடு இடிந்து விழுந்தாவது இடி விழுந்தாவது மலைக்கற்களினாலாவது மரணமாவான்.

பதினோராமிடத்தில் ஆறு, எட்டு, பன்னிரண்டாமிடத்திற் குடையவர்கள் கூடியிருந்தாலும் அல்லது தனித்து நின்றாலும் பாவர்களால் பார்க்கப்பட்டாலும் யாதொரு லாபமும் இல்லை.

இலாபாதிபதி உச்சம்பெற்று சுபர்களுக்கு மத்தியில் நிற்க லாபத்தில் நல்லோர்மேவில் லாபங்கள் அதிகமாகக் கிடைக்கும்.

இலாபாதிபதி உச்சம்பெற்று தனக்கு லாபமேறி இலக்கினாதிபன் பலவானாகில் லாபமும் கிடைத்து சுகத்தையும் அனுபவிப்பன்.

இலாபாதிபதி நின்ற வீட்டுக்குடையவன் கேந்திரங்களில் மித்துருவுடன்கூடி அல்லது பார்க்க நின்றால் அதிக லாபங்களுண்டாகும்.

இலாபாதிபன் சூரியன் வீட்டிலிருந்தால் கிழக்குத் திக்கிலும், சுக்கிரன் வீட்டிலிருந்தால் அக்கினி திக்கிலும், அங்காரகன்

வீடாகில் தெற்கும் தென்மேற்கு திசையிலும், காரிவீடாகில் மேற்கு திக்கிலும், மதியின் வீடாகில் வாயுதிக்கிலும், புதன் வீடாகில் வடதிசையிலும், குரு வீடாகில் ஈசானிய திசையிலும் அதிக லாபங்கள் கிடைக்கும்.

இலாபாதிபதியும் இலாபஸ்தானத்தி லிருந்தவரும், சூரியன் சந்திரன் இந்த நால்வர்களும் அதிக பலவான்களாகி சுபக்கிரகத்தின் வீட்டில் சுபர்களோடு கூடியிருக்க அவ்வீட்டிற் கதிபரும் பலவான்களானால் வேளாண்மை முதலிய பயிர்த் தொழில்கள் நன்ருய் பலிப்பதுடன் அதிக திரவியவானுமாவான். இவர்களுடைய திசைகளில் தனங்கள் வந்து சேரும்.

இலாபாதிபதி சூரியனுகி சந்திரனுடன்கூட அல்லது பார்க்க வெகு தனலாபமுண்டு.

இலாபாதிபதி சந்திரனுகி குரு பார்க்க சகல பாக்கியமுஞ் சேரும்.

இலாபாதிபதி எந்தவீட்டிலிருந்தாலும் அந்தந்த கிரககாரகர்களுக்கு வெகு லாபங் கிடைக்கும்.

இலாபஸ்தானத்தில் இலக்கினுதிபதி நிற்க இலாபாதிபதி எந்த திசையில் நிற்கின்ருரோ அந்ததிசையில் லாபம் கிடைக்கும்.

இலாபத்தானுதிபதி இலாபத்தானத்திலிருக்க குரு கேந்திர திரிகோணங்களி லிருந்தாலும் இலாபத்தானத்தில் உச்ச கிரகமிருக்க இலாபத்தானுதிபதி கேந்திர திரிகோணம் பெற்றிருந்தாலும் மிகுந்த செல்வனுவன்.

வியத்தானுதிபதி ஜீவனத் தானத்திலாகிலும் தனத் தானத்திலேனும் சகல போகஸ்தானத்திலாகிலு மிருக்க தனம் தானியம் பூஸ்திதி முதலிய செல்வமும் நாசமடையும்.

பதினேராம் பாவபலன் முற்றிற்று.

## பன்னிரண்டாம் பாவபலன்

பன்னிரண்டாமிடத்தில் சூரியனிருந்தால் பெண்சாதி சொன்னபடி கேட்பான், வயிறு பெரிதாயிருக்கும், விதவைசங்கமன், தனயீனனுக யிருப்பான், திருடுவான், கண்களிலே நோயுண்டு. செலவு உள்ளவன், பிதாவுக்கு தோஷம்.

சந்திரனிருந்தால் துர்ப்போதனை, துர் நடத்தை, ஸ்திரீரோகம், சரீரயீனன், மந்திரதந்திரமுள்ளவன், குணவான், பரதேசம் திரிவான், தரித்திரமுண்டு.

செவ்வாயிருந்தால் திரவியமுண்டு, வாதசரீரமுள்ளவன், சத்துருக்களுண்டு, அல்பபுத்திரன், கேது பொசிப்பில் சரீரபீடை, களத்திரபீடை, சந்தோஷமுண்டு, சகோதரர்களுக்குத் தோஷமுண்டு.

புதனிருந்தால் ஞானவான், விதாணன், சூனியபுத்தியுண்டு, பல நினைவு உண்டு, வெகு செலவுடையவன், காயாந்தகன் அல்ப புத்திரருண்டு அன்னிய கிரகத்திலே வாசமுள்ளவன், பந்துக்கள் விரோதமுண்டு, மாதுருபீடை. குலத்திற்கு அதிபதியாக யிருப்பான், கடனுள்ளவன்.

வியாழனிருந்தால் பெண்புத்தியைக் கேட்பான், தயவில்லாதவன், அல்பபுத்தி, வெகு சம்போகமுள்ளவன், கிரந்திரோகமுண்டு. சண்டியாயிருப்பான், சயன உபசாரமுடையவன், சைகை வார்த்தை சொல்வான், பரதேசவான்.

சுக்கிரனிருந்தால் பந்துஜனவிரோதி, தனவான், விஜீயன், சர்வ ஐஸ்வரியன், ஜெயமுள்ளவன்.

சனியிருந்தால் ஸ்திரீயமிசையாவான், அங்கம் பச்சையாயிருப்பான், நேத்திர உச்சாடனம் சுபனுக யிருப்பான், சுகியுடையவன், சகலகாரியமும் சித்திக்கும், நேத்திர விஷபார்வை, கடினகாரகன், செலவழிக்கமாட்டான், பாபிஷ்டி, அற்பாயுசு உண்டு, ஸ்திரீ தோஷமுண்டு, சில தத்துக்களுண்டு.

ராகு கேதுவிருந்தால் நேத்திர ரோகமுண்டு, ரூபமில்லை அழகில்லை, புத்திர தோஷமுண்டு, சரீரத்தில் வடுவுண்டு, சகோதரவாஞ்சை யுண்டு.

பன்னிரண்டில் சந்திரனிருக்க செவ்வாய் ஏழில் நிற்க, இரண்டில் சூரியனிருந்தால் சரீரத்தில் உஷ்ணமுண்டாம்.

இலக்கினத்திற்கு ஏழு எட்டில் சூரியன் வீட்டில் சந்திரனும் சந்திரன் வீட்டில் சூரியனுமிருந்து பத்துக்கதிபனும் கூடியிருந்தால் அவன் பதினாறு வயது முதல் ஆயுள் பரியந்தம் நரவாகனமேறுவான், நடுவயதில் தன் மதம்விட்டு வேறு மதத்தை அனுசரிப்பான்.

இலக்கினாதிபனும் சந்திரனும், ஒருவருக்கொருவர் பன்னிரண்டில் இருந்து சுபர்கள் பார்க்காவிட்டால் தாயும் பிள்ளையும் விரோதமா யிருப்பார்கள்.

இவ்விதம் இலக்கினாதிபனுக்கும் ஒவ்வொரு காரகர்களுக்கும் ஒன்றுக்கொன்று விரையத்திலிருந்தால் ஒருவருக்கொருவர் விரோதமாய்ப் பகையாயிருப்பார்கள்.

ஒருவருக்கொருவர் கேந்திர திரிகோணங்களில் கூடியிருந்தால் மிகுந்த சிநேகமாய் பட்சமாய் கூடியாடி அன்னியோன்யமா யிருப்பார்கள்.

இலக்கினத்திற்கு பன்னிரண்டு ஏழில் கிரகமிருந்தால் ஒருவித சகடயோகம், அலைச்சல், அகாலபோஜனம், கஷ்டஜீவனம், பொல்லாத நினைவுடையவன் வியாதியஸ்தன்.

பன்னிரண்டில் சூரியன், நாலில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் மலைமேலேறியாவது சுவர்மேலேறியாவது விழுந்து மரணமாவான்.

நாலில் சனி, ஏழில் சந்திரன், பத்தில் செவ்வாயிருந்தால் கிணறு, ஆறு, குளங்களில் விழுந்து மரணமடைவான்.

பன்னிரண்டாமிடத்தில் அங்காரகன் நின்றாலும், அல்லது பார்த்தாலும், பூமியிலுள்ள புதைபொருள்கள் இவனுக்குத் தெரியாமல் மறைந்துவிடும்.

பன்னிரண்டாமிடத்தில் சூரியனும், அமரபட்சத்துச் சந்திரனும் கூடியிருந்தால் இராஜதண்டங்களால் இவன் பொருள் நாசமாகும்.

பன்னிரண்டாமிடத்தில் குருவும், சந்திரனுங் கூடிநின்றால், மிகு பொருள்தேடி அதில் சிலதை தானதருமங்கள்செய்து வாழ்ந்திருப்பான்.

சந்திரனை குருவும், சுக்கிரனும் பார்க்க, சனி துலாராசியி லிருந்தால் அதிக லோபியாகவும், தான தருமங்கள் செய்யாத கல்நெஞ்சனாகவும் இருப்பான்.

வியத்தானுதிபதி இரண்டாமிடத்தில் நிற்க, இரண்டாமாதிபதி சூரியனுடனேகூட எட்டாமிடத்தில் இலாபாதிபதி யிருந்தால் யாதொரு புகழுமில்லாமல் சகல பாக்கியமும் சேதமாய்ப் போய்விடும்.

பாக்கியஸ்தானுதிபதியும் இரண்டாமிடத்தோனும் ஐந்தாமிடத்திலிருந்தாலும், பஞ்சமாதிபதி ஒன்பது அல்லது இரண்டாமிடத்திலிருந்தாலும், அல்லது இந்த மூவர்களும் இலக்கினத்திலிருந்தாலும், இவன் பொருள்களையெல்லாம் கடன் கொடுத்து இழந்து போவான்.

வியத்தானுதிபதி பாவர்களோடு சேர்ந்து நல்லோர்கள் வீட்டிலாவது அல்லது சுபக்கிரகங்களோடு பலவானுக கூடியும் விரையாதிபதி இரண்டிலிருந்தாலும் அனேக பாக்கியங்கள் தேடி ஒருவருக்கும் கொடுக்காமல் பூமியில் புதைத்து வைப்பான்.

வியஸ்தானத்தில் * இரணியனும், சுக்கிரனும், பூர்வசந்திரனும், புதனும்கூடி நின்றுல், இவன் பொருள்கள் தர்மவழியில் செலவாகும்.

வியத்தானுதிபதி பாவியாகி பாவரோடு சேர்ந்து அல்லது பாவர்களால் பார்க்காவிட்டால் இவன் திரவியங்களை யெல்லாம் துஷ்டர்களுக்கும் துன்மார்க்கர்களுக்கும் கெட்ட முயற்சிகளிலே செலவு செய்து கீர்த்தி பெறுவன்.

வியத்தானுதிபதி இலக்கினத்திலாவது, ஏழிலாவது இருந்தால் இவனுக்குள்ள சகல பாக்கியங்களும் மாறிப் போய்விடும்.

வியத்தானத்தில் பத்துக்குடையவன் பாவனுகி பலயீனமா யிருந்தால் ஐம்பது வயதாகியும் ஏராளமான பொருளைச் சம்பாதிப்பான்.

வியத்தானுதிபதி இரண்டாமிடத்திலிருக்க, இரண்டாமாதிபதி வியத்தானத்திலிருக்க, இலக்கினுதிபதி நீச்சங்கிசனு யில்லாதிருக்கில் இவன் பொருள்களையெல்லாம் இராஜாக்கள் கைக் கொள்வார்கள்.

வியத்தானத்தில் லாபாதிபதியும் இரண்டாமிடத்தில் வியத்தானுதிபதியும் நிற்க, இரண்டாமிடத்தோன் பலமற்றுப் போனுல் இவன் பொருள்களை யெல்லாம் இராஜாக்கள் தண்டமாக கைக்கொள்ளுவார்கள்.

---

* இரணியன் (இரணியும்) வியாழன், சோதிடக் கடலகராதியிற் காண்க.

பாக்கியாதிபதி லாபமேற இவர்களும் மித்துரு கிரகமா யிருந்து மானுல் இவன் பிதா வேண்டிய பொருள்தேடி ராஜசமானுக யிருந்து இவனுக்கும் போதுமான திரவியங்களை சேர்த்து வைப்பான்.

வியத்தானுதிபதி ஆறு எட்டில் நிற்க, சனியும், பாம்பும், வியத்தானத்திலிருக்க, சுபக்கிரகங்கள் பாராதிருக்குமாகில் இவன் படுக்கை சயன சுகமில்லாதவனுக யிருப்பான்.

வியத்தானுதிபதி சுபக்கிரகமாகி உச்சமூல திரிகோண கேந்திரங்களிலிருக்க வியத்தானத்தில் சுபக்கிரகம் பார்த்தாலும், இருந்தாலும் சப்ரகூடமஞ்சத்தில் சயனித்து இராஜசமானனுக சுகத்தையும் அனுபவித்து தியாகியாகவும், நல்லுணவுடையானுகவும் வேளாண்மை பலிதமும் தானதர்மங்களும்செய்வன்.

வியத்தானத்தில் சனியிருந்தால் ஜாதகனுக்கும் சந்திரனிருந்தால் மாதாவுக்கும், சூரியனிருந்தால் பிதாவுக்கும் குருவிருந்தால் புத்திரருக்கும், செவ்வாயிருந்தால் சகோதரர்களுக்கும் சுக்கிரனிருந்தால் மனைவிக்கும் அரிட்டம் வரும். அந்த வியத்தானமானது சரராசியாக யிருந்தால் ரொம்பவும் கெடுதலாகும். அல்லது ஷ வியத்தானமானது வந்து நிற்கும் கிரகத்திற்கு உச்சவீடாக நின்ருல் யாதொரு கெடுதியும் வராமல் நல்லதாகும்.

வியத்தானத்தில் சுபக்கிரகம் நல்லோருடன் கூடியிருந்தால் திரவியத்தை சத்கர்மாதிகளில் செலவு செய்வான்.

ஷ வியத்தானத்தில் பாவக்கிரகம் பாவர்களோடு கூடியிருந்தால் திரவியத்தை துர்மார்க்கமான காரியங்களிலும், விவகார விஷயங்களிலும் சிலவு செய்வான்.

வியத்தானத்தில் எந்த காரகக்கிரகங்கள் வந்திருக்கிறதோ அவர்களுடைய திசை பொசிப்பு காலங்களில் அந்த காரகர்களுக்கு திரவியம் நாசமாகும்.

ஆறு எட்டுக்குடையவர்கள் பாவராகி பலயீனமாய் வியத்தானத்திலிருந்தால் வேளாண்மை விவசாயத் தொழில்களால் திரவியங்கள் நாசமாகும்.

வியத்தானத்தில் நாலு கிரகங்கள் கூட்டமாக நின்ருராகில் அ... யார்களுக்குச் சிலவு செய்வதில் திரவியம் நாசமாகும்.

வியத்தானத்தில் வலிமைபெற்று மூன்றுகிரகம் கூடியிருந்தாலும் அல்லது சுபக்கிரகம் விரையமேறி நின்ருலும் திரவியங்கள் அந்தரங்க விசுவாச முள்ளவர்களால் சேதமாகும்.

வியத்தானத்தில் சூரியனும், சந்திரனுங் கூடிநின்ருல், ராஜ யோகத்திற்குச் சமானமாக பாக்கியத்தை யனுபவித்தாலும் திரவியங்கள் நாசமாகும்.

சந்திரனும் செவ்வாயும், வியத்தானமேற அல்லது பார்க்க, வீம்பு களினுலும், நாஞவிதத்திஞலும் திரவியநாசம்.

குருவும் சந்திரனும், வியத்தானமேற திரவியத்தை போற்றி வாழ்வன்.

வியத்தானத்தில் சுக்கிரன் சுபருடன் கூடியிருக்க சயன சுக முண்டாம்.

வியத்தாஞதிபதி அதியுச்சபாகத்தில் நின்ருல் சயனத்திற்கு சப்ர கூட மஞ்சங்களை விரும்புவான்.

பாக்யாதிபதியும் அதியுச்சமான வியத்தாஞதிபதியை பார்வை யிட்டால் அனேக நவரத்ன மணிகளாலே செய்யப்பட்ட பூஷணங்களையும் தேடிவைப்பான்.

சனி சுக்கிரன் சந்திரன் இவர்கள் ஆறு ஏழு எட்டு ஒன்பதா மிடங்களில் சேர்ந்தோர்களுக்கெல்லாம் இராஜயோகமாம்.

வியத்தானத்தில் அட்டமாதிபதியும், சனியும் ராகுவும் கூடியிருந் தால் மறுமையில் நரகலோகத்தை யனுபவித்துப்பின் சுக மடைவார்.

வியேசன் பாவருடனேகூட அல்லது வியத்திற் பாவிநிற்க பாபக் கிரகம் பார்க்க பாவமூலமாகத் தனம்வரும், சனி குளிகன் ராகு வியத்திலிருக்க வியேசன் குருராங்கிசமேறப் பாவிகள் பார்க்கப் பாவமூலத்திஞலே தனக்ஷயம்.

வியத்தாஞதிபதி சுபக்கிரகமாக கேந்திர திரிகோணத்திலிருக்க சுபக்கிரகம் பார்க்க கர்னபூஷணம் திடமாயுண்டு, பாபிக ளிருக்க இல்லை.

இலாபாபதியும் வியாதிபதியும் மூன்றில் நிற்க, சுபக்கிரகம் பூரணமாய்ப் பார்க்க கர்னபூஷணமுண்டு.

வியாதிபதியும் லாபாதிபதியும் கூடியிருக்கச் சுபக்கிரகங்கள் பார்க்கத் தீர்க்காயுசும் தனமுமுண்டாம்.

வியாதிபதியைப் பாவிகள் பார்க்க பாவிகளுடனேகூட தன நாசம்,

லாபாதிபதியுடனே சுபக் கிரகங்கள் கூடியிருக்கத் தனவு முண்டு.

வியேசன் செவ்வாயுடனேகூடச் சகோதரத்தால் தனம் வி பம், புத்திராதிபதியுடனே வியாதிபதிகூட பலயீன யிருக்கக் குரூராங்கிசம் ஏறப் புத்திராள் மூலத்தில் த சேதம் வரும்.

பிதுர்த்தானுதிபதி வியாதிபதியுடனேகூட சத்துருத்தானுதிப பார்க்க பிதுர்மூலத்தால் தனச்சேதம், மாதுருத்தானுதிப வியாதிபதியுடனே திடப்பாவர்கள் பார்க்க மாதாவினே வால் தனச்சேதம் வரும்.

பன்னிரண்டாமிடத்தாதிபதி ஆறு எட்டு இடங்களிலிருந்தாலு அல்லது எட்டுக்குடையவன் பன்னிரண்டிலிருந்தாலும் ப னிரண்டாமாதிபதி தனது சேர்க்கையால் பலம் குறை சத்துரு நீச்சவீட்டிலிருக்க ஆருமதிபதி பன்னிரண்டி லிரு தால் தனதான்ய முதலிய சம்பத்துகளெல்லாம் பெற்று ஜீவியா யிருப்பான்.

சுந்தரசேகரத்திற் கிரண்டாம் பாகமாகிய

தியாகராஜ சேகரம் முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை—1. 1978

சக்திதாசன் இயற்றிய

## சம்பூரண ரேகை சாஸ்திரம் விலை ரூ. 8—00

சுமார் 300 படங்களுக்குமேல் அடங்கியிருக்கின்றன.



இதில் முக்கியமாக உலக சிரேஷ்டர்களாகிய மகாத்மாகாந்தி, ரவீந்திர நாத் தாகூர், முதலியவர்களினுடையவும்; உலகப் பிரமுகர்களாகிய சில ராஜாக்களினுடையவும், வான்ஹிண்டன்பர்க், கிரேட்டா கார்போ, லார்டு ரீடிங், ரூஸ்வெல்ட், முஸோலினி, ராம்ஸே மெக்டொனல்டு, அமீலியா, அட்மிரல்பர்டு, புரொபசர் ஈன்ஸ்டீன், பெர்னுட்ஷா, சார்லிசாப்லின், ராக்பெல்லர், கெமால் பாசுஷா, ஹென்றி போர்டு, வின்ஸ்டன் சர்ச்சில் முதலியவர்களினுடைய கைரேகைப் படங்களை இதில் உதாரணமாகச் சேர்க்கப்பட்டு விளக்க மெழுதப்பட்டிருக்கிறது.

இதுபோன்ற அருமையான ரேகை சாஸ்திரம் இது வரையில் வெளிவந்தது கிடையாது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கைரேகைப் பலன்களை சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். பிறருடைய கையையும் பார்த்துப் பலன் சொல்லலாம்; சீரிய கருத்துகளை எளிய நடையில் எழுதப்பெற்றது. இது ஒவ்வொருவரின் விதிப் பயனை விளக்கக் கூடிய கருவி நூலாக விளங்குகிறது.

சுகர்நாடி என்னும்

## ஜோதிட சிகாமணி விலை ரூ. 20—00

திரிசிரபுரம், பீமாநகரம், சோதிட சித்தாந்தி ஸ்ரீ கா. இராமசாமிப் பிள்ளை இயற்றிய அரிய பெரிய ஜோதிட நூல். 1500-இராசிச் சக்கரங்கள் அடங்கியது. 840-பக்கங்கள் கொண்டது.

இந்நூலில் ஒவ்வொரு ஜாதகனுக்கும் இராசிச் சக்கரங்களும் அதற்குப் பாடல்களும், உரையுடன் எழுதப் பெற்றிருக்கின்றன. சுமார் 1500—சக்கரங்களும் அதற்கு பலனும் கூறப்பட்டிருக்கிறது. ஜோதிட சம்பந்தமான விஷயங்களனைத்தும் இந்த ஒரு நூலிலேயே அடங்கியிருக்கின்றன. பிறர் உதவியின்றி தங்களுக்குத் தாங்களே சுலபமாக தெரிந்து கொள்ளும்பொருட்டு விளக்கமாக கூறப்பட்டிருக்கிறது. உயர்ந்த மேலேன் கடிதத்தில் அச்சிட்டு கலிகோ கட்டடம் செய்தன்னது.

கிடைக்குமிடம்:— B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,

57, வெங்கட்ராமய்யர் தெரு, மின்ட் போஸ்ட். சென்னை-1.

(தங்கசாலை தபால் நிலையம் அருகில்)

சுந்தர சேகரத்திற்கு மூன்றும் பாகமாகிய

# தியாகராஜ சோதிட

## ஆனந்தக்களிப்பு



திரிசிரபுரம்
தா. பொன்னுசாமிப் பிள்ளை
அவர்களால் பதிப்பிக்கப்பெற்ற
பிரதிக்கிணங்க புதுக்கியும்,
விளக்கியும், திருத்தியும்
செப்பஞ்செய்து பதிப்பித்தது.



B. R. தேவராஜ நாயகர்,
சென்னை.

உ

கடவுள் துணை

திரிசிரபுரம்–சோதிட கணித வல்லவராகிய

தியாகராஜ பிள்ளையவர்களால்

இயற்றிய

சுந்தர சேகரத்திற்கு மூன்றும் பாகமாகிய

# தியாகராஜ சோதிட

## ஆனந்தக்களிப்பு

திரிசிரபுரம் - தா. பொன்னுசாமி பிள்ளையவர்கள்

பதிப்பிக்கப்பெற்ற பிரதிக்கிணங்க

புதுக்கியும், விளக்கியும், திருத்தியும்

செப்பஞ் செய்யப்பெற்று,

சென்னை:

B. R. தேவராஜ நாயகர் அவர்களால்

வெளியிடப்பெற்றது.



[விலை ரூ. 2—50

உ

சிவமயம்

சுந்தர சேகரத்திற்கு மூன்றும் பாகமாகிய

தியாகராஜ

# சோதிட ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்பு-சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

## துதி - கவி

தேவி பராசக்தி போற்றி-திவ்விய
தேசோ மயானந்த சிற்குண சத்தி
நாவில் விளையாடுஞ் சூலி-நாயேன்
நவிலுந் தமிட்கருள் செய்வாய் நீ தாயே—சங்கர. 1

## காப்பு

சீர்பெருஞ் சோதிடவுண்மை-கோள்கள்
செம்மையாய் பதிதனில் துலங்கி நின்றாலும்
பூர்வ புண்ணியத்தின் படியாய்-சித்தர்
புகட்டினார் அம்சங்கள் உறுதியாய் நம்பு—சங்கர. 2

இராசி பனிரெண்டுக் குள்ளே-மாதே
இரத்தினம்போலத் துலங்கும் நவக்கோள்கள்
வாச மலரயன் தானும்-வஞ்சி
வகுத்து வைத்தாரிந்த காலநிர்மாணம்—சங்கர. 3

கோள்கள் விதிநிலைப் பாரு-அவர்
குக்கிருந்த ராசி குறியாகத் தேரு
தாழ்வது முயர்வதும் பாரு-பூவில்
திராசு முன்போல செப்பச் சொன்னார்கள்சித்தர்—சங்கர. 4

## ஆட்சி-உச்சம்-நட்பு-நீச்சம்-பகை

கதிருக்கு மேடமு முச்சம்-மாதே
கணமுள்ள பௌமனுக் கவ்வீடு ஆட்சி
மதிமகன் வெள்ளிக்கு நட்பு-அன்றுள்
மாங்கோள்கள் நிலைபேத மறைகிறேன்கேளு—சங்கர.

மதி குரு பாம்புமே பகையாம்—மாதே
மகத்தான சனியனுக் கவ்வீடு நீசம்
விதிகள் நிலைபிசகாது-வஞ்சி
விளங்கு நீசத்துக்கு கால்பலன் செப்பு—சங்கர.

எருதுமே சோமனுக் குச்சம்-மாதே
இதமுள்ள அசுர குருவுக்கு ஆட்சி
கருதும் குரு சனி சேயும்-அன்றுள்
கணமுள்ள புந்திக்கு மவ்வீடு நட்பாம்—சங்கர.

பரிதிக்கு பகையுமே ஆகும்-மாதே
பலமுள்ள பாம்புக்கு விடமில்லை நீசம்
உறுதிமொழி பிசகாது—பூவில்
உத்தமர் வாக்கும் பிசகுவராது—சங்கர.

புந்திக்கு மிதுனமு மாட்சி-மாதே
புகழ் குருபதி வெள்ளிசேயு மல்லாமல்
மைந்தனும் பாம்புமே நட்பு-துலங்கும்
மகத்தான கதிருக்கு பகையாகுந்தோழி—சங்கர.

அரசனுக் கடகமும் உச்சம் மாதே
அம்புலிக்காட்சியும் புதனுக்கு நட்பு
பரிதிவெள்ளி சனி பாம்பு நால்வர்
பகையாகும் பவுமனு நீசனும்தோழி—சங்கர.

சிங்கத்தில் வெய்யோனுக் காட்சி மாதே
சிறந்த குருவுக்கு நட்பாகும் பாரு
திங்கள்சேய் சனியனும் பாம்பு-அன்றுள்
தேர்ப்பாகன் வெள்ளியும் பகையாகுந்தோழி—சங்கர.

கன்னியில் புதனுச்ச மாட்சி-மாதே
அரசன் சேய் மதிமந்த னரவுமே நட்பு
கன்னியில் சுடர்கதிர் பகையாய்-சொலிக்கும்
தனமுள்ள வெள்ளிக்கு பெலயில்லை நீசம்—சங்கர.

கோவினின் முடவனு முச்சம்-மாதே
குலவிய சுடர்வெள்ளிக் காட்சியா மில்லு
மாலவன் குருசுங்கன் பாம்பு-துலங்கும்
மகத்தான நால்வரும் நட்பாகச்செப்பு—சங்கர. 13

சீலமாய் மதி வந்துநிற்க-மாதே
தெளிவில்லை பகையாகுஞ் சிவனருளாலே
சாலவே வெய்யோனும் நிற்க சித்தர்
சாற்றினர் நீச்சம் தப்பாது தோழி—சங்கர. 14

தேளினிற் கரவுமே யுச்சம்-மாதே
திடமாகச் செப்புவாய் செவ்வாய்க்குச் சொந்தம்
மாலவன் சுடர் வெள்ளி யிருவர்-நிற்கில்
மகத்தான வீடதும் நட்பாகுஞ்சூடு—சங்கர. 15

தனுவில் குருபதி ஆட்சி-மாதே
தினகரன் மாமதி வெள்ளியும் பாம்பு
சனிபுத ணுறுபேர் நட்பு-பூவில்
சாற்றினேம் செவ்வாய்க்கு பகையாகுந் தோழி—சங்கர. 16

மகரம் குசனுக்கு உச்சம்-மாதே
மகத்தான பதியுமே மந்தனுக் காட்சி
பகருவேன் வெள்ளியும் புந்தி-ஜொலிக்கும்
பாம்புடன் மூவரும் நட்பாகும்பாரு—சங்கர. 17

செகங்கார்க்குங் கதிரவன் திங்கள்-மாதே
சென்றிட அம்மனை பகை கசப்பாகும்
தவமுள்ள அரசனும் நீச்சம்-பூவில்
தயங்குவார் மயங்குவார் செப்புவாய்தோழி—சங்கர. 18

சனியனு மாசியி லாட்சி-மாதே
செங்கதிரோன் வெள்ளி குருபுத்திநட்பு
குணிதம்விதி பிசகாது-குடம்
குசன் சோமன் பாம்புக்கு பகையாகுந்தோழி—சங்கர. 19

பங்குனியிலுச்சம் புகர்க்கு-மாதே
பகரும்பரம குருவுக்கு ஆட்சி
திங்கள் கதிர் சனி மூவர்-பூவில்
திடமாக செப்புவேன் நட்பாகுஞ்சூடு—சங்கர. 20

மங்களன் பகை கசப்பாகும்-மாதே
மகத்தான புந்திக்கு ஒழிவில்லை நீச்சம்
தங்கும் கோள் நிலை பேதம் ஆய்ந்து-பூவில்
தர்மவான் நிலையை அறிந்துசொல்தோழி—சங்கர. 21

## சூரியன் நிலைமை

பத்தும் பதினொன்று மூன்று - அன்றுள்
பகருமோ ராறில் பகலவன் நிற்க
எத்திப்பணம் பரிப்பானும்-சென்மன்
இதமாக வாழுவன் விதிதீர்க்கம்தோழி—சங்கர. 22

வாழ்வது மல்லாமல் பின்னும்-மாதே
வளமான புத்திரர் அரசனு லாபம்
தாழ்வுவாராது குடியில்-சென்மன்
தாயாதி சத்துரு பங்கஞ்சொல் தோழி -சங்கர. 23

பங்கம் பனிரெண்டு ஒன்று-அன்றும்
பஞ்சமம் பாக்கியம் இரண்டேழில் கதிரோன்
அங்கத்தில் காந்தலுமுண்டு-சென்மன்
அதிர்ஷ்டவானும் நித்திரை கனவுமேகாண்பன்—சங்கர. 24

கனவும் கண்ணேயும் சிரங்கு மாதே
கடுந்துஷ்டன் தலையினர் பகையுமே யுண்டாம்
மனதில் நினைத்தது முடியும்-பூவில்
மகத்தான கதிர்நிலை யறிந்துசொல்தோழி—சங்கர. 25

## சந்திரன் நிலைமை

மதிமூன்று ஐந்தேழு லாபம்-மாதே
மகத்தான வாதிமணி மந்திரமுள்ளோன்
எதிரிக்கு மார்பினி லாணி-சென்மன்
இதமாக வாழுவன் யேகனாய் நிற்கில்—சங்கர. 26

## செவ்வாய் நிலைமை

பார்மகன் பத்து மோராறில்-மாதே
பகரும் பதினொன்றில் உச்சனாய் நிற்கில்
சீர்பெருஞ் செல்வமுமுள்ளோன்-சென்மன்
செகமாளு மரசனால் சத்துரு பங்கன்—சங்கர. 27

ஒன்று பனிரெண்டு எட்டும்-மாதே
ஓரேழு தனம் நாளில் உதித்தசேய் அதனுல்
பண்டுபொருள் பணநஷ்டம் சென்மன்
பதியாளால் பலதுன்பம் பகருவாய் நஷ்டம்—சங்கர. 28

நஷ்டம் பலவித கஷ்டம்-மாதே
நற்செவ்வாய் மூன்றில் அமர்ந்திருந்தாலும்
கஷ்டம் சகோதிர நஷ்டம்-பூவில்
கனமுள்ள பிதிர்க்கு கண்டஞ்சொல் தோழி—சங்கர. 29

வியாழன் நிலைமை

திரிகோணம் தனலாபம் கேந்திரம்-மாதே
திடமாக தேவகுருபதி நிற்க
பரிபணை காடியு முண்டு-சென்மன்
பதிபோல வாழுவன் பங்கமும்கேளு—சங்கர. 30

பங்கம் பனிரெண்டில் தோஷம் மாதே
பகரும் மனைவிக்கு கண்டமுஞ் செப்பு
தங்குமோ ராறுக்குத் துன்பம்-பூவில்
திடமாகச் செப்புவாய் எட்டிலும் வேதை—சங்கர. 31

சனி நிலைமை

மூன்ருறு பன்னொன்று நிதியிலும் மாதே
முடியுள்ள மந்தன் அமர்ந் திருந்தாலும்
தோன்றும் குழவிக்கு யோகம் சென்மம்
தொல்பூவில் தனவானும் பிதுர்தோஷம் தோழி—சங்கர. 32

பத்தில் மகத்தான நீலன்-மாதே
பகரும் அரசனுல் செம்பொன்னும் லாபம்
குத்துமுலைமாதே கேளீர்-சென்மன்
குவலயத்தில் ரதம் பரி கொடியுள்ளோன்—சங்கர. 33

வியம் ரெண்டு ஏழெட்டும் அன்றுள்-மாதே
விளங்குவோர் நான்கினில் வீற்றிருந்தாலும்
குயவன் விதி பிசகாது மாதே
கொலைவலி வாதநோய் நாயுங்கடிக்கும்—சங்கர. 34

கடிக்கு மல்லாமலும் பின்னும்-மாதே
கனமுள்ள அன்னைக்கு கண்டமோர் நான்கில்
பிடிவாதன் சென்மனும் ஞானி-பூவில்
பெரியோரைத்தேடி யலைவானும் தோழி—சங்கர. 85

அலையும் இரண்டேழினில் நீலன்-மாதே
அன்புள்ள மனைவியும் மடிவாளாம் யில்லில்
குலையுமோ ரெட்டுக்கு மாதே-சென்மன்
குமரியுந்தாலி யறுப்பாளாந் தோழி—சங்கர. 86

பனிரெண்டில் பொல்லாத நீலன் மாதே
பலிக்காது மாடாடு வினைவுகள் குன்றும்
குணிதம் விதி பிசகாது-சென்மன்
குமரிக்கு வினைதுன்பம் கூறுதற்றோழி—சங்கர. 87

புதன் நிலைமை

கணக்கள் கொடுமையைக் கேளு-மாதே
கனமுள்ள பனிரெண்டு எட்டாறில் நிற்க
கணக்குவழக்காலும் துன்பம்-சென்மன்
கடுப்பும் பலரோகம் காண்பிப்பான் தோழி—சங்கர. 88

காண்பது கேந்திர கோணம்-மாதே
அரசரா லாபம் கவிதையு முள்ளோன்
உண்பது சுகவானுய் வாழ்வன் சென்மம்
உத்தமனுந் தம் மாமனும்விர்த்தி—சங்கர. 8

சுக்கிரன் நிலைமை

வெள்ளி திரிகோணம் கேந்திரம்-மாதே
விளங்கும் தனலாபம் வீற்றிருந்தாலும்
வெள்ளிரச பாத்திரம் கொள்வன்-பூவில்
விளங்குந் தண்டிகைகாடி புரவியு முள்ளோன்—சங்கர. 4

பனிரெண்டு எட்டாறு மூன்றும்-மாதே
பலதுன்பம் வெளுர்நோய் மகோதரம் பாண்டு
குணிதம் விதிபிசகாது-சென்மம்
குமரிக்கு கண்டஞ்சொல் அசுரகுருவால்—சங்கர. 4

### சூரியன் சந்திரன்

கதிர்மதி யிருவர்கள்சேர-சென்மன்
கனவானும் தனவானும் இயல்புடையோனும்
விதியும் நிதிபணியுண்டு-மாதே
விளங்கும் தேய்மதியினால் பலன் குன்றிப்போகும்—சங்கர. 48

### சூரியன் வியாழன்

தினகரன் குருவோடு சேர-சென்மன்
திரவியவான் வெகு மானியாம் சுத்தம்
பணமும் புதைப்பொருளுண்டு-மாதே
பரமகுரு நிலையறிந்து சொல்தோழி—சங்கர. 43

### சூரியன் சுக்கிரன்

கதிரொடு வெள்ளியும் சேர்ந்து-மாதே
கட்டாக ஒரில்லில் கலந்திருந்தாலும்
பதியாவள் வசியமுஞ்செய்து-சென்மன்
பந்துஜனங்களை பகைகொள்வன்தோழி—சங்கர. 44

### செவ்வாய் சூரியன்

சேயொடு வெய்யோனுஞ் சேர-பூவிற்
சென்மன் கபடன் கொடியனும் வஞ்சன்
ஆயன் விதிநிலை கூர்ந்து-மாதே
அஞ்சுக்கு அஞ்சோனை யறிந்துசொல்தோழி—சங்கர. 45

### மதி சுக்கிரன்

மதியோடு சுங்கனும்சேர-பூவில்
மன்னர்கள் யாரையுந் தூஷணஞ்செய்வன்
விதிகள் நிலைபிசகாது—சென்மன்
விஷமனும் தரித்திரன் விளம்புவாய்தோழி—சங்கர. 46

### மதி புதன்

மதிபுத னிருவர்கள் கூடில்-சென்மன்
மானிலத்தில் தூதன் புதல்வனும் பொய்யன்
பதியோ ரிருப்பிடம் கூர்ந்து-மாதே
பகருவாய் விதியை பண்பாகத்தோழி—சங்கர. 47

வான்புகழுஞ் சகாதேவர் சந்திர நாடி
வையமிசை யிந்நூலுக் கெதிரியில்லை
ஆண்மையுட னறிவில்லா ரிகழ்ந்தபோதும்
அடுத்தவர்க்கு இந்நூலே பெருநூலாகும்
தேன்போலே யிந்நூல்போல் தெளிவதற்குத்
தரைவளரும் பல்லோர்க்கு வேறென்றில்லை.

வாழவென்றே பல்லோர்க்கு வரையக்கேளு
வழங்குகின்ற நவநாடி தன்னிலேதான்
சூழுகின்ற சுக்ரனோடு சூரியநாடி
சுத்தமுள்ள குருநாடி அங்கார நாடி
கோழையரும் புத்தியொடுக் காரிநாடி
குறித்திட்ட ராகுவொடு கேதுநாடி
வாழவென்றே யிந்நாடி யொன்பதுக்குள்
வரைந்திட்டேன் சந்திரநாடிதானே.

நாடியென்றால் கண்ணுற்றுப் பார்க்கவேண்டும்
நல்லொழுக்க மோடுலக்கண மறியவேண்டும்
தேடியே கோளின்வலு வறியவேண்டும்
தக்கபடி சாதகற்கு விள்ளவேண்டும்
கூடியே யிந்நூலை யுணரவேண்டும்
குற்றமறச் சோதிடம்பேர் கொள்ளவேண்டும்.
வாடியே வீணறையோ லலைந்திடாமல்
வழிபடும் இந்நூலைக் கையிலேந்தே.

வேறோர்நூல் கையேந்தி விழலாகாமல்
விண்டுவுட வருள்பூண்ட சகாதேவர்வாக்குச்
சீரோங்கச் சொன்னதொரு சந்திர நாடி
ஜெகமதனில் பரீக்ஷித்துச் சொல்வோருக்குக்
காரோங்கும் வரும்வினைக ளகன்றுபோகும்
காண்டீபன் தம்பியுட கடாட்சத்தாலே
பேரோங்கு மிந்நூலைக் கையிற்கொண்டு
புவிமீது கீர்த்தியொடு வாழ்வார்தாமே.

---

# நட்சத்திரத்தைக்கொண்டு லக்கினமறியுஞ்

## சக்கரம்

| முதற் பாதம் | இரண்டாம் பாதம் | மூன்றாம் பாதம் | நான்காம் பாதம் | நக்ஷத்திரம் | இராசிகள் |
|---|---|---|---|---|---|
| சு | சே | சோ | ல | அசுவனி | மேஷம் |
| லி | லு | லே | லோ | பரணி | மேஷம் |
| ஆ | ஈ | ஊ | ஏ | கார்த்திகை | $\frac{1}{4}$-மேஷம் $\frac{3}{4}$-ரிஷபம் |
| ஓ | வா | வீ | வு | ரோகணி | ரிஷபம் |
| வே | வோ | கா | கி | மிருகசீரிடம் | $\frac{1}{2}$-ரிஷபம் $\frac{1}{2}$-மிதுனம் |
| கூ | கா | ங | ச | திருவாதிரை | மிதுனம் |
| கே | கோ | ஹ | ஹி | புனர்பூசம் | $\frac{3}{4}$-மிதுனம் $\frac{1}{4}$-கடகம் |
| ஹு | ஹே | ஹோ | ட | பூசம் | கடகம் |
| டீ | டு | டே | டோ | ஆயில்யம் | கடகம் |
| மா | மீ | மு | மே | மகம் | சிம்மம் |
| மொ | டா | டி | டு | பூரம் | சிம்மம் |
| டெ | டோ | பா | பி | உத்திரம் | $\frac{1}{4}$-சிம்மம் $\frac{3}{4}$-கன்னி |
| ஹூ | ஷ | நா | ட்ட | அஸ்தம் | கன்னி |
| பே | போ | ரா | ரி | சித்திரை | $\frac{1}{2}$-கன்னி $\frac{1}{2}$-துலாம் |
| ரு | ரே | ரோ | த | சோதி | துலாம் |
| தி | து | தே | தோ | விசாகம் | $\frac{3}{4}$-துலாம் $\frac{1}{4}$-விருச்சிகம் |
| நா | நீ | நு | நே | அனுஷம் | விருச்சிகம் |
| நோ | யா | யி | யு | கேட்டை | விருச்சிகம் |
| யே | யோ | பா | பி | மூலம் | தனுசு |
| பூ | தா | ப | டா | பூராடம் | தனுசு |
| பெ | போ | ஜ | ஜி | உத்திராடம் | $\frac{1}{4}$-தனுசு $\frac{3}{4}$-மகரம் |
| ஜு | ஜே | ஜோ | க | திருவோணம் | மகரம் |
| கா | கீ | கு | கே | அவிட்டம் | $\frac{1}{2}$-மகரம் $\frac{1}{2}$-கும்பம் |
| சொ | சா | சீ | சு | சதையம் | கும்பம் |
| செ | சோ | க | தி | பூரட்டாதி | $\frac{3}{4}$-கும்பம் $\frac{1}{4}$-மீனம் |
| து | தை | த்தா | தி | உத்திரட்டாதி | மீனம் |
| தே | தோ | சா | சி | ரேவதி | மீனம் |

## இராசிகளில் கிரகங்களின்
## நட்பு-ஆட்சி-உச்சம்-பகை-நீச்சம்

| இராசி | சூ | சந் | செ | பு | கு | சு | ச | ரா | கே |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | உ | ப | ஆ | ந | ப | ந | நீ | ப | ப |
| ரிஷபம் | ப | உ | ந | ந | ந | ஆ | ந | நீ | ந |
| மிதுனம் | ப | ந | ந | ஆ | ந | ந | ந | ஆ | ந |
| கடகம் | ப | ஆ | நீ | ந | உ | ப | ப | ப | ப |
| சிம்மம் | ஆ | ப | ப | ப | ந | ப | ப | ப | நீ |
| கன்னி | ப | ந | ந | ஆஉ | ந | நீ | ந | ந | ஆ |
| துலாம் | நீ | ப | ந | ந | ந | ஆ | உ | ந | ந |
| விருச்சிகம் | ப | நீ | ஆ | ப | ப | ந | ப | உ | ஆ |
| தனுசு | ந | ந | ப | ந | ஆ | ந | ஆ | ந | ஆ |
| மகரம் | ப | ப | உ | ந | நீ | ந | ந | ந | ஆ |
| கும்பம் | ப | ப | ப | ந | ந | ந | ஆ | ந | உ |
| மீனம் | ந | ந | ப | நீ | ஆ | உ | ந | ந | ஆ |

## கிரகங்களின்-நட்பு-பகை-சமம்

| கிரகம் | சூ | சந் | செ | பு | கு | சு | ச | ரா | கே |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் | ச | ந | ந | ந | ந | ப | ப | ப | ப |
| சந்திரன் | ந | ச | ச | ந | ச | ச | ச | ப | ப |
| செவ்வாய் | ச | ந | ச | ப | ந | ச | ந | ப | ப |
| புதன் | ந | ப | ச | ச | ச | ந | ச | ப | ப |
| குரு | ந | ந | ந | ப | ச | ப | ச | ப | ப |
| சுக்கிரன் | ச | ப | ச | ந | ச | ச | ந | ப | ப |
| சனி | ப | ப | ச | ச | ந | ந | ச | ப | ப |
| ராகு | ப | ப | ப | ப | ப | ப | ப | ப | ப |
| கேது | ப | ப | ப | ப | ப | ப | ப | ப | ப |

# இராசியின் பெயர் நிகண்டு

### மேஷம்

மொத்தை-மரி-தகர்-ஏழகம்-முல்லை-கொச்சை-மைகாலி ஆக பெயர்-7.

### ரிஷபம்

விடை-பாண்டில்-எருது-குண்டை-செ-புல்லம் ஆக-6.

### மிதுனம்

தாரம்-சண்டு-யாழ்-வீணை-கவுஞ்சன் ஆக-5.

### கடகம்

கொண்டல்-குளிர் - அனி-சொக்கை - நீர் - நண்டு - கார் - அலவன் ஆக-8.

### சிங்கம்

அரி-புலி-சிற்றில்-கொன்-மாகெடுவன்-சீயம் ஆக-6.

### கன்னி

மாது-தெரிவை-செண்-சேடியை ஆக-4.

### துலாம்

கொல்-கட்டளை-வாணிபன்-தூக்கல்நிரை-செட்டி ஆக-6.

### விருச்சிகம்

தேன்-அவிட்டம்-நீர்-துட்டன்-தெருக்கால் ஆக-5.

### தனுசு

காண்டீபம்-கார்முகம்-சிலை ஆக-3.

### மகரம்

மான்றலை-கேது-புல்வாய்-சுரா ஆக-4.

### கும்பம்

குடம்-சாடி-கூன்-சால்-கலசம்-சட்டுவம் ஆக-6.

### மீனம்

மீன்-கயல்-சேல்-கண்டை ஆக-4.

# கிரகத்தின் பெயர் நிகண்டு



## சூரியன் பெயர்

திக்கறிவோன் - தினகரன் - பகலோன் - வெய்யோன்-திவ கரன்-பானு-மார்தாண்டன்-அருக்கன் உதயன்-ஏன்சூழ்-இரவி பரிதி-கோளரசன் - ஆதவன் -ஞாயிறு-அருணவூர்தி-அரிபுண்ட யன் - வெங்கதிர் - செங்கதிர் - பாஸ்கரன் - முதியன் சகலலோக மூர்த்தி ஆக-20.

## சந்திரன் பெயர்

சசி-இரவோன்-சோமன்-மதி-பிறை-இந்து-திங்கள் - வெண் ணிலா-அம்புலி-உடுபதி-நாளரசன் ஆக-12.

## செவ்வாயின் பெயர்

சேய்-குசன்-அங்காரகன்-கனல் - பூமகன் -வக்கிரன் -துரிதி அங்கி-ஆரல்-நிலமகன்-அழல் ஆக-11.

## புதன் பெயர்

புலவன்-மால்-மேதை-தூதுவன் - பொரையன் -புத்தி-அ ணன்-மதிமகன்-கணக்கன் ஆக-9.

## குருவின் பெயர்

அந்தணன்-மந்திரி-பொன்-பீகதன்-சீவன் ஆக-5.

## சுக்கிரன் பெயர்

சுங்கன்-மழைக்கோள்-சிதம்-பார்க்கவன்-புகர் ஆக-5.

## சனியின் பெயர்

இரவிமகன் - முடவன் - சுன் - முதுமகன்-மந்தன்-காரி-கரி வன்-நீலன் ஆக-8.

## இராகுவின் பெயர்

பணி - செங்கோள் ஆக-2.

## கேதுவின் பெயர்

சிகி ஆக-1.

உ
கடவுள் துணை

சகாதேவர் அருளிச்செய்த

# சந்திர நாடி

முதலாவது

## மேஷ லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| | லக் | செவ் | |
| குரு | இராசி சக்கரம் | | ராகு |
| கேது | | | சந்திர |
| | | புதன் சுக்ரன் சூரியன் | சனி |

### நான்முக விருத்தம்

சந்திரன்புலியிற்கன்னி சனியுறநந்தியாரால்
புந்தியுமலரிசுங்கன் புகழ்துலைமானில்கேது
சுந்தரன் மன்னன்சாடி சூழ்பணிகடகமேவ
இந்தவாறுநவக்கோள்நின்று இடமதுமேடஞ்செல்ல. 1

இந்தசேய்பிறந்தவீதி யியம்புவேன்கிழக்குமேற்கு
அந்தையில்தன்பால்வாசல் அதன்வடக்கதனில்சந்தர்ம்
சுந்தரசிங்கமீசன் சூழ்துலைகரியுங்காரி
வந்திடச்சூழுமீனில் வளர்சத்திசுழிக்காய்வாரி 2

இந்தநல்லடையாளங்கள் இணங்கியசித்தூர்தன்னில்
முந்துசெய்தவேளான் முயர்தவச்சேயாமுன்னேன்
சுந்தரசேயன்செய்த சூழ்வினையின்னதென்று
வந்திடும்நவக்கோளாலே வரும்பலனுரைப்பேன்கேளே. 3

முன்னவன்செனனந்தன்னை மொழிகுவோம்விபரமாக
மன்னியமருவூர்தன்னில் மருத்துவகுலத்தில்தோன்றி
அன்னையுந்தந்தைமிக்க அருந்துணையில்லஞ்சேயும்
நன்னயப்பணியுஞ்செம்பொன் நலம்பெறவாழும்நாளில். 4

தன்னினத்தவத்துக்கெல்லாந் தலைவனாயிருந்துகொண்டு
பொன்னதையீடல்செய்தான் புகழ்மறையொருவன்வந்து
என்னுடைச்சேயுமில்லும் ஈடதாய்வைத்துக்கொண்டு
பொன்னதைத்தருவாயென்று புகன்றசொற்படியேயீவான். 5

அந்தணன்பொருள்கைக்கொண்டு அகமகிழ்விரண்டாந்தாரம்
சுந்தரமாகச்செய்து சுகம்பெறுநாளிலின்னோன்
அந்தணன்மனைக்கங்கேகி வரும்பொருள்தன்னைக்கேட்கத்
தந்தனவென்செய்யில்லான் தனத்தினுக்கரிதியென்றான். 6

என்னுடைத்தனத்திற்கீடு இசையுறுதினஞ்செய்யில்லும்
பொன்னறவளித்துநீயும் போவெனமறிக்கவன்னோன்
இன்னமாய்வெகுண்டுசித்தம் விளம்பியமொழியைக்கேட்டு
அன்னவனெழுந்துகையால் அறைந்துவாய்தட்டிச்சொல்வான்.

உன்னுடைமனைவிதன்னை உறுதியாயெனக்குவீந்தால்
என்னுடைப்பொருளுக்கீடு இதுசரியாகுமென்றான்
சொன்னசொல்மறையோன்கேட்டுச் சுகமருள்கங்கைக்கேக
மன்னியமறையோன்தேவி மனமறியாமலன்னோன்.

அன்றிராவவன்பால்சென்று அமளியிலுறங்கிப்பின்னால்
கண்டிவன்கைகால்வாயைக் கழறிடாதகற்றிப்போகக்
கொண்டனன்அவனும்சித்தம் கொடுமையைவிட்டுநீயும்
பண்டுநாள்இருந்தகற்பைப் பறித்திடும்பாவிகேளாய்.

மன்னியமனைவிமைந்தர் மாரகமடையவென்று
உன்னிடத்தாவிப்பீடை யுறுதியாயடைவாயென்று
அன்னவள்தீயில்வீழ்ந்தாள் அவ்வினையிவனைச்சூழ்ந்து
இந்நிலத்தியல்புநீங்கி யெழில்சுடத்தாவிநீத்தான். 10

தென்றிசையேமனோடு யற்றிவன்கழிந்தபின்பு
வென்றிகொள்மலரோன்திட்ட விளங்கிடவந்துபாலன்
நன்றியைமறந்துசெய்த நற்பவமிச்சென்மத்தில்
சென்றதுசெய்யும்வாறு சீருமனைவிக்காகா, 11

முந்தியபவத்தைநீக்க முரைக்கிறேன்சேதுக்கேகி
அந்தணன்மனையாளுக்கு ஆடையுமடைக்காயேமம்
நந்தொடுபதுமையீந்து நற்பதம்வணங்கிபோற்றில்
முந்தியபவங்கள்போக முதித்தசேய்தீர்க்கமாகும். 12

முந்தியவினையுஞ்சொன்னோ மொழிந்திட நிவர்த்திசொன்னோம்
தந்தையுந்துணைபன்னேடில் ஆண்நாலுகன்னியொன்று
தந்துணையேழில்தீர்க்க மாண்மூன்றுகன்னியொன்று
வந்திடுமாணில்மூத்தோன் வளம்பெறுமிளையோனுக்கு. 13

வந்தசேயிருசிவப்பு வளர்த்தியுமற்பதூலம்
வந்ததுதமிழேகல்வி வளமுறுங்கேள்வியுண்டு
சிந்தையுமனத்தில்நெஞ்சம் செப்புவான்வினோதவார்த்தை
தொந்தமாயிவன்தன்கீர்த்தி துலங்கவேயின்னங்கேளே. 14

நல்லவன் நல்லவர்க்கும் நலமிலார்தங்களுக்கும்
புல்லர்க்கும்விரோதியாவான் புகழ்பூமியதனாற்செல்வம்
செல்லுவைநிதிகைக்குடும்பசகோதர சொற்சமையஞ்சொல்லும்
மல்லுரைதமக்குஅஞ்சான் மாற்றானையெதிர்த்துவெல்வான் 15

பனையொடுஏர்பெருக்கம் பாக்கியமனையாளுண்டாம்
இணைசுகசயனமெத்தை யிகல்பெறும்பணிதிகூடும்
புனைதுயில்தீர்க்கமாகும் பிறமாதர்போகமற்பம்
கணைவிழியமுதேயெங்கள் கருத்துரையமுதேசொல்லும். 16

முன்னவன்முதியோர்பூமி முதிர்ந்தனமணியுமற்பம்
பன்னிவன் நிலமும்பூமி பிலமுறவந்துசேரும்
தன்னுடைத்துணைகளுக்குத் தந்தைபோற்குளிர்ந்துகாப்பான்
முன்னுறும்பலத்தைப்போக்கி முதிர்த்தசெய்தீர்க்கமாகும். 17

கறுத்திருங்குழலாள்கேளும் காரியமறிந்துசெய்வாள்
பொறுத்திடுங்குணமும்முண்டு பொற்புரையற்பமுண்டு
பொறுத்திடவொருவர்பாலும் வீணுரைபகர்வானுவால்
செறுத்தவர்தமக்குச்செய்வான் தேவரைவணங்கிக்கோர்வர். 18

மந்திரமறையுணர்ந்த மாமறையோகிகட்கும்
முந்தியதவனமோகன் முகுந்தனன்குடியதாகும்
சிந்தைவைத்தீவானுகும் செப்புவன்வினோதமாகும்
சந்தியமற்பமுண்டு சாஸ்திரமறிந்தோர்க்கீவான். 19

தன்னினத்தவர்க்குநல்லோன் தயவுள ன்குணவானுகும்
பொன்னெடுபணிதிசேர்க புரிகுவன்பொய்கள்சொல்லான்
நன்னயமிகுசொல்மிக்கான் நல்லவர்பெரியோர்நேயன்
சொன்னசொல்பிசகான்வால சோர்வறவுரைத்திட்டானே. 20

அன்னியர்க்குதவிசெய்வான் அகதிகட்கன்புமுண்டு
சொன்னதுசேர்க்கையுண்டு புத்திரன்ஒன்றுதீர்க்கம்
சொன்னசொற்பிசகுருது தொடுத்திடுங்கருமம்வெல்வன்
இந்நிலமதிக்குமென்று இயம்பியபடியேகாணே. 21

கடன்கொளான்இடுக்கம்வந்து காரியமறிந்துசெய்வான்
உடன்படான்பிழைக்கோலென்றும் உபாயங்களதற்குச்செய்வான்
விடவுரைபகர்வானுள்ளம் வெருளிபோலெவர்க்குந்தோன்றும்
மடவலர்போகங்கொள்வான் மனமதுஇரக்கவானே. 22

தந்தையால்புகழுங்கீர்த்தி தனமொடுசேயுமில்லும்
வந்திடுமற்பமாக வளர்சுதன்தன்னுல்போகம்
முந்தியதந்தைக்கின்பம் மொழிந்திடப்புதல்வனில்லை
பிந்தியதந்தைமைந்தன் பிலனுறுமனமில்லானே. 23

தந்துணைக்கன்னியொன்று தலைவனைச்சேர்ந்துவாழ்வாள்
மைந்தரும்பணிசேயோடு மறிவிடும்சின்னுரென்றே
தந்துணையிரண்டுபேரும் தனமொடுபணிசேயில்லும்
முந்தியமையனுலே முதித்திடுஞ்செல்வமென்றே. 24

அன்னையும்புத்திசாலி அன்புடன்அன்னையேவான்
சொன்னமும்பணிநற்றூசும் சுகம்பெறும்கணவன்றன்னுல்
தன்னுடைத்துணைகள்வந்து தரித்திடுந்தீர்க்கமில்லம்
தன்னுடைத்தனயனுலே தரித்திடுஞ்செல்வமென்றே. 25

## திசா பலன்

இந்நிலங்குடும்பஞ்செல்வம் இசைந்தனநவக்கோலாலே
நண்ணியதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னியபூரம்நான்கில் மகிழ்சுங்கன்புத்திபுந்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 26

புந்தியின்சிகியின்தன்னில் புகழ்தந்தையன்னைநன்மை
தந்தையின்துணையால்நன்மை தனமுதற்சேய்மைலாபம்
வந்திடுவர்க்கதுஷ்டம் வளம்பெறுதனுவில்பீடை
சுந்தரஅலரிதன்னில் சுகமுறவற்பமென்றே. 27

தந்தையின் துணைவிரோதம் தந்தையின்துணைவன்கண்டம்
பிந்தியேதுணையுண்டாகும் பிலமில்லைசெய்யலாபம்
அந்தனுவனுப்பப்பீடை தருமதியாரில்ராகும்
தந்தையின்துணைவன்கண்டம் தன்துணைதனக்குண்டாமே. 28

நன்னயவித்தையோதல் நலம்பெறுவர்க்கப்பீடை
மன்னியவர்க்கவட்டல் மன்னவரானபுந்தி
தன்னிலேதுணைகள்நன்மை தவமுறுஞ்செய்யலாபம்
அன்னையோபிணியால்கண்டம்யடைகுவேன்தந்தையென்றே.

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயந்தருவனாலே
பகைவரும்அகன்றுபோகும் பாக்கியம்பெரியோராலே
அகமகிழாமேயேதும் ஆறலின்முரைப்பதாலே. 30

அன்னையும்வர்க்கம்எட்டில் அழகியஅரிஷ்டப்பீடை
நன்னயப்பிரையாகத்தில் நலம்பெறச்சுகமுண்டாகும்
மன்னியகடககோணம் மங்களசுபமும்வேபல்
அன்னியராலேசெல்வம் அடைந்திருஅற்பமென்றே. 31

பணியொடுமன்னன்மைந்தன் பாக்கியம்பலவாறுண்டாம்
அணிபணியாடையுண்டாம் அழகியசேயுண்டாகிப்
பிணியினால்மனைவிகண்டம் தன்னெருமணத்தைச்செய்வன்
அனிபணியெவருக்கீந்து வழகியபோகந்தவிர்ப்பான். 32

சுந்தரசெய்வந்தெய்து சுகம்பெறும்அதனால்நன்மை
புந்தியுஞ்சிலையுஞ்சுன்னும் பகழ்திரும்செய்யும்லாபம்
வந்திடும்அன்னைவர்க்கம் வரும்பினும்கண்டமுண்டாம்
இந்தவாறுபலனைக்கண்டு வின்னமுஞ்சொல்லக்கேளே. 33

தன்னுடைத்துணைவனெட்டில் தன்னுடவர்க்கேயெட்டில்
மன்னியேசெய்யலாபம் மலினமாய்வழக்குதீரும்
கன்னியால்கலகமுண்டாம் கைப்பொருள்செய்யலாபம்
அன்னையும்பிணியரிஷ்டம் அருந்தமாவர்க்கம்வேட்டல். 34

அலைதினினாலொன்றில் அற்புதச்செல்வமுண்டாம்
குலமதிலுதிர்த்தார்கேடு கொடுமையுந்துணைவிரோதம்
தலமில்லையெரியோனாலே பிணக்கதுநன்மையுண்டாம்
பலமுறுங்கோளினாலே பகுத்தறிந்துரைத்தேன்கேளே. 35

மின்னொருதுணைவனுக்குப் பிலமதுச்செய்யுமீவான்
அன்னையுமரிஷ்டகண்டம் அழகியதீர்த்தவாசம்
முன்னுறுபவத்தைப்போக்கி யுதித்தசெய் தீர்க்கமாகும்
மன்னவன்மைந்தன்புந்தி மாதுவுமடைவள்கண்டம். 36

தன்னுடைத்துணைவனுகும் தனச்சிறுமன்னியாகும்
மன்னியவேட்டலுண்டாம் மங்களசுபமுண்டாகும்
தன்னுடைப்பவத்தைப்போக்கில் தனயனும்தீர்க்கமாகும்
பின்னொருதுணைக்குமைந்தன் பிந்திடுந்தீர்க்கமாமே. 37

சிகியொடுசுன்னும்பானும் சிவதலமடுத்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயம்பலவாறுண்டாய்
இகல்துணைவந்துநீங்கும் எளியவன்செய்வந்தெய்தும்
துகையதாய்த்தனமுண்டாகும் தூட்மதியாரல்ராகில். 38

கன்னியர்தனக்குமைந்தன் கன்னியும்வந்துதோன்றும்
தன்னுடைத்துணைவனுக்குத் தனயனும்வந்துநீங்கும்
முன்னுறுபவநீக்கானல் முதிர்ந்துனைசெய்யாநன்மை
நன்னயமைந்தன்புந்தி நற்சிகிசெய்யலாபம். 39

மைந்தனுக்கின்பம்வேட்டல் மருதுணையின்பம்வேட்டம்
சுந்தரன்சுங்கன்பானு சூழ்மதியாரல்தன்னில்
சுந்தரபுதல்வனுலே சுகந்தரும்செல்வமேலாம்
வந்திடும்செல்வந்தன்னை வளம்பெறுமகவுக்கீவான். 40

அன்னையோரிடபதிங்கள் அருந்திருசதுர்த்திதன்னில்
நன்னயசயம்விட்டாவி நற்பிதிருலகஞ்சார்ந்து
மன்னியபூமியுற்றும் மருத்துவகுலத்தில்தோன்றிப்
பின்னையுமனேகசென்மம் பிறப்பதுசெல்வனுமே. 41

இந்தநற்பலனையாங்கள் இசைந்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்றனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரன்இரவோசும்பு வெழில்சுதன்பலனிதாமே. 42

முதல் :ஜாதகம் முற்றிற்று.

---

இரண்டாவது

# ரிஷப லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| | | குரு ராகு லக்கின | செவ் |
| சூரியன் சந்திர புத | இராசி சக்கரம் | | |
| | | | |
| சுக்ரன் | கேது | | சனி |

சந்திரன் அலரிபுந்தி சாடியில்கன்னிமைந்தன்
சுந்தரமன்னன் ராகு சூழ்விடையாரல்வீணை
மந்திரசிகியன்தேளில் மகிழ்சுங்கன்தனுவில்நிற்க
இந்தவாறுநவக்கோள்நிற்க இடமதுவிடையிலுற்ருல். 43

கும்பத்தில்சந்திரன்சூரியன் புதன்கன்னிசனிரிஷபம்
குருராகுமிதுனச்செவ்வாய் கேதுவல்தனுசூராரன்
வீதியும்வடக்குதெற்கு விளங்கியசுணங்குவாசல்
ஓதுவோம்ஒருபாலில்லம் உபரில்லாக்கூரையன்றே. 44

மாதெனுங்கன்னியில்லில் மருவிடும்சத்திசூழி
வாதுருகாரியாணே வளமிலாதீசன்மாதா
சோதியாமிவன்பலத்தைச் சொல்லியப்படியேநீயும்
ஆதியாவறிந்துகொள்ள வறைகுறேன்கேட்டிடாயே. 45

இந்தநல்லடையாளங்கள் இலகியசித்தூர்தன்னில்
முந்துசெய்தவத்துவேளான் னுதவியபுதல்வனின்னேன்
முந்துசெய்பவத்தைத்தானும் மொழிகுரேம்நவக்கோளாலே
சிந்தையிற்கவனமாகச் சேயிவன்பலனேக்கேளே. 46

முன்னவனிருந்தசென்மம் மொழிகுரேம்சோழநாட்டில்
மன்னியமறையோனுகி மறைமொழியொழுக்கந்தேராய்
இந்நிலத்தெவர்க்குந்தேசு விணங்கிடமணிபொன்னலே
உன்னததனங்களாலே யுயர்நிதிதனக்குமாகி. 47

இல்லிடத்திருந்துவப்பு இருந்திடவனேகசெம்பொன்
புல்லிடக்கீர்த்திமிக்க புரவலன் தன்னைப்போலே
அல்லலற்றிருக்குநாளில் அவன்பவம்தொடர்ந்துவந்து
சொல்லிடவெங்களாலே சோதிடங்கேட்டிடாயே. 48

மாதலர்புதல்வனாலே வாக்குரைபிசகானென்று
சூதரவரசநிந்தி சுதன்தனையனழைத்துப்
போதுரைப்பவளும்வாணி பொன்னடிக்கேவல்செய்யும்
வேதங்கள்தேடிக்காணு வெண்பொடியணிவான்றுகம் 49

சங்கரிக்கினியனாக வாபரணமுஞ்சமைக்கச்சொல்லி
இங்கிதமணிகளெண்ணி யிவன்கையில்தொகையாயீந்து
பங்கமொன்றணுகாவண்ணம் பார்த்தபொன்கொடுவாவென்ன
அங்கதையகற்சாலைக்கு ருகுரவிருந்துபொற்பு. 50

மிஞ்சியபணிதியொன்று விநோதமாய்ச்செய்யும்போது
மிஞ்சொலிரத்தினத்தில் விளக்கொளிபோலேயொன்றை
நெஞ்சுறவபகரித்துத் தினமணியொன்றுவேறாய்
வஞ்சகம்செய்தமைத்து மன்னவன்செங்கையீந்தான். 51

அங்கதைவாங்கிமன்னோன் அன்னைக்குவன்பாய்ச்சாற்றிப்
பங்கயமலரைப்போற்றிப் பணிந்தனகுளிர்ந்தனப்பால்
இங்கிதமணிக்கியாசை யிசைந்ததையெடுத்துப்பாவம்
தங்கியமதலைத்தன்னைத் தானதுசூழ்ந்துவாழ்வான். 52

## வேறு விருத்தம்

பங்கமுறுமாவியது நரகம்புக்கிப்
பலதுன்பம்பட்டதிலும் பலநாள்போக்கிப்
பங்கயத்தின்வதிபிரம னுலகம்புக்கிப்
பாரதனில்இப்பிறவி பலிதமாகித்
தங்குமிந்தச்சுதனாக வருவாயென்று
சாற்றுமொழிபெற்றுவந்தோ னவனேயிந்தத்
திங்கள்முதற்சுதனெனவே செப்புகின்றோம் 53
சேயிவனும்செய்குற்றம் செப்பக்கேளே.

விடம்பயின்றான்மணியிச்சை வைத்ததோழன்
வினைந்திவனையிச்சென்மம் செப்புங்குற்றம்
இடந்தப்பிவேறிடத்தில் உதிக்கச்செய்யும்
எழில்தந்தைசேய்தனமும் இணங்கலற்பம்

செடந்தனிலேவாப்பினுல் மேகமுண்டாம்
சஞ்சலங்கள்மிகவூணி மிணங்கரேபம்
தொடர்ந்தவினையிதுதீரச் சொல்வேன்வேணி
தோகைமயில்வாகனனூர் மலையிற்றேகி. 54

இரத்தனிறம்சந்தனத்தால் தைலஞ்செய்து
இருவருக்குமொருநாளில் மொழுக்கப்பாட்டி.
செங்கநிரையோ பட்டாடைகன்னஞ்
செழுந்தங்கம்நாற்கீரல் குரபளித்து
அங்குறையுமடியார்க்குத் தானமீந்து
ஆண்டிரண்டுமவன்பதிக்கு வேகுமானுல்
சங்கையறும்பவம்போகு மகவுஞ்சேயும்
சகலகுணசம்பன்ன தனமுண்டாமே. 55

இந்தவகைசெய்யாம லெதுசெய்தாலும்
இப்பிணியும்நீங்காது பவந்தீராது
வந்தசுதன்குடும்பபலன் ஆதியந்தம்
வகுக்குரேம்ஆதியந்த வகையேதக்க
தந்தைதுணையினத்திற்குக் கேளானென்றும்
தையலொன்றுமற்றதுதன் துணைகள்மூணு
விந்தைபெறும்வெகுதிரமா மகனிரண்டில்
விளங்கிடும்ஆண்ரெண்டு பெண்பாலிரண்டே. 56

நல்லகுணமுடையனுமாஞ் சிவந்தமேனி
நளினமுகம்சமதேகம் நாரியற்பம்
சொல்லுறதுமிகவெதுவும் புரட்டிராது
சுயமதியால்சிவசமயச் சதனென்றேது
வல்லமையும்சம்பத்து முடையானுகும்
வருங்கீர்த்தியுடையனுமாய் நிதிகையுண்டு
அல்லலொன்றும் அணுகாதுபிரபாகரத்தில்
அரசனுடைத்தயவதனு லதிகயோகம். 57

போஜனத்தில்அற்பவுண்டி மதுமேவிச்சை
புகழ்வித்தைநடைபரியும் வண்டியுண்டு
மாசகலக்கிடைக்குமது பிதுர்நாடாண்டு
மகாபோகக்கலைமிக்கான் வாஞ்சையோடு
நீசனறச்சாக்ஷிசபைநேயந் தேர்வான்
நிருபனுடைத்தயவதனை நிலைக்கப்பெற்றேன்

தேசுடையசிவனடியைச் சிந்தையோடு
தேரியவுள்ளத்திருத்தித் தினம்புரிவான்பூசை. 58

செய்ந்நன்றிகுன்ருதாந் தீரன்புத்தி
ஜெகத்திலொருபிரபுகள் சேர்வன் நிச்சயம்
கையில்வடிவேலுடையான் கருத்தில்கொள்வான்
கனம்பெரியபெரியோர்க்குங் கருத்தாயீவான்
மெய்பணியும்தார்சேயும் மிகவேசேர்ப்பான்
மேலானபெரியோர்கள் தயவுண்டாகும்
பொய்புரட்டுக்குரியாரை நேயங்கொள்ளான்
பொறுமைமிகவுடையனெனப் புகழலாமோ. 59

மனக்கவட நடுத்துவெல்லா நில்லஞ்செய்வான்
வருந்துணைவிமணமொன்று சேயன்ரெண்டு
இனமதினில்கீர்த்தியுண்டா மிரக்கநெஞ்சம்
எப்போதும்ராஜசபைக் குரியோனுகும்
தனமுடையன்மறைபெரியோர்க் கன்னமீவான்
தந்தைபுகழ்பணிசெய்யும் பொருளுமற்பம்
இனமுடையோர்துணையுண்டு இரக்கநெஞ்சம்
ஈன்றவன்னை தனமுடையான் மிக்ககாளி. 60

(வேறு விருத்தம்)

அரசனின்பக்கஞ்சார்ந்து அயநிதிலக்கந்தீர்ந்து
பரியொடுநந்திகாலாள் பாவலர்பல்லோர்க்கும்
நிரைபடவீயவல்லான் நீடியவுலகமீதில்
விரவதாயிந்தலக்கம் விளங்கவுஞ்செய்வல்லோனே. 61

மங்களவரசன்சஷ்டி வளமிகுகார்த்திகையேநாளாம்
இங்கொன்றுகட்டுவாரம் இன்புறநாதன்பூசை
சங்கையில்லாமல்செய்தால் சடத்துநோயெல்லாந்தீரும்
சங்கரனருளினுலே சம்பத்துமிகவுண்டாமே. 62

அன்னைகேள்மனைவியாலே ஆடையாபரணமுண்டாம்
பொன்னெடுசெய்யுமுண்டாம் புகழ்மணந்தந்தைதன்னுல்
நன்னயவெங்கலங்கள் நலந்தரும்பெரியோராலே
மன்னியவேலையோர்வான் மாநிதியுண்டாமென்றே. 63

வித்தையில்புராணநூலில் விளங்கிடான்கேள்வியுண்டு
சத்தியமென்ருலச்சம் தான்கொள்வான்வீணனல்லான்

பத்தியேநன்மைசெய்வான் பார்தனில்கீர்த்தியோடு
வெத்தியாந்தொடுவழக்கு விசுவாசமுள்ளோனுமே. 64

தந்தையுமரசுசார்ந்து தனமொடுசெய்யுமில்லும்
வந்திடும்பணிதான்லாபம் வண்டியும்பரியுமுண்டாம்
செந்திருகடாக்ஷமுள்ளோன் செப்புவன்மொழிகுன்றுது
சந்ததமரசுசார்வன் சாந்தமாங்குணமுள்ளோனே. 65

அன்னையும்புத்திசாலி அன்புடனன்னையேவாள்
சொன்னமும்பணிதிதானும் சுகம்வருங்கணவனாலே
தன்னுடைத்துணைகளைந்திற் தானமூன்றுகண்ணிரண்டு
தன்னுறுமகவுந்தீர்க்கம் ஆண் இரண்டுஅரிவையிரண்டே. 66

முன்னுறுமூத்தோனுக்கு மொந்தனமனைவிமைந்தர்
பொன்னொடுமுன்னோன்வாழ்வர் புகழில்லைபெருமையில்லை
முன்னுறும்பின்னோனுக்கு மூழ்வினைபிரமச்சாரி
கன்னிகள் இரண்டுபேரும் கணவனல்சிலநாள்வாழ்வார். 67

## திசா பலன்

இந்நிலகுடும்பஞ்செய்கை யிசைந்தனநவக்கோளாலே
நன்னயதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னியசதையம்ரெண்டில் மகிழ்பணிபுந்திபுத்தி
தன்னிலேஉதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 68

புந்தியும்சிகிசுன்பானில் புகழ்ந்ததைஅன்னைநன்மை
சுந்தரவரசன்தன்னுல் சுகமிகுகனமுமுண்டாம்
பிந்தியதுணையுண்டாகும் பெரும்புகழிலக்கந்தன்னில்
வந்திடும்சுபாசுபங்கள் வர்க்கத்திலுண்டாமென்றே. 69

சந்திரன்ஆரல்மன்னன் சார்ந்துமுன்துணைக்குவெட்டல்
தந்தையிலதிகயோகம் தன்பதிதன்னுல்நன்மை
வந்திடும்வித்தையோதல் வளம்பெறுமூத்தோனுக்குப்
புந்தியின்சிகிசுன்பானு புரவலன்தன்னுல்யோகம். 70

தந்தைக்குமரிஷ்டகண்டம் தந்திடுமரவோனலே
முந்தியதுணைக்குக்கண்டம் மொழிபிதாவேலைதன்னை
மைந்தனும்பெறுவானுகும் மகாராசன்தயவுண்டாமே
சுந்தரபணியுமைந்தன் சுகமிகவற்பகண்டம். 71

புந்தியின்சிகிசுன்பானு புரவலன்தயவினலே
தந்தையின்குணபாலாகத் தன்னுடையினத்தோன்கன்னி

சொந்தமாய்ப்பணிகளீந்து சுகம்பெறமணங்கள்செய்வான்
வந்துமாதுலனுல்யோகம் வளப்பமேமுற்பாகத்தில். 72

சந்திரன் ஆரல்ராகு சாற்றுவீரரிஷ்டகண்டம்
முந்தியதமயனுக்கு முதிரத்தில்வாய்வினுல்பீடை
வந்தனமனையாளுக்கு வளம்பெறமகவுண்டாகும்
முந்தியதவத்தைப்போக்கில் முதித்தசேய்தீர்க்கமாகும். 73

தன்னுடை மனையாளுக்குத் தந்தையால்பணியுஞ்செய்யும்
சொன்னமுமற்பமுண்டாம் சுகமுறப்பெரியோனுலே
மன்னியவில்லஞ்செய்வான் மங்களமன்னைக்கரிஷ்டம்
பின்னுறுபெரியோனுலே பிலனுறும்பலனுண்டாமே. 74

மன்னவன்புந்திகேது மகிழ்விலேயடைவன்கண்டம்
தன்னுடமன்னைதந்தை தருமுபகாரங்கொள்வன்
அன்னவள்பதவிசேர்வாள் அருந்துணையொன்றுகண்டம்
மன்னனுல்கலகமுண்டாம் மாந்தர்கள் தன்னுல்நன்மை. 75

சுங்கனுமலரியாலோன் சுகங்களுமைந்தருக்கு
மங்கையும்வந்துதோன்றும் மகிழ்துணையொன்றுகண்டம்
இங்கிதபெரியோனுலே யின்புறும்கேள்வியுண்டாம்
வெங்கலம்பணிதிசெம்பொன் வியப்புறுமைந்தனுண்டாம். 76

ஆரலுமரவுமன்னன் அற்புதசெல்வமுண்டாம்
சீர்பெறுமகவுவேட்டல் சிற்றிடைமங்கைவேட்டல்
தாரமும்மரிட்டப்பீடை தையலாள்தனக்கரிட்டம்
பேர்பெறும்பெரியோராலே பிலமுறும்லாபமுண்டாம். 77

மந்தனில்தேசுவாதை மாரகம்பீடையெய்தும்
சுந்தரக்கோளாலேகும் சூழ்சிகிதிசையதனில்
சிந்தலும்சிவாலயங்கள் சிவபக்திமிகவுண்டாகும்
மைந்தனுல்யோகமுண்டாம் மகிழ்ச்சியுஞ்செய்யலாபம். 78

வந்திடுமைந்தன்யோகம் வளமவன்குறியிற்செல்வோம்
தந்தனுபித்தவாய்வு தனுவதில்வதையுண்டாகும்
சிந்திருகடகத்தின்பம் சிறுவனையடையலாகும்
வந்திடும்பூமியில்லம் வாங்கிடும்நிதிக்கிலற்பம். 79

இந்தநற்செல்வமெல்லாம் எழிலுளமகவுக்கீந்து
மைந்தனும்யோகவானய் மகிழ்ச்சியையடைவானுகும்
முந்தியதலம்விட்டேகல் முதிர்தனங்கொடுக்கல்வாங்கல்
புந்துவால்அதிகநன்மை பெற்றிடுமைந்தர்க்கென்றே. 80

அன்னமேதேளின் திங்கள் மைந்திடுமேகத்தேசி
மன்னியசடம்விட்டாவி மகிழ்கணலோகமெய்திப்
பிள்ளையும்பூமியுற்றுப் பிரபலஞ்செய்வனுதி
மன்னியங்கிருப்பன்சின்னுள் மறுபடியுதிப்பானென்றே. 81

இந்தநற்பலனையாங்க ளிசைந்தனம்நவக்கோளாலே
முந்தியேகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 82

இரண்டாவது ஜாதகம் முற்றிற்று.

---

மூன்ருவது

# மிதுன லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்ரன் | சூரியன் செவ்வா லக்கின ராகு | |
| | இராசி சக்கரம் | | குரு |
| | | | |
| சனி | கேது | | சந்திர |

சந்திரன்கன்னிமேவச் சனிபெருந்தனுவில்நிற்கப்
புந்தியும்சுங்கன்மேடம் புகழ்குருகடகமேவச்
சுந்தரவலரியாரல் சூழ்பணிவிடையிற்றேளில்
மந்திரசிகியும்நிற்க மைந்தனும்வீணையீற்ருல் 83

வீதியுங்கிழக்குமேற்கு விளங்கிடும்வடக்குவாசல்
ஓதுவோம்ஒருபாற்சந்து உயிர்கன்னியீசன்சூழி
நீதியாம்கடகங்காரி நிலைத்திடுமாரிவீணை
போதொரும்ஈசானியத்தில் புகழுறும்சூழிரண்டே. 84

இந்தநல்லடையாளங்க ளிலங்கியசித்தூர்தன்னில்
சுந்தரமாம்நில்லிர் சுதனவதாரமானுன்
வந்தவனின்னேன்செய்கை வரும்வினையின்னதென்று
சுந்தரநவக்கோளாலே சொல்லியபலனைக்கேளே. 85

## வேறு விருத்தம்

முந்திவனிருந்துவந்த சென்மந்தன்னை
மொழிகிறேம்அதன்விபரம் மொழியைக்கேளு
கந்தபதியேநகர்க்குத் தென்பாலாகக்
கங்கையரைதனில்வணிகன் சேயுமாகித்
தந்தையொடுமனைவிசுதன் ஞேக்கல்மிக்கான்
தனபதிசேய்யில்லுமே தனிபோமாடி

விந்தையதா நாடி நரவாகனங்கள்
விளங்கிய நன்மணிகளினுல் பலவியாபாரம். 36

இந்தவிதம்நாடோறும் பலவியாபாரம்
எழில்பெறவேநடத்திவருங் காலந்தன்னில்
கந்தபதிதனில்வாழும் மறையோன்சேய்க்குக்
கலியாணஞ்செய்வதற்கு மனத்திலுன்னிச்
சொந்தமாய்முதற்கொண்டு வணிகனில்விற்
சுகமதாய்வந்துபணி விலைக்குக்கேட்க
விந்தையாய்ப்பலபணிதி யெடுத்துவீந்து
வேண்டியதைப்பாரெனவே மறையோன்சொல்வான். 37

அயல்வணிகன்பார்ப்பதற்கு விலைதாழாமல்
அன்புடனேயிவை யன்னத்திற்குநொந்து
நயமுடனேபொருள்வாங்கிப் பணிமீதென்றுன்
நற்றவனுமயல்வணிகன் தனக்குக்காட்டித்
தயவுடனேபோராது வென்றுவோத
தளர்வடைந்துமறையவனு மிவன்பால்வந்து
இயல்புடையாயுனதுபணி விலைக்காணுது
எனதுபொருள்எனக்கருள வேண்டுமென்ருன். 38

வந்தபணிதனைக்கவர்ந்து நிதியீடாமல்
வரயிடக்காயுரைத்திடலும் வாய்பேசாமல்
அந்தணனும்அச்சபையார் தனக்குமோத
அன்புடனேயழைத்தவனைக் கேட்கும்போது
வெந்தனிடம்வந்ததுண்டு வெழில்வியாபாரம்
இசையாமற்போனேன் யானென்றுகூற
அந்தமொழிகேட்டு கரியில்லாததாலே
அந்தணன்சொல் இழுத்தெனவேகட்டிவிட்டார். 89

மறையவனும்மனந்தளர்ந்து தன்னூர்சார்ந்து
மனந்தவிர்ந்தசேதிதனை மற்ருேர்க்கோதிக்
கறைமிடற்ருேன்றனைநோக்கிக் கையால்போற்றிக்
கைலைநாதன்பதத்தைக் கண்பாரென்ன
முறைமுறையேபல மறையோர்வந்துகூட
மோசமிவைதனையறிந்து மொழிவார்வல்லோர்
குறையுரையார்அவர்கூடி வணிகன்றன்பால்
கொடும்பிணியால் உடல்வாடியாவிநீத்தான். 90

அந்தகனுருலகடைந்து நரகிற்புக்கு
வதுகழித்துவயன்கரத்தா லமைத்துவிட்ட
சுந்தரனுமவனிவனு மென்றுயாங்கள்
சொல்லுகிறோம்இவன்பவஞ் செய்குற்றங்கேளு
வந்தஇந்தமனைவிசுத னரிட்டமாகும்
வளர்தந்தையரிட்டமுறும் வளரொன்பானில்
இந்தபவம்தனை நீக்கிச் சுகமடையவேண்டி
யெழிலுடையதிருப்பழநி மலைக்கங்கேகி. 91

சுந்தரமாம்கந்தனுக்குப் பயந்தாலாட்டிச்
சுயதங்கம்களஞ்சியத்தால் வேலுஞ்சாற்றிக்
கந்தனிருபாதமதை யர்ச்சித்தேத்திக்
கருதுசிலமறையோர்க்கும் சேய்க்கும்போனல்
விந்தையதாயாடையோ டேமங்கூட்டி
விரைந்தவன்தன்கரத்தீந்து விளம்பக்கேளும்
முந்துபணியந்தனன்போன் முறைமைகூறி
மோசமிவைமொழிந்ததென வாக்காற்கூறி. 92

அந்தமொழிகேட்டு மறையகதிகட்கு
அன்பாகவறுஞ்சுவையோ டன்னமீந்து
வந்துதமதாற்றடைந்து வாழுநாளில்
வாழ்முருகன்றனைப்போற்றிப் பாவம்நீங்கும்
முந்திசெய்தபவம்போகும் நன்மையுண்டாம்
முக்கியமாயாயுசுவுங் கண்டமுண்டாம்
சுந்தரமாம்ஆணிரண்டு கன்னிமூன்று
சுகமாயுள்பெற்றிருக்கும் சுருதிவாழ்வே. 93

இந்தமட்டுமுற்செனனத் திடுக்கஞ்சொன்னேம்
இனிக்குடும்பம்பலன்தனைத் தானியம்பக்கேளு
தந்தைதுணையோன்பத்திற் தீர்க்கமிரண்டிற்
ருஞென்றுகன்னியொன்று மற்றதீயும்
தந்துணைகளுண்டாகும் தரித்தாலற்பம்
தான்முகந்துவினையொழிந்தால் ஆகுமூன்று
மைந்தனுமூவிரண்டுதனி லாமரிஷ்டம்
வகுத்தபடியின்னங்கேள் வகையாய்த்தானே. 94

(வேறு விருத்தம்)

இருசிவப்புடையமேனி யிளநகைப்புரியுந்தந்தம்
மருவியசமதிரேகம் வர்த்தியில்மலர்முகத்தான்
திரிவினுற்கிமிரியுண்டு திகழொளிகீர்த்தியுண்டு
தருக்கருத்துடையநெஞ்சம் தயவுடன்பணியுண்டாமே. 95

மணைவியும்ஒருவருண்டு மதலையும்பிறந்துவீயும்
முன்வினையொழிப்பானுகில் முதித்தசேய்தீர்க்கமாகும்
அனமெனுநடையாள்பெற்ற வப்பனூர்ச்செல்வமுண்டு
கனமெனுந்தனங்களுண்டு காளையுமடைவாரென்றே. 96

பூமியுமதிகமுண்டு புண்ணியங்கீர்த்தியுண்டு
சேமெனும்நிதியமுண்டாம் சிறந்திடும்பணிதாழாகும்
சாமியாலயந்தடாகம் சற்சனர்க்குதவிசெய்வான்
ஏமமும்பலமாயுண்டு வெதிரியுமெதிர்த்துத்தாழ்வான். 97

வாலிபந்தன்னில்வேறு மாதரைப்போகஞ்செய்வான்
பாலுளபசுக்களுண்டு பலித்திடும்சேயிலாபம்
ஏலுளதந்தைநாளே யெழில்பெறுஞ்செல்வமுண்டாம்
சீலனுமிவனுள்தன்னில் செய்யுளோர்ப்பொருளுண்டாமே. 98

அன்னமேர்ப்பிரீதியுள்ளான் ஆடையாபரணமுள்ளான்
பொன்னதுகொடுக்கல்வாங்கல் புகழுறுங்கீர்த்தியோயான்
அன்னமும்பெரிதாயீவான் அழகியோன்திசையிற்ருனே
நன்னயமாகவெய்து நலம்பெறுந்தந்தையாலே. 99

சொன்னசொல்மறுத்துக்கூருன் சுகம்பெறும்மணைவியாலே
நன்னயச்செல்வமுண்டாம் நற்பொருள்பணிநற்றாசு
மன்னியராலேசேரும் மக்களுந்தருவுமில்லும்
நன்னயமாகப்பெற்று நலம்பெறவாழ்வார்நன்றே. 100

புத்தியுமதியுமுள்ளோன் புகழுறுமற்பகோபி
வெற்றியாந்தொடுவழக்கு வீண்வம்புதன்னிற்செல்லான்
சுற்றத்தார்தோகையுள்ளான் சுகம்பிரகாசியாவான்
எத்தொழில்செய்தபோதும் இணங்கிடும்செல்வமுண்டாம். 101

தன்னுடைத்தந்தைமேலாய்த் தனயனுய்வாழ்வானுகும்
பொன்னதைபுதையல்செய்வான் புகழ்நந்திசேயுமில்லும்
நன்னயம்பரியும்காடி நற்சுகபரியுந்தாரா
சொன்னமும்செய்வான்தன்னுற் செகம்பெறமேன்மையுண்டாம்.

வித்தையுமொன் றுண்டாகும் விளம்புவான் பெருமையாகப்
புத்தியாலெதையும்வெல்வான் புத்திரவாஞ்சையுள்ளோன்
வெற்றியாம்தொடுவழக்கு வீண்வம்பன் தன்னைச்சாரான்
சத்தியாய்ச்சவுக்கியமுண்டு சம்பத்துசேயிலுண்டாம். 103

அன்னியமஞ்சமெத்தை அடிமையோர்பெருக்கமுண்டாம்
பொன்னதுகொடுக்கல்வாங்கல் பூமிபால்செல்வமெய்தல்
தன்னினத்தவர்க்குமேலாய்த் தனிகனாய்வாழலாகும்
மன்னியமாமன் றன்னால் மகிழ்ச்சியையடைவானென்னே. 104

(வேறு விருத்தம்)

பிதுர்பெருக்கம்செல்வமொடு கீர்த்தியுண்டு
பேசுவதிலிவனுதித்த பிறகுமுண்டு
ததியறிந்துபரமாதர் போகஞ்செய்வான்
தாயாதிவர்க்கசுகம் தழைத்துவாழும்
எதிரிதனைச்செயிப்பதற்குச் சமர்த்துமுண்டு
எப்போதும்நல்லோர்க ளிணக்கமுண்டு
சத்தியிலாவுறவுகொள்ளான் பகையுங்கொள்ளான்
சமர்த்துடையானென்றுரைப்பார் சகலபேரும். 105

(வேறு-விருத்தம்)

புண்ணியமறிவானீதி புராணநூல்மகிழ்ச்சியற்பம்
மண்ணிடையோர்பெருக்கம் மாதவர்க்குண்மையுள்ளான்
நன்னியவாஞ்சைதேட உபாயங்கள் மிகவுமுண்டு
வெண்ணியகருமம்யாவும் இசைவுறமுடிக்கவல்லன். 106

பலநதிதீர்த்தங்கூடிப் பரனடிவணங்கிப்போற்றி
நலனுரைசெய்கையாவும் நடத்துவன்வம்பிற்செல்லான்
குலமகன்வம்பிற்செல்லான் குற்றமொன்றுரைக்கொணது
நலனுறும்புராண நூலில் நயம்பினையறிவான்பாரே. 107

தந்தனக்கொடுக்கல்வாங்கல் தரர்புயமெச்சவாழ்வான்
சொந்தமாயேவலாளி சுகம்பெறுஞ்சேயிலுண்டு
வந்திடும்பணிதராவும் வளம்பெறமெத்தையுண்டு
சிந்துரப்பரியுங்காடி சேயில்லும்மணிதூசுண்டாம். 108

அடுத்தவர்க்குபசரிப்பான் அவர்திருவடிவணங்கும்
கடுத்தசொல்மொழியக்கூறான் காரிகைதனக்குநேயன்
வடுத்திடுங்கன்னிதன்னால் வளம்பெறப்பொருளையீவான்
கொடுக்கவேமனதுவைத்தால் கொற்றவர்போலேயீவான். 109

தந்தையின்புகழைச்சொன்னோம் தன்னுடையன்னைசெய்கை
சுந்தரவழகுமுள்ளான் சுகம்பெறும்கணவனுக்கு
விந்தையாயுபசரிப்பாள் வேண்டியபணிதியுண்டாம்
தந்துணையைந்துநாலு தரிப்பதுமூன்றுமென்றே. 110

ஐந்தொடுவேழொன்பானி லணுகிடுமரிஷ்டகண்டம்
முந்திபவந்துறந்து முதிர்நவக்கோளினுக்குஞ்
சுந்தரமுடிக்குமாட்டிற் சுந்தரன்குஷ்டம்போகும்
இந்தவாறுசெய்யாவிட்டால் எழில்வினையகலாதென்றே. 111

## திசா பலன்

இந்நிலக்குடும்பச்செய்கை யிசைந்தனன் நவக்கோளாலே
நன்னயதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னனுத்தரமுன்மூன்றி மகிழ்கதிர்பிற்பாகத்தில்
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 112

அலரியின்பிற்பாகத்தில் அன்னையுந்தந்தைநன்மை
குலவியமாதுவர்க்கம் கொடும்பகையரிஷ்டபீடை
நலமில்லைபிதுர்வர்க்கத்தில் நற்பொருள்செலவுநஷ்டம்
பிலமிலைப்பணியுண்டாதல் பிதுர்வர்க்கம்பிணியுண்டாமே. 113

சந்திரன் ஆரல்ராகு சகலமும்அன்னைபீடை
தந்துணைதனக்குண்டாதல் தாயவள்தனக்கரிஷ்டம்
தந்தையின்வாக்குகண்டம் தாய்குலம்நன்மையுண்டு
தந்தையின்வர்க்கம்கேட்டல் தனமுறுஞ்செய்யாவென்றே. 114

மன்னவன்மைந்தன்புந்தி மகிழ்ந்திடவித்தையோதல்
அன்னையும்பீடையற்பம் அற்பமாவழக்குண்டாதல்
பொன்னொடுபணியுண்டாதல் புகழுறும்தர்மம்நன்று
தன்னினத்தவர்க்குமேலாய்த் தனிகனாய்வாழ்வானன்றே. 115

சிகியொடுசுன்னும்பானுன் சிவதலந்தீர்த்தவாசம்
பகையிடர்அன்னைக்குண்டாம் பலமுறுமற்பமுண்டாம்
நகையொடுவெங்கலங்கள் நாணயச்சென்னலுண்டாம்
தொகையதாய்த்தனமுண்டாகும் துயரமும்நீங்கலாமே. 116

மங்களம்அன்னைவேட்டல் மங்களந்தனக்குண்டாகும்
இங்கிதசெல்வஞ்செய்யா லெதிர்த்திடும்பிதாவினாலே
சங்கரன்பணியுமன்னன் சார்ந்திடுஞ்சேயிலுண்டாம்
அங்கமுமரிஷ்டமுண்டா மருந்துணைவேட்டலுண்டாம். 117

புந்தியுஞ்சிகிசுன்பானு புகழுறும்சென்னல்தன்னுல்
மந்தனும்வந்துதோன்றும் மதியொடுஆரல்தன்னில்
வந்திடுநந்திகாடி நலமுறும்பணிதாராவும்
செந்திருகடாட்சமுண்டாம் செயினுற்பலனுண்டாமே. 118

மன்னவன்மந்தபுத்தி மக்களுக்கின்பம்வேட்டல்
தன்னுடைத்துணைக்குநன்மை தனியில்லமொன்றுசெய்வான்
பொன்னதுகொடுத்துச்செய் கை புகழ்பெறவாங்கலாகும்
அன்னதால்வழக்குண்டாகி அரசரால்நன்மையாமே. 119

சிகியொடுசுன்னும்பானும் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயம்மிகவுண்டாதல்
இகலினுற்றந்தைகண்டம் எய்திடும்தெய்வபூமி
வகையுறும்மைந்தன்தன்னுல் வளம்பெறும்செய்யாவென்னே. ()

சந்திரன்ஆரல்ராகு சகலரும்புகழவாழ்வன்
சந்ததிதன்னுல்யோகம் சார்ந்திடும்கீர்த்தியுண்டாம்
சுந்தரபரியுங்காடி சுகமுறும்பணிசெய்யில்லும்
வந்திடும்தனத்தாலீயல் வளம்பெறும்யோகமெண்ணே. 121

மைந்தனும்புந்திகேது மாரகப்பீடையுண்டாம்
செந்திருகோளாலேகும் சேயினுல்பலனுண்டாமே
சுந்தரசுங்கன்பானு சுகங்களுமெத்தவுண்டாம்
சந்திரன்ஆறில்ராகு சார்ந்திடுங்காலந்தன்னில். 122

மன்னனிற்சடத்தில்ரோகம் மருவொருமனைவருக்கும்
நன்னயமாகத்திங்கள் நலமுறும்சதுர்த்திதன்னில்
இந்நிலத்தாவிநீங்கி யெழிர்பிதுருலகஞ்சார்ந்து
பின்னையுமனேகசென்மம் பிறந்திவன்வாழ்வானன்றே. 123

இந்தநற்பலனையாங்கள் இசைந்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 124

மூன்றாவது ஜாதகம் முற்றிற்று.

---

நான்காவது

# கடக லக்கினம்



| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | லக் கேது |
| ராகு | | | |
| சுக்ரன் | சூர்-சந் பு-சனி குரு | | செவ் |

சந்திரன் அலரிபுந்தி சனியோடுமன்னன்தேளில்
சுந்தரசுங்கன்வில்லிற் சூற்சுகிகடகம்பற்ற
மந்திரபனியுமானில் மங்களகன்னிமேவ
இந்தவாறுநவக்கோள் நின்று லக்கினங்கடகமுற்ருல். 125

சந்திரவாஸ்துவீதி சாற்றுவோம்சுணங்குவாசல்
அந்தியிதென்பால்சந்து வரனுமைவீணைஞாங்கர்
சுந்தரத்தேளில்ஞாங்கர் சூழுபுங்காரியொன்று
வந்திடுமீனில்சத்தி வளர்புரிஞாங்கர்க்காவாய். 126

இந்தநல்லடையாளங்கள் இலகியசித்தூர்தன்னில்
முந்துசெய்தவத்தால்வந்த முதுமறைக்குலத்தில்சேயாம்
வந்தவனென்னசெய்கை வருஞ்செயலின்னதென்று
சுந்தரநவக்கோளாலே சொல்லிடும்பலனைக்கேளாய். 127

வந்தசேய்ஜெனனமுன்னுள் வகுத்திடக்கேளுமாதே
சுந்தரபொன்னிசொந்த சுகமரும்வளையார்தன்னில்
அந்தணன்குலத்திற்கேற்ற அப்பிரவாகத்தோன்றி
வந்துநன்மறைகளோதிச் சுயகுலத்தொழுக்கந்தேர்ந்து. 128

தன்குலத்தவர்கட்கெல்லாஞ் சாஸ்திரத்திரஞ்சனுகி
மென்னியதவர்கட்கேட்ட முந்தியசெய்யமீயும்

தன்முறைவிர்த்தியாகத் தான்தன்முறையின்றுது
நன்மனதுடையோர்க்கெல்லாம் நன்பனுய்நீதிமேலாய் 129

செல்வமுற்றிருக்குநாளிற் றீங்குவந்துற்றவாறு
சொல்லுவோம்துணையேயெங்கள் துர்வினையகற்றியாண்ட
ஏல்மலிக்குழலாலெங்க ளாத்துமத்துறவேசொல்லும்
வில்லங்களன்னையீன்ற விளங்கியதிதியின்வாரம். 130

விதிமுறைதென்புலத்தார் விரும்புறச்சடங்குசெய்து
வெய்தியமறையோர்க்கெல்லா மின்புறமசனமீந்து
கதிர்பெறும்நேமங்குன்ருன் கரிதினில்பிசகுண்டாகி
மதிநுதல்வதனமாது மயக்கமும்மனத்திற்கொண்டான். 131

பலபலமாதர்போகம் புரிந்தவன்செய்வதானுன்
குலமதுமிவனையீன்ற கோதையின்தமையன்கன்னி
சிலநாளிலவமதானுள் சிறுவன்தன்மனையில்வந்தாள்
நலமவளுருவங்கண்டு நாடினுன்அவள்மேலிச்சை. 132

வைத்தவள்தன்னையெய்து மருவியபோகந்துய்த்து
உற்றவள்வயிற்றில்கர்ப்பம் உடனதுவந்துதோன்றப்
பெற்றிடவுருவுண்டாகிப் பிறந்திடாதேழாந்திங்கள்
பெத்தமாதவளையீவார் பிசக்கினையெய்தாரென்ன. 133

சொல்லினுலிவனையென்ன சுயமதித்தெடுத்தாரென்ன
வல்லியில்வாராற்கூற வயித்தியன்விஷமுமீந்தான்
அல்லியுமழகுலாள்சேயும் மவதியாலிறந்தாரம்மா
கொல்லுளத்தாயைக்கேட்டு வேக்கமுற்றிவனைச்சொல்வாள். 134

பிறந்திடமென்றுமன்னு பெரும்பிழைசெய்தாய்மந்தாய்
குரந்தனிப்பிறவிதோறும் பெய்துமேயுனக்குச்செய்யும்
அறந்தனைமறந்தாரேனும் அவமங்கைமாதைக்கூடார்
துகர்ந்ததோன்மதியினுலே சோர்ந்தாளேயவென்ருள். 135

இருபழயியனுல்குற்றம் இணங்கியதிவனுக்குண்டாம்
பெரியநரகம்புக்குப் பிரமனுல்பொரிதிவிட்ட
திரும்பியும்மதலையாகி உதித்தசேய்இவளேயம்மா
வருகுமப்பழியுந்தீர வகுக்குருேமதனைக்கேளே. 136

சேதுவிற்சென்னின்னேனும் செழுமறையோனுக்கம்மா
நீதிசேர்ஈந்ததாலே நீள்சுதன்தோற்றஞ்செய்து
சூதரைவாடச்சொன்னேம் சுகந்தமும்மறையோர்க்கீந்து
காதலியுடனேகூடிக் கலந்தன்னிலக்கம்புக்கு. 137

ஈந்திவன்சோமவாரம் இயம்புவோம்பான்மூந்தாகும்
ஓர்ந்திடாவிரதந்தன்னுல் முறையுமப்படியேகொண்டு [டாள்
தேய்ந்தனின்னிடையாள்தேவி திங்கள்வெள்ளிவிரதங்கொண்
ஆய்ந்தமுப்பழியுந்தீரும் அடர்குலம்விர்த்தியுண்டாம். 138

இந்நிலத்திவையேசெய்தால் இன்பமும்செல்வமுண்டாம்
நன்னயபுதல்வருண்டாம் நலிந்திடாதின்பங்கூறும்
அன்னைகேளிவைசெய்யானே அடர்பழிதொலைந்திடாது
அன்னமேபுதல்வருண்டாம் அருஞ்சுதன்நிலைத்திடாது. 139

வந்தவன்குடும்பப்போக்கை வகுத்திடக்கேளுமாதே
தந்தையின்துணையேழைந்துள் ஆணிலோலொன்றுதீர்க்கம்
தன்துணையேழைந்துண்டு ஆண்மூன்றுகன்னியிரண்டு
தந்திரகன்னிகண்டம் தாய்துணையேழிலிரண்டே. 140

அன்னமேமறையோன்செய்கை அறைந்திடக்கேளுமாதே
உன்னிதமிருசிவப்பு வுயர்ந்திடுதூலமற்பம்
நன்னயமிருதுவாகும் நயப்புளான்சமதிரேகம்
மன்னியஇரண்டுகல்வி மதியதுயூகவானே. 141

வித்தையில்புராணவேதம் மிகுதியிலுணர்செய்யற்பம்
புத்தியால்ஞாலந்தன்னைப் புகலுவான்கலைநூலற்பம்
சுற்றத்தார்ஏற்கையுள்ளான் சுகமிகஸ்தியின்தன்னுல்
உற்றநற்றுணைவர்மூன்றில் உயர்நடுவலகன்ருேதே. 142

சொல்லிடும்வசனமெல்லாம் சுத்தமாம்சொகுசுமுன்ன
வெல்லுவன்எதிரிதன்னை வீண் வழக்கோரஞ்சொல்லான்
அல்லலையுடையான்நல்லன் யாவர்க்கும்நல்லோனுகும்
வில்லினுநுதலியன்னுன் விவேகவானவனென்ருேதே. 143

கைம்முதல்பின்னுலுண்டாம் கனத்தநற்பலன்களாலே
உய்வகைபூமியெல்லா முபாத்தியார்தொழிலுமுண்டாம்
பொய்சொலான்பிதாவின்மேலாம் புகழ்படக்கீர்த்தியுண்டாம்
அல்லலுமுன்னேனுலே அகன்றிடும்தனமுண்டாமே. 144

நல்லவன்குணவானுகும் நயமுரைந்துரைக்கவல்லன்
சொல்லிலேகபடமுண்டு சுற்றத்தார்ஞாதியுண்டு
நல்லவெங்கலங்கள்செம்பொன் நற்பணிநற்றூசுண்டு
இல்லொடுசெய்யாளுண்டு இன்பமுமிகுதியுண்டே. 145

தந்தையின்இனத்தோர்க்கெல்லாம் தணிதகூஸ்திலகமீவான்
மந்திரஉயிர்த்தியாக மருவிடுமதனுவின்பம்

சுந்தரச்சேயுமில்லும் சுகமுறும்குணவானுகும்
தன்துணைதனக்குமீவான் தந்தையின்னருளாலெய்தும். 146

முந்தியபுதல்வனுக்கு முதுமறைபலநூலற்பம்
செந்திருசஷ்டிமுன்னேன் செப்புவனுபாத்தியாயர்
சுந்தரப்பணிதிசேயில் சுகமணையிருவருண்டு
முந்தியமலிக்கிசன்னி முதித்திடும்பின்பாலானே. 147

தன்னிடதனிட்டனுக்குத் தனமொடுமணைவிமைந்தர்
சுந்தரப்பணிதிசெய்யும் சுகம்பெறும்சேல்நயனத்தால்
நன்னியபிதாவினுக்கு நற்பலனடையுமற்பம்
முன்னவன்பவநீக்கானு லுக்குவன்புதல்வனுக. 148

அன்னையும்புத்திசாலி அன்புடனன்னமீவாள்
சொன்னமும்பணியுமில்லும் சுகமதுஅற்பமாகும்
நண்ணியபுதல்வன்தன்னுல் நற்பலனனுபவிப்பள்
அன்னமேசொர்ணமாடை அரும்பிதாதன்னுல்யோகம். 149

## தீசா பலன்

இந்நிலகுடும்பச்செய்கை யிசைந்தனனவக்கோளாலே
நன்னியதிசாபலத்தின் நயந்தணையுரைக்கக்கேளாய்
மன்னியகேட்டைநான்கில் மகிழ்புதன்மந்தன்புத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்திணையுரைப்பேன்மாதே. 150

சிகிதனில்முதற்பாகத்தில் சீர்பெறுமன்னைதந்தை
நகையொடுவெங்கலங்கள் நற்றுயிலற்பபீடை
இகல்பகைவந்துதீரும் எழில்நதிதீர்த்தவாசம்
சிகியவன்பிற்பாகத்தில் செழும்பிறவர்க்ககண்டம். 151

நல்லவர்சேர்க்கையுண்டு நயமுறும்பெரியோர்தன்னுல்
அல்லலுமகன்றுபோகும் மன்னையின்பிதுரால்செல்வம்
நல்லநற்றுணையாங்கன்னி நலமுறும்துணைக்குநன்மை
வில்லிநன்னுதலால்வித்தை விளங்கிடுந்தனமுண்டாமே. 152

சுங்கனும்மலரிமாலோன் சங்கனுமெத்தையுண்டாம்
இங்கிதுதுணையும்வித்தை யிருவருக்குமரிஷ்டகண்டம்
பங்கனர்பலனுண்டாகும் பலபலவிதத்தாலாபம்
வெங்கலம்பணிதிசெம்பொன் வியப்புறுமன்னைதன்னுல். 153

மாரனுமரவுமன்னன் அருந்துணைதனக்குவேட்டல்
சீர்பெறுஞ்செய்யலாபம் செழும்பனைபிதுருகண்டம்

தீரமுற்றரவுசெய்து திகழ்பணிவெங்கலங்கள்
கோரமாயிவர்க்குக்கண்டம் கொடும்பகைசெய்யலுண்டாம். 154

மந்தனும்புந்திகேது மகிழ்துணைசுபங்கள்வெட்டில்
தந்தையுமடைவான்கண்டம் தன்னுடதுணையால்நன்மை
விந்தையாரிடபகோணம் விளங்கியகன்னிதன்னைச்
சுந்தரமணங்கள்செய்வான் சுகமுறுந்தனமுண்டாமே. 155

அலரியும்முற்பாகத்தில் அரும்பிதாவர்க்ககண்டம்
நலமொடுதீர்த்தவாசம் தனமொடுமகவுந்தீர்க்கம்
கலகமுமற்பமுண்டு காரிகைதனக்குப்பீடை
விலைதனக்காடையாவும் வீண்வழக்கற்பலாபம். 156

அலரியின்பிற்பாகத்தில் அடிவிருவர்க்குங்கண்டம்
நலமுறும்பலபேராலே நற்பணிநளினதூசும்
கலகமுஞ்செய்யலாபம் கைப்பொருள்சென்னலுண்டாம்
பிலமுறும்மூத்தோன்தேவி பிணியனுல்மரணமாவாள். 157

சந்திரன்ஆரல்ராகு சார்பவன்துணைதுலைப்பன்
தந்துணைபின்னேன்முன்னேன் தவமதால்வேட்டலுண்டாம்
சுந்தரப்புதல்வருண்டாம் சூழ்பவம்தீர்ந்தால்தீர்க்கம்
தந்தையின்துணைவன்கண்டம் தந்திடும்பலனுண்டாம். 158

மன்னவன்மைந்தன்புந்தி மைந்தனும்வந்துதோன்றும்
பொன்னெடுபணிவந்தெய்தும் புகழ்துணைவிரோதமாகும்
மன்னரால்பெருமையுண்டு மங்களமனையிலுண்டு
சென்னலும்சொர்ணமுண்டு செய்தனக்கரிஷ்டமுண்டு. 159

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயம்பலவாறுண்டாம்
இகல்பகைதுணைக்குமைந்தன் எழிலுள்ளவன்னைகண்டம்
அகமகிழின்பமெய்தும் ஆடையும்தனமும்நஷ்டம். 160

ஆரலின்முற்பாகத்தில் அன்னையும்வர்க்ககண்டம்
பேர்பெறும்புதல்வனுக்குப் பூணனூலழிவுசெய்வான்
சீர்பெறும்பிற்பாகத்தில் சந்ததம்துணைகள்வேரும்
வார்பெறும்முலையாள்பீடை வாயுவாலரிஷ்டகண்டம். 161

பணியொடுமன்னன்மைந்தன் மருந்துணைபிணியால்கண்டம்
மணியெனுங்கன்னிகண்டம் மாதுவுமரிஷ்டகண்டம்

பணியொடுவெங்கலங்கள் பலிதமர்ந்தூசுசென்னல்
அணிபணியாடையாவும் அலங்கிர்தமகலாதெய்தும்.

புந்தியுஞ்சிகிசுன்பானுள் புகழ்பெறும்மகவுக்கீந்தான்
தன்னுடனிளைத்துவாடும் தணித்தவாவணியுந்திங்கள்
வந்திடும்சதுர்த்திதன்னில் வளர்சடத்தாவிநீத்து
இந்திரலோகத்தெய்தி யெழில்பூமிமறையுதிப்பன்.

இந்தநல்லடையாளங்கள் இசைந்தனன்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே.

நான்காவது ஜாதகம் முற்றிற்று.

---

ஐந்தாவது

# சிம்ம லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| சந்திர | | ராகு | செவ்வா |
| | இராசி சக்கரம் | | குரு சூரியன் சுக்ரன் |
| | | | லக் புதன் |
| சனி | கேது | | |

சந்திரன்மீனராசி சார்ந்திடத்தனுவில்மைந்தன்
புந்தியும்புலியில்துன்னப் புகழ்குருஅலரிசுங்கன்
வந்திடநளியில்தேளில் வளர்சிகிவிடையல்ராகு
சுந்தரவீணையாரல் லக்குணம்புலியுதித்தால். 165

இந்தசேய்பிறந்தவீதி யியம்புவேன்கிழக்குமேற்கு
அந்தையில்தெற்குவாசல் அதிலொருபாலில்சந்தாம்
சுந்தரகுணக்குசூழி சுகமருள்சத்திரண்டாம்
வந்திடுங்குடக்கில்தெய்வம் வளர்தனுக்காரியென்றே. 166

இந்தநல்லடையாளங்கள் இலங்கியசித்தூர்தன்னில்
தந்திரமயன்குலத்தில் தரித்திடும்சேயாமின்னேன்
வந்திடுமாமனில்லில் வருஞ்சுதன்முன்னுள்செய்கை
சுந்தரநவக்கோளாலே சொல்லுவோம்பலனைக்கேளே. 167

முன்னவன்செனனஞ்செய்கை மொழிந்திடமுரித்துக்கேளும்
மன்னியதேவூர்தன்னில் மறையவன்குலத்திற்றோன்றிச்
சென்னியாற்றுடையனுகும் செழும்பதிகணக்குப்போர்ந்து
பொன்னதுவதனுல்பெற்றுப் புகழ்பெறவிருக்கும்நாளில். 168

அந்நகர்அரசன்றுனும் ஆலயத்திருப்பணிக்குப்
பொன்னதையிவன்கையீந்து பொய்யிலாக்கணக்கீதென்றுன்

சொன்னசொற்படிசெய்யாமல் சூதுகள்பலவாச்செய்து
அன்னவன் தனயத்திற்பாதி அபகரித்தொலக்கமீந்தான். 169

அரசனும்மனமகிழ்ந்து அபிஷேகம்நலமாய்ச்செய்து
திரமுறும்மறையோனுக்குத் தீரமாய்க்கலையொன்றீந்து
மறைதனக்கவனிசென்னி பணியதுசெய்வாயென்று
தரமுறும்மணியும்பொன்னும்தடையிலாதிவன்கையீந்தான். 170

வந்திடும்பணிகள்பொன்னில் நலமதைப்பொறுக்கிவேறு
ஐந்திடுமணிகள்தன்னுல் அருமைசேர்விசுவனுலே
சுந்தரமாகச்செய்து சூழ்புவியரசன்கையில்
விந்தையாயளிக்கவாங்கி வியல்புறமறைக்களித்தான். 171

ஆலயம்பணிக்கவர்ந்த வரும்வினைச்சூழ்ந்து
மாலயன்விதித்தநாளில் மரணமுமடைந்துதண்ட
காலனுல்விதிக்கப்பட்டுக் கஞ்சனுல்திட்டவந்த
பாலகனிவனேயென்று பகர்ந்தனமெங்கள்தாயே. 172

முன்னுறும்பவன் செய்குற்றம் ஊழ்வினையிச்சென்மத்தில்
மன்னியமணவிமைந்தர் மாதொடுசெல்வமில்லை
அன்னவைதீர்க்கவேண்டில் அருள்திருவாஞ்சியத்தில்
சென்னியாருடையோனுக்குச் செழிப்புறஅபிஷேகித்து. 173

அன்னமும்ஆடைபொன்னுல் அன்புறவளித்தவ்வூரில்
மன்னியமறையோநூறு மனமுறவன்னமீந்தால்
முன்னுறுபவங்கள்தீரும் முரைந்துவோம்பயின்றதன்னுல்
தன்னுடதனுவில்கண்டம் தந்திடத்தகன்றுபோமே. 174

தந்தையின்துணைகள்மூன்று தானென்றுகன்னியிரண்டு
வந்துணைக்கின்னுளீயும் வளர்தந்தைதீர்க்கமாகும்
தந்துணைநவமதன்னுள் தானிரண்டரிவைமூன்றும்
வந்திடும்கணவனுலே வளம்பெறுஞ்செல்வமுண்டாம். 175

வந்தவனிருசிவப்பு வளர்த்தியிலுணர்த்தல்திரேகம்
சுந்தரவடிவனுகும் சுகமிகுதந்தைக்கென்றும்
தந்தமாகொடுக்கல்வாங்கல் தைரியசமர்த்தனுகும்
எந்தநற்சபைசென்ருலும் இவன்மொழியின்பமாமே. 176

வஞ்சகவஞ்சனுவான் வார்த்தையுமிஞ்சிப்பேசான்
இஞ்சொல்லில்சோர்விராது வெழில்பெறும்வித்தையுண்டு
வஞ்சியில்பலபேர்போகம் வாங்குவனற்பமாகத்
தஞ்சமென்ருரைச்காப்பன் தயவுறப்பெருமையோனே. 177

நல்லவில்லறங்களுண்டு நலினமாய்வித்தையுண்டு
69 புல்லியசகடமுண்டு புகழ்பழியில்லஞ்செய்யும்
நல்லவெங்கலங்கள்தூசு நயந்தரும்வேலைதன்னால்
அல்லலுமகன்றுபோகும் மற்றவர்க்கன்பனாகும். 178

புத்திரவிர்த்தியுண்டு பெண்டிரொன்றுடையனாகும்
70 உய்த்துடன்பூமியுண்டு வுயர்திதிவேலையாகும்
புத்தியுமதிகமுண்டு புகழ்பெற்றகீர்த்தியொப்பான்
நத்தியேவந்தபேர்க்கு நயம்பெறவுரைப்பான்நன்றே. 179

நல்லவன்குணவானாகும் நலமறிந்துரைக்கவல்லான்
71 சொல்லிலேகபடமுண்டு சுற்றத்தார்கீர்த்தியுண்டு
மல்லுக்குஅச்சங்கொள்வான் மகாராஜன்தயவுண்டாகும்
வல்லமையுடையானாகும் வரும்விருந்தெவர்க்குமஞ்சான். 180

கைம்முதல்முன்னாளில்லை கனதந்தைபிறந்தபின்னால்
72 செய்தொழில்இனத்தான்தன்னைச் சேர்ந்திவன்நலங்கள்போற்று
கைமுலவானாள்பின்னாள் கனகமும்பணியுமுண்டாம்
உய்வதுபெரியோனாலே உறுதியாய்ப்பலனுண்டாமே. 181

சல்லியசோதிடங்கள் சாஸ்திரமறியவல்லான்
73 புல்லியர்தம்மைச்சாரான் புகழ்தந்தைதன்னால்யோகம்
நல்லவர்வுறவுண்டாகும் நாட்குநாளதிகயோகம்
இல்லைஎன்றவர்க்குஞ்சொல்வான் எழில்பெறவில்லஞ்செய்வான்.

அந்தணர்முதலாய்ப்பல்லோ ரனைவருஞ்சுகித்துவாழ
74 விந்தையாமேழிவில்லம் வியப்புறும்வாகனங்கள்
சுந்தரவிரதம்யாவும் சுகத்தொழில்பலவாய்ச்செய்து
வந்திடும்பொருள்களென்று வகுத்தனமறிந்திடாயே. 183

ஆரலும்சோமவாரம் அணுகியசஷ்டிதன்னில்
75 பேரிலிபரமனுக்கும் பெருமைசேர்கந்தனுக்கும்
சீர்பெறவபிஷேகித்துச் சிறப்புறும்யோகர்க்கன்பாய்
ஆரிருபேருக்கீர்ந்தால் வரும்பிணியகன்றுபோமே. 184

தந்தையின்தந்தைநாளில் தனமொடுசகலமற்பம்
76 தந்தையுமிறந்தபின்னால் தன்னுடையினத்தைச்சார்ந்து
வந்திடும்குலத்துவித்தை வளம்பெறவில்லஞ்சேர்ந்து
சுந்தரப்பெரியோனாலே சுகமுறும்பலனுண்டாகுமே. 185

தன்னுடைத்தொழிலைச்செய்து தனமொடுசேயுமில்லும்
77 அன்னமும்சொர்னமாடை அணிபணிவெங்கலங்கள்

தன்னனறக்களித்துவெய்து தனயன்வந்துதித்துப்பின்னே
மன்னியசெல்வமெய்தல் மானிடர்தம்மாலெய்தும். 186

தன்னுடையினத்துக்கின்னேன் தனிகனய்வாழ்வானுகும்
சொன்னசொல்தவருன்ஸ்திரீகள் சூதுகளறிவான்செய்யான்
அன்னமுமாடையீவான் அடுத்தவர்க்காதரிப்பான்
நன்னயச்சோதிடங்கள் லக்கணமறியவல்லான். 187

தன்னுடைத்துணையாங்கன்னி தனிநளிகணவனுலே
அன்னமும்சொர்ணமாடை அணிமணிசேயிலுண்டாம்
தன்னுடைத்துணையான்பாலும் தனமொடுமனைவிமக்கள்
அன்னமும்பணிதிராவும் அழகியபணிசெய்யுண்டாம். 188

அன்னையும்புத்திசாலி அன்புடனன்னமீவாள்
சொன்னமும்பணிதராவும் சுகம்பெறும்கணவன்தன்னுல்
தன்னுடைத்துணைநலத்துள் ஆண்நாலுகன்னிமூன்று
மன்னிடுசாகிச்சின்னுன் வாழ்நிதிசெல்வமற்பம் 189

## திசா பலன்

இந்நிலக்குடும்பசெல்வ மிசைந்தனன் நவக்கோளாலே
நன்னதிதிசாபலன் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னுரேவதிகால்மூன்று மகிழ்புதன் தனுவின்புத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பன்மாதே. 190

பணியொடுமன்னன்மைந்தன் பகர்பிதுர்மனைவிநன்மை
அணிபணிஆடையுண்டாம் அழகியதந்தையானுல்
கணிதமும்பெரியோராலே கைப்பொருள்வந்துசேரும்
பிணியதுவற்பமுண்டாம் பின்துணைவந்துதோன்றும். 191

மனைவியால்தடைவந்தெய்தும் அற்பமும்தனமுமுண்டாம்
தன்னுடைவாக்குக்கண்டம் தாய்பிணியற்பமுண்டாம்
நன்னயத்தனுவில்கண்டம் நலமுறும்கோளாலேகும்
முன்னுமப்பவமொழித்தால் மொழிந்தசொல்லனேகமுண்டாம்.

சிகிதனில்தலவாசங்கள் ஜெயமுறும்இல்லமுண்டாம்
பகையிடர்வந்துநீங்கும் பாக்கியம்பலவிதத்தால்
தொகையதாய்த்தனமுண்டாகும் துணைதனக்கின்பவேட்டல்
நகையொடுவெங்கலங்கள் நலமுறும்வித்தையோதல். 193

அங்கமும்அற்பப்பீடை வருளிவருக்குக்கண்டம்
சுந்தரவலரிஆலோன் சுகங்களுமெத்தவுண்டாம்

தங்கள் தங்குலத்துவித்தை தந்தையால்தனமுண்டாகும்
இங்கிதசோதிடங்கள் எழிலுளபிதாவாலெய்தும். 194

சீர்பெறுங்கடகவேட்டில் செழுந்துணை தமக்குமெய்தும்
ஆரலுமரவுமன்னன் அற்புதச்செல்வமுண்டாம்
பேர்பெறக்கடகவேட்டிற் பிற்றுணை தனக்குமுண்டாம்
ஏர்பெறுமிருவர்க்கத்தில் எழில்சுபாசுபங்களுண்டாம். 195

மந்தனும்புந்திபுத்தி மகிழ்தந்தையரிஷ்டகண்டம்
தன் துணையொன்றுகண்டம் தாயிவள்தனக்கரிஷ்டம்
வந்திடுமொருவனாலே வளம்பெறும்நீதியுண்டாம்
செந்திருகடாக்ஷமுண்டாம் சீருளபுதல்வன்வித்தை. 196

அலரியின்மனைவிகண்டம் அடைந்துபின்வேட்டலுண்டாம்
குலமதில்உற்றார்கேடு கொடும்பகைசெலவுண்டாகும்
நலமிலைமாதுர்வர்க்கம் நற்சுபாசுபங்களுண்டாம்
பிலமுறுந்தந்தைகண்டம் பிறர்மனைதனக்குக்கற்பம். 197

சந்திரன்ஆரல்ராகு சார்பணிமனைவிகண்டம்
சுந்தரவில்லமுண்டாம் சுகமுறுமைந்தனாலே
வந்திடும்பெரியோனாலே வளமுறும்வேலைதன்னால்
எந்தநற்றொழில்செய்தாலும் இன்பம்பொருளுண்டாமே. 198

மன்னவன் மைந்தன்புத்தி மக்களுக்கின்பம்வேட்டல்
நண்ணியபணிநற்றூசு நலம்பெறவந்துஎய்தும்
மண்ணியபுதல்வனென்று மாரகப்பிணியுங்கஷ்டம்
தன்னுடைப்புதல்வன்வேட்டல் தனமதுசெலவுண்டாமே. 199

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயநற்றூசுண்டாம்
பகையிடர்அகன்றுபோகும் பாக்கியம்பலகால்நன்மை
தொகையதாய்த்தனமுண்டாகும்துய்சுதன் தன்னால்யோகம். 200

மங்கலன்றிசையதன்னில் மக்களால்சம்பத்துண்டாம்
வெங்கலம்பணிதியாடை வியப்புறும்மந்தியாவும்
பங்குறுஞ்செய்யலாபம் பலனதுஅற்பமெய்தும்
அங்கமும்அரிஷ்டம்பீடை யதுநவக்கோளாவெய்தும். 201

பணியொடுமன்னன்மைந்தன் பாக்கியம்பலவாறுண்டாம்
அணிபணியாடையுண்டாம் அலங்கிர்தவேலையற்பம்
கணிதமாய்தொகையுண்டாகும் கைப்பொருள்மகவுக்கீவன்
பிணியரும்பெரியகண்டம் பேசிடும்பிசகுண்டாமே. 202

அன்னமேதனுவிற்றிங்கள் அருந்துவாதசிதன்னில்
தன்னுடைஜடம்விட்டாவி தனிச்சமனுலகஞ்சார்ந்து
பின்னையும்பூமியுற்றுப் பின்னவர்குலத்திற்றோன்றும்
மன்னிடும்மனேகஜென்மம் மருகுருவாகுமென்றே. 203

இந்தநற்பலனையாங்கள் இசைந்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 204

ஐந்தாம் ஜாதகம் முற்றிற்று.

---

ஆறாவது

# கன்னி லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| சந்திர | சனி | | ராகு |
| | இராசி சக்கரம் | | செவ் |
| | | | |
| புதன் சுக்ரன் கேது | சூரியன் | குரு | லக்கின |

சந்திரன்மீனராசி சனிதகர்தேளிற்பானு
புந்தியுஞ்சிகியுஞ்சுங்கன் புகழ்தனுதுலையில்மன்னன்
சுந்தரகடகம்ஆரல் சூழ்பணிவீணைமேவ
இந்தவாறுநவக்கோள் நின்று இலக்கினம்கன்னியுற்றால். 205

சந்திரவாஸ்துவீதி சாற்றுறோம்சுணங்தவாசல்
அந்தஇல்லொருபாற்சந்தாய் மறைந்தனவீணைசத்தி
சுந்தரன்கன்னியானை சூழியின்கலையில்மாறி
இந்திரன்தனுவில்தெய்வம் எழில்புலிக்காவாயென்றே 206

இந்தநல்லடையாளங்கள் இணங்கியசித்தூர்தன்னில்
சுந்தரகுலத்துவேளான் சூழ்ந்தவசேயாமின்னோன்
முந்துநாள்தெய்வத்தின் முதிர்வினையின்னதென்று
வந்திடும்நவக்கோளாலே வரும்பலனுரைப்பேன்மாதே. 207

முன்னவன்செனனந்தன்னில் மொழிகுவோம்முன்னூலோதி
இந்நிலத்தெவரும்மெச்ச வெழிற்றமிழ்சுயங்கள்பாடி
உன்னிதமறையுமற்ற உலகுளோரெவருமெச்சத்
தன்னிலத்திருந்துசெல்வம் தழைத்திடும்நாளில்கேளே. 208

அன்னியமாதராலே அணிந்துட்டப்பிணியும்வந்து
பொன்னிறமேனிவாடிப் புலம்பியேதவிக்கும்போது

சொன்னசொல்பிசகிடாமல் சுகமுனியிவனைக்கண்டு
உன்னிட.வியாதிநீங்கும் உறுதியாயீசனுக்காய். 209

நித்தமும்இரண்டுவேளை நீயாவின்பாலைவாங்கிக்
கர்த்தனின்முடியாலாட்டிக் கருத்துறகொடுப்பாயானல்
உத்தநல்வியாதிதீரும் உயர்ச்சியையடைவாயென்ருர்
சித்தவைத்திவையேநித்தம் செழும்பரமுதவுநாளில் 210

பால்கொடுவீசர்கிருபையா பால்பிணிதீர்ந்துமுன்போல்
மால்மகன்போலேமேனி வடிவுறவிருக்கும்நாளில்
சேல்விழிமாதுவோர்நாள் செலும்வழியிவனைக்கண்டு
சீலனேயெனக்குப்பாலைச் சீக்கிரம்மீதாவென்ருள். 211

அன்றவன்மயக்கங்கொண்டு அவனிடப்பாதிப்பாலை
நின்றவள்கையில்மெய்யும் கறவதினிலிறைவற்குத்
தொண்டனுன்முனியுங்கண்டு செல்லுவார்துயரமாக
இன்றுபின்புரப்பாயென்றுவியம்பிட இவனுஞ்சொல்வான். 212

ஆண்டவரடியில்வீழ்ந்து அழுதுவாய்புத்துவிம்மி
இன்றெனக்களித்தசாபம் எளியனுல்சகியேன்சாமி
பண்டுநாள்காத்ததேவா பக்ஷம்வைத்தாள்வாயென்ன
நின்றமாதவருன்றன்னை நிலைமையாமுணர்ந்துசொல்வான். 213

புவிதனிலுதிக்கவோதப் புகழ்நசன்தீட்டிவிட்ட
நவமுளபாலின்னேன்றன் நற்பவபலனைக்கேளாய்
பலமுறுஞ்செய்தகுற்றம் பகர்துணைபின்னரிஷ்டம்
மவதுணை தீர்க்கவென்றுல் மருங்கழுக்குன்றமேவி. 214

அரன்முடிக்கபிஷேகித்து அந்தணன்அறிவன்சேய்க்குத்
திரமதாய்ப்பூனூலாடை திருக்கரவன்னமீந்து
வரனடியார்க்குவன்னம் பதினைந்துபேர்க்குமீந்து
வரும்பவமகன்றுபோகும் மைந்தனுதீர்க்கமாமே. 215

முந்தியவினையுஞ்சொன்னேம் மொழிந்திடநிவர்த்திசொன்னேம்
தந்தையின்துணைவரேழில் ஆண்மூன்றுகன்னிமூன்றில்
தன்னிடவேழில்தீர்க்கம் ஆணென்றுகன்னிமூன்றில்
முன்னியகன்னியிரண்டு உதித்தபின்கன்னியொன்றே. 216

அன்னவனிருசிவப்பு அளவிலாச்சம்திரேகம்
கன்னலின்சுவைபோல்வார்த்தை கருதுவன்தமிழோவித்தை
மன்னியசெல்வமுள்ளோன் மகிழ்தந்தைதன்னுல்செல்வம்
நன்னயமிருதுவாகும் நயமுறும்அன்னைதன்னுல். 217

வரும்பிதுர்பூமிசெல்வம் வகுத்திடக்கேளுமம்மா
திருவருளிவனுல்உண்டு செய்பலம்சேயில்லாபம்
மருவரைசித்தேவெல்வன் மாநிலயூகவானும்
சிறுவணையுறவுகொள்வான் சிநேகிதநேயவானே. 218

குணமதுசீலனுகும் குறிப்பினிற்கொடுமைதோன்றும்
கணக்கினில்பரமயோகி காரியாகாரியங்கள்
தனப்பறிந்தெவர்க்குச்செய்வான் தைரியமன்னனுகும்
கனவிழிமயிலேயெங்கள் கருத்துரைமயிலேசொல்லும். 219

அடுத்தவர்கன்னமிக்கு காமிய வார்த்தைசொல்வான்
கொடுத்திடும்விக்காரத்தைச் சொல்லறிந்தெவையுஞ்செய்வான்
கொடுப்பதைவிலக்கான்வீணுய்க் கூறிடான்பெருமையில்லான்
நடத்திடுங்காரியங்கள் நன்மையேதுன்மையோரான். 220

தன்னுடைநாளில்பூமி தானுண்டுபிதுர்களுண்டு
பின்னங்குப்பணையுங்கொண்டு இடப்புறம்இல்லஞ்செய்து
பொன்னதாற்பூமிகொண்டு புகழுளசெல்வம்பெற்றுப்
பின்னெருமறைப்பின்பாலு பெருமிதநேயமுண்டாம். 221

சிகிதனிற்பிரியனுகும் செல்வர்க்குமற்பமுண்டு
கைம்முதல்பெருக்கமாகக் கணக்கின்மேல்எவையும்வைத்து
உய்வதுஅன்னையாலும் உயர்துணைக்கணவனுலும்
மெய்ம்மொழியுடையோனுகி விர்த்தியுஞ்சேயிலாபம். 222

நற்சுகந்தந்தைசெல்வம் நயம்பெறுபூமியாலே
இப்புரிதாகவங்கு வெழிலுறப்பலயேயீந்து
சொற்பிசகின்றிப்பல்லோர் சுயமதிபல்லோர்நேசன்
உற்பனவிவேகத்தாலே உயர்செல்வம்பெறுவானுகும். 223

வரும்பிதுர்த்தந்தைசெல்வம் வந்திடுஞ்செய்யிலாபம்
பெருமிகஆவுமாடு பிரபலசேர்க்கையுண்டாம்
தருமதாய்ப்பணிநற்றூசு தாரொடுந்தகுதிசெய்யும்
அரும்பலகட்டில்மெத்தை அமர்ந்திடுந்தனமுண்டாமே. 224

தந்தையால்தனமும்பூமி தந்திடும்பின்னுள்தன்னில்
தன்துணைகன்னிமூத்தாள் தலைவனைச்சேர்ந்துமைந்தன்
சுந்தரப்பணிசேயில்லும் சுகம்பெறவாழ்வாளாகும்
பிந்தியதுணைவள்கன்னி பிரபலசெல்வமற்பம். 225

அன்னையேகற்பின்மிக்காள் அடுத்தவர்க்கன்னமீவாள்
சொன்னமும்பணிதாராவும் சுகம்பெறலாபமாகும்

தன்னுடைத்துணைகளேழில் தரிப்பதுகன்னிநான்கும்
மன்னியகணவன்தன்னல் மகிழ்ச்சியையடைவாளாகும். 226

தந்தையின் முன்னோனுக்குத் தனமொடுசெய்யாலுண்டு
சுந்தரமனைவிமக்கள் சுற்றந்தார்மெத்தவுண்டு
பிந்தியமைந்தர்தன்னல் பிரபலச்சேயுமில்லும்
வந்தவன்தன்னல்யோகம் அனைவருந்தனவானென்றே. 227

## திசா பலன்

இந்நிலகுடும்பசெல்வம் இசைந்தனன் நவக்கோளாலே
நன்னயதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னனுத்திரட்டாதிமூன்றில் மகிழ்சனிசசியின்புத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளாய். 228

ஆரலுமருவுமன்னன் அன்னையுந்தந்தைநன்மை
சீர்பெருந்தந்தைதன்னல் சேயினல்பலன்களற்பம்
நேர்துணைவந்துதோன்றும் நேர்ந்திடிலவர்க்கரிஷ்டம்
தீரமும்வித்தைப்பீடை திதிபிறவர்க்கவேட்டல். 229

புந்தியுஞ்சிகியுஞ்சுன்னம் புகழுறுஞ்செய்வந்தெய்தும்
தந்தையின்துணைவராலே தந்திடுஞ்செல்வமுண்டாம்
பிந்தியதுணைவனுண்டாம் பிதிர்பிதிர்வர்க்ககண்டாம்
சுந்தரமலரிமாலோன் சுகம்பெறும்நாளைதன்னில். 230

தந்தையின்னடைவள்கண்டந் தந்திடும்பூமிலாபம்
முந்தியதுணைக்குநன்மை முகிழ்பிதுர்த்துணையால்நன்மை
நந்தியும்பணிசெய்யில்லும் நலம்பெருந்துணையால்நன்மை
செந்திருகடாக்ஷமுண்டாம் சேய்பெறுமன்னைதன்னல். 231

பணியொடுமன்னன்மைந்தன் பாத்தியம்சேயில்லாபம்
அணிபணியாடையுண்டாம் அலங்கிர்தநந்தியுண்டாம்
மணியெனுந்துணைக்குவேட்டல் மருவியகன்னியர்லே
அணிபிறக்கிரகம்வேருய் அருந்துணைசேயில்லாபம். 232

தந்தையின்துணைவிரோதம் தத்துவின்நன்மையாகும்
நந்தியும்பணிசெய்பாகம் நலம்பெறுஞ்சென்னலுண்டாம்
தன்துணைகணவனுலும் தந்தையின்துணையினலும்
வந்திடுங்கடகோணம் வளர்கன்னிவேட்டலுண்டாம். 233

சிகிதனில்முற்பாகத்தில் சீர்பெறுஞ்சுகங்களுண்டாம்
நகையொடுவெங்கலங்கள் நாணயஞ்செய்யலாபம்

இகல்பகைதுணையின்மைந்தர்க் கின்பமுமரிட்டமுண்டாம்
தொகையுறுமருவர்க்கத்தில் துன்பமுமரிஷ்டகண்டம். 234

அன்னைகேள்சிகிபிற்பாதில் அரும்பிதுர்தனக்கரிட்டம்
மன்னையுமரிஷ்டப்பீடை அழகியமகவுண்டாகும்
பொன்னெடுமணிநற்றூசும் புகழுறவில்லஞ்செய்வான்
நன்னியஅதிரஞ்செந்நெல் நலம்பெறுந்தனமுண்டாமே. 235

சுங்கனுமலரியாலோன் சுகம்பிதுரடைவன்கண்டம்
வெங்கலம்பணிதிசெம்பொன் வியப்பதாய்ச்செய்வந்தெய்தும்
இங்கிதபுதல்வன்மங்கை யிவர்களாலின்பமுண்டாம்
சங்கரன்அருள்வந்தெய்தும் சாற்றுவோமனையரிஷ்டம். 236

ஆரலுமரவுமன்னன் அற்புதச்செல்வமுண்டாம்
நேர்துணையொன்றுகண்டம் நிகழ்மைந்தன்தனக்குவேட்டல்
சீர்பெறுஞ்செய்வந்தெய்துஞ் சிறுபிதுர்வர்க்குக்கண்டம்
பேர்பெறும்பெரியோனாலே பெருஞ்செல்வமுண்டாமென்றே. 237

மந்தனும்புந்திகேது மகிழ்துணையொன்றுகண்டம்
சுந்தரதமகவும்வேட்டல் சுகம்பெறுஞ்செய்யலாபம்
மந்திரவைதிகங்கள் மாதுருக்கரிஷ்டகண்டம்
சுந்தரதனுவில்பீடை சுகம்பணியாடையுண்டாம். 238

அலரியின்முற்பாகத்தில் வரும்பிதுர்செய்வந்தெய்தும்
கலகமும்உற்றூர்கேடும் கடும்பகைதனமுநஷ்டம்
நலமுறுநந்தியாவு நற்பணிநலினற்றூசும்
பிலமுறவந்துவெய்துர் பெரும்பகைவந்தேதீரும். 239

அலரியின்பிற்பாகத்தில் அரும்பிதுர்வர்க்குக்கண்டம்
நலமிகும்பந்துவர்க்கம் நாட்டியமகவும்வேட்டல்
விலிதனக்கில்லும்செய்யும் வெண்டுகில்நந்தியெய்தும்
பலபலமனிதராலே பாக்கியம்பலவாலர்பம். 240

சந்திரன்ஆரல்ராகு சகலசம்பத்துமுண்டாம்
நந்தியும்பணிசேயில்லும் நலர்பெறவந்துதோன்றும்
சுந்தரமங்கைகண்டம் சுகமில்லைகன்னிகண்டம்
வந்திடும்வழக்கு வளர்மனைவிரையமாமே. 241

பணியொடுமன்னன்மைந்தன் பாக்கியம்செய்யாலாபம்
அணிபணியாடையுண்டாம் அலங்கிர்தநந்தியுண்டாம்
துணையொடுபுந்திகேது துக்கமுமகன்றுபோகும்
மணியெனும்சுங்கன்பானுள் மகிழ்சுதன்தன்னல்யோகம். 242

அன்னையேயாரல்தன்னில் அருந்துணையிளைத்துவாடும்
மன்னுஆவணியுள்திங்கள் மகிழ்துவா தசிதன்னில்
மன்னியசடம்விட்டாவி மகிழ்பிதுருலகஞ்சார்ந்து
பின்னையும்பூமிதன்னில் பிறந்திடும்வேளான்சேயாய். 243

இந்தநற்பலனையாங்க ளிசைந்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 244

ஆருவது ஜாதகம் முற்றிற்று.

---

ஏழாவது

# துலா லக்கினம்



| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | இராசி சக்கரம் | | |
| சந்திர செவ் குரு | | | |
| ராகு சனி | புதன் சுக்ரன் சூரியன் | லக் | |

சந்திரன்ஆரல்மன்னன் சகம்புகழ்கலையில்தேளில்
புந்தியும்அலரிசுங்கன் புகழ்தனுபணியுமந்தன்
விந்தையாய்வீணைகேது விளங்கிடத்துலாத்தில்சனனம்
வந்திடப்பிறந்தபாலன் வளம்பெறவுரைப்பேன்கேளே. 245

இந்தசேய்பிறந்தவீதி யியம்புவேன்வடக்கும்தெற்கு
அந்தஇல்சுணங்குவாசல் அதன்வடபாலில்சந்தாம்
சுந்தரன்வீணைகாரி சூழ்கன்னிதனுவிற்றேவம்
வந்திடுமரிட்பஞ்சாங்கம் வருஞ்சுழிக்காவாவென்றே. 246

இந்தநல்லடையாளங்கள் இலங்கியசித்தூர்தன்னில்
முந்துரைவேளாநின்ற வளர்சுதனுகும்இன்னேன்
முந்துநாள்செய்தவத்தின் முதிர்வினையின்னதென்று
வந்திடும்நவக்கோளாலே வரும்பலனுரைப்பேன்கேளே. 247

முன்னிவன்செனனம்செய்வை மொழிகுரேம்தெரியக்கேளாய்
பெண்ணையின்வடபாலுக்குப் பூம்பொழில்திருவாமூரில்
நன்னவக்கணக்கஞ்சேயாம் நன்மகவாகத்தோன்றி
அன்னையும்தந்தையொக்க அன்புறயிலக்கம்ஓர்நாள். 248

அந்தணன்ஒருவனுக்கு அருஞ்சுதரிரண்டுபேர்கள்
சிந்தையும்வேறதாகிச் செய்பணிபாகஞ்செய்ய

,, ந்தரக்கணக்கனுக்குச் சொல்லவுமிளையோன்கையில்
)ஞ்சையாலஞ்சம்வாங்கி விகாதமும்அதிகமாக்கி. 249

முந்தியமறையோன்பேரால் முறியொன்றுதீட்டிவிட்டான்
உன்னுடைப்பாகம்வேண்டில் உன்கையிலானல்வாங்கும்
என்னுடைமுறிபோல்வீதம் இவனையேயெதிர்த்துச்சொல்வாய்
உன்னுடைமனைவிமைந்தர் உதவுமோபிறகென்றேதி. 250

மறையவரிரண்டுபேரும் மனைவியால்வழக்குண்டாகிச்
சிறையதும்பணைசேயில்லும் செழுந்தனம்பாகஞ்செய்யக்
குறையினுல்எனக்குச்செப்பக் கொடுத்தபொன்னீவாயென்றுன்
மறையவன்மனந்தளர்ந்து மன்னிய அரசுசார்ந்தான் 251

இன்னவமுரைத்துவன்னேன் ஈந்திடுமுனியைக்கட்டி
மன்னவருறுதிகொண்டு மறையவன்றன்னைநோக்கிப்
பொன்னதையிவனுக்கீந்து பிறகுநின்பாகமெய்தும்
உன்னுடையூருக்கென்று உண்மையாய்விடைகொடுத்தார். 252

அந்தணன் அபயமென்று அள்ளிவாய்மண்ணைப்போட்டான்
இந்தவைத்திரித்தவீசா இதுமுதல்கணக்கனுக்குச்
சந்ததியிலச்சேயில்லம் சார்ந்திடா தலையவென்றும்
இந்தவாறுரைத்துச்சொந்த இடமதுச்சார்ந்தானென்றே. 253

அந்தணன்சாபத்தாலே அரும்பிணியாவிநின்று
அந்தகனிடத்திற்சார்ந்து அயன்கரத்திலக்கம்புக்கு
வந்தனன்நரகம்புக்கு வகையிலாதாவிநீத்து
வந்தவனிவனேயின்னேன் அறைந்தனன்பலனைக்கேளே. 254

முந்தியமறையோன்சாபம் மொய்குழல்பசுசேயில்லை
வந்திடும்பவத்தைநீக்க வளர்திருத்தணிக்குவெய்தி
சந்தனக்குழம்புதன்னல் சண்முகற்கபிஷேகித்துச்
சுந்தரப்பொன்னூலாடை சுகம்பெறவளித்தால்போமே. 255

முந்தியவினையுஞ்சொன்னேம் மொழிந்திடநிவர்த்திசொன்னேம்
தந்தையின்துணைகன்மூன்றில் ஆனேன்றுகன்னியொன்று
தன்துணைநவமதன்னுளாணிரண்டரிவையிரண்டில்
வந்தவன்கையீராகும் வளர்ச்சுதன்பலன்கேட்பாயே. 256

உன்னிதமிருசிவப்பு உயர்ந்திதூலமற்பம்
நன்னயமிருதுவாகும் நயப்புளான்சமைதிரேகம்
உன்னிதக்கல்வியொன்று வுரைப்பதுவற்பமாகும்
அன்னியன்தனக்குநேயன் புகலுவனற்பகோபி. 257

சுற்றத்தார்ஓர்க்கையுள்ளான் சுகமிகுபிற்பாகத்தில்
குற்றமுமகற்றிவாழ்வான் குறைவிலாயூகியாகும்
கற்றவர்நேயங்கொள்வான் காரியமறிந்துசொல்வான்
உற்றநற்றுணைவரோடு உயர்ச்சியவர்வாழ்நன்றே. 258

கைம்முதல்பின்னாலுண்டாம் கனத்தபேர்பனைசேயுண்டாம்
உய்வகைபூசிதன்னால் உயர்ச்சியும்பொருளுமுண்டாம்
பொய்யுறும்பிதாவின்மேலாம் புகழ்பெறக்கீர்த்தியுண்டாம்
அல்லலையகற்றுமெங்க ளாத்துமம்மதுவேசொல்லும் 259

பண்டுநாள்பூமியுண்டு பலபலதானியங்கள்
வண்டணிகுழலால்நேயன் வாஞ்சையுமெத்தவுண்டு
கண்டவள்தன்னைச்சேர்ந்து கமலமுஞ்சூலுண்டாகும்
கண்டிடும்பெரியோர்தன்மேல் கனவிசுவாசமுண்டாம் 260

மனத்தினில்கவடுவையான் மனிதரில்நல்லோர்க்கேதான்
இனத்தார்கள்வெகுபேருக்கு இன்பமுந்துடுக்கனாகும்
கனத்திடுந்தனத்தினாலே கண்டதும்மோகங்கொள்வான்
இனத்தவர்துணைவர்கட்கு இன்புறநாத்தவல்லான். 261

நந்தியும்பனைசெய்யில்லும் நற்பணிதுயில்தாராவும்
வந்திடும்நதியுஞ்சென்னல் வளர்துணைமூத்தார்நாளை
செந்திருகடாக்ஷமெய்தும் செம்பொன்னும்பணியுமுண்டாம்
தந்துணைதன்னால்யோகந் தனமுறுஞ்செய்யுண்டாமே. 262

அன்னியர்க்குதவிசெய்வான் அகதிகட்கன்புமுண்டு
பொன்னதுசேர்க்கையுண்டு பிதாவினால்பொருள்செய்யற்பம்
சொன்னசொற்பிசகிராது சொர்ணமுமதிகஞ்சேரும்
சென்னலும்இராசியேறும் செய்தொழில்பலிதமாமே. 263

கடனில்லையிடுக்கமில்லை காரியமறிந்துசெய்வான்
உடன்படான்பிழைகளொன்றும் உபாயங்களதற்குச்செய்வான்
விடவுரைபகர்வானுள்ளம் வெகுளிபோலெவர்க்குமெய்து
மடவரல்போகங்கொள்ளான் மனமதுயிரக்கவானே. 264

அன்னியவொருவர்சொத்து வற்பமாய்வந்துயெய்தும்
பொன்னெடுபணிதிசேர்க்கப் புரிகுவன்பொய்கள்சொல்லி
நன்னியசொல்கள்மிக்கான் நல்லவர்பெரியோர்நேயன்
முன்னுறுந்துணையாள்நேயன் முதவியில்செல்வமுண்டாம். 265

தந்தையின்தந்தைநாளில் தனமொடுசெய்யிலுண்டாம்
தந்தைநாள்பிற்பாகத்தில் தனமொடுசேயில்லம்பா

6

வந்திடும்விபகாரத்தால் வளமெலாமழிந்துபோகும்
சுந்தரன்பிறந்தபின்னால் சுகமுறவற்பமென்றே. 266

முந்தியகன் னிரெண்டில் மூத்தவள்சேயில்லாமல்
தந்தனம்பணிகள்பாதி தடவறவிவனுக்கீவாள்
பிந்தியகன்னியாண்பால் பெற்றவள்கணவன்தன்னால்
வந்திடும்பணிதாராவும் வளம்பெறவுண்டாமென்றே. 267

அன்னவள்மைந்தனுக்கு வன்புறவற்பயேவாள்
முன்னுறுந்துணைவனுக்கு முதிர்தனம்செய்யுமில்லும்
நண்ணியபணிதாராவும் நல்கிடுமனையாளாலும்
பின்னுறுந்துணையாளாலும் பிலமுறும்குடும்பமென்றே. 268

அன்னையும்புத்திசாலி அன்புடனன்னமீவாள்
சொன்னமும்பணிதாராவும் சுகமுறுங்கணவனாலே
தன்துணையீரேழென்றால் தரித்திடும்நவமாறைந்துள்
மன்னிடும்ஆண்பால்மூன்று மகிழுங்கன் னிரெண்டாம். 269

## திசா பலன்

இந்நிலகுடும்பசெல்வம் மிசைந்தன நவக்கோளாலே
நண்ணியதிசாபலத்தில் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னுமூத்திராடமூன்றில் மகிழ்கதிர்பிற்பாகத்தில்
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 270

அலரியின்பிற்பாகத்தில் அன்னையுந்தந்தைநன்மை
குலமதில்நஷ்டபீடை கொடுமையும்விவகாரங்கள்
நலமுறும்மதியுமாரல் நற்பணிபுத்திதன்னில்
குலவியதந்தைக்கின்பம் குறைதலும்துணைவந்தீயும். 271

மன்னவன்மந்தன்புத்தி மகிழ்துணைவந்துநஷ்டம்
தன்னுடைவர்க்கர்க்கரிஷ்டம் தந்தையுந்தனுவரிஷ்டம்
அன்னியன்தன்னால்வேதை வழகுறவித்தையோதல்
நண்ணியசெய்யலாபம் நலமதுவற்பமாமே. 272

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலஞ்செய்யலாபம்
நகையேர்டுவெங்கலங்கள் நல்வினையோர்க்குக்கண்டம்
பகையொடுகலகமுண்டாம் பாக்கியமற்பமாகும்
அகமதில்அற்பபீடை ஆரலின்முற்பாகத்தில். 273

முன்னுறும்துணைக்குவேட்டல் முதிர்பிதுர்வாய்வால்பீடை
தன்னிறுவுருக்களிஷ்டம் தனமில்லைசெய்யலாபம்.

பின்னுறும்பிற்பாகத்தில் பேருளம்நிலம்விட்டேகல்
தன்னுடையதுணைக்குவேட்டல் தன்னுடைப்பாட்டன்கண்டம்.

அணிபணிஆடையற்பம் அருந்துணைஅடைவான்கண்டம்
பணியொடுமன்னன்மைந்தன் பருந்துணைதனக்குவேட்டல்
கணிதமாய்மாதுர்வர்க்கம் கனபணிசுபமுண்டாகும்
பிணியதுபிதுர்வர்க்கத்தில் பெருஞ்சுபசுபங்களுண்டாம். 275

புந்தியுஞ்சிகியுஞ்சுன்னம் பொருளுறும்துணைகள்தன்னல்
வந்திடுஞ்சுபங்களுண்டாம் வளரிளமதற்குநாங்கள்
சுந்தரமங்கைதன்னல் சுகம்பெறுமணங்களுண்டாம்
இங்கிதமனையாள்தன்னல் எய்திடுமற்பபூமி. 276

தன்னுடைத்துணையாள்கன்னி தானத்திலீண்டிமூத்தாள்
அன்னவன்தன்னல்கோபம் அடைந்திடும்சிலதுநாளில்
பொன்னெடுமணியும்தூசும் புகழுறுஞ்சுபமுண்டாகும்
அன்னையுமற்பபீடை அருந்துணைதனக்கரிஷ்டம். 277

அலரியும்மாலோன்ஆரல் அற்பமாய்ச்செய்வந்தெய்தும்
நலமிகுங்கீர்த்தியுண்டாம் நற்றுணைதனக்குமைந்தன்
பிலமுறவந்துதோன்றும் பெருமனைதனக்கரிஷ்டம்
கலகமுமற்பமுண்டாம் காரிகைதன்னல்யோகம். 278

மன்னவன்மந்தபுத்தி மக்களுஞ்சம்பத்துண்டாம்
நண்ணியவில்லமுண்டாம் நந்திநற்றூசுமுண்டாம்
பொன்னெடுபணியுமுண்டாம் பெருமனையரிஷ்டகண்டம்
மன்னியசிகிசுன்பானுள் மாரகமடைவாம்பிள்ளை. 279

சந்திரனரல்ராகு சகலரும்புகழவாழ்வான்
சுந்தரன்றுணைக்குக்கண்டம் சுதனுக்குவித்தையோதல்
மந்திரதந்திரங்கள் மனையவள்அரிஷ்டகண்டம்
நந்தியும்பணிநற்றூசும் நற்பலன்வேட்டலுண்டாம். 280

மந்தனும்புந்திகேது மகிழ்துணையரிவர்கண்டம்
மந்தனுக்கின்பவேட்டல் மங்கையர்தனக்குமைந்தர்
வந்திடும்நிதிகளுண்டாம் வளம்பெறும்வர்க்கங்களாலும்
சுந்தரவில்லஞ்செய்து சுகமுறும்புதல்வனலே. 281

சுங்கனுமலரிமாலோன் சுகங்களைமகவுக்கீவான்
பங்கொடுபனைமால்செல்வம் பலித்திடும்புதல்வருண்டாம்
இங்கிததந்தைமேலா இடம்பொருள்ஏவல்முற்றும்
சங்கரனருளால்செல்வம் சார்ந்திடுங்காலந்தன்னில். 282

அன்னமேஆடித்திங்கள் அருந்துவாதசிதன்னில்
மன்னியகிராணிதன்னால் மகிழ்சடமிளைத்துவாடும்
தன்னுடைஆவிநீற்றுத் தன்சச்சிமனதாஞ்சார்ந்து
பின்னையும்பூமியுற்றுப் பிரபலசைவனவன். 283

இந்தநற்பலனையாங்கள் இசைந்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 284

ஏழாவது ஜாதகம் முற்றிற்று.

---

எட்டாவது

# விருச்சிக லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | சனி புதன் சுக்ரன் | | ராகு |
| | இராசி | சக்கரம் | சந்திர செவ்வா |
| | | | |
| கேது | லக் குரு | | |

சந்திரன்ஆரல்ஞண்டில் சனிபுதன்சுங்கன்மேடம்
சுந்தரமன்னன்தேளில் சூழ்சிகிதனுவில்நிற்க
வந்திடும்பணியும்வீணை வலகதிர்மீனமேவ
இந்தவார்நவக்கோள்நின்று இலக்கினம்தேளிலுற்றால். 285

அன்னமேபாலன்வீதி அறைகிறோம்கிழக்குமேற்கு
மன்னிடும்வடக்குவாசல் மகிழ்ந்தொருபாலிலுண்டாம்
அந்நிலம்கட்டுகோப்பு அதன்குடக்கதனில்சூழி
நன்னியாகணையில்மாயன் தலமுற்றுமேற்கேகாரி. 286

சத்தியும்தெய்வமென்று ஜெகம்புகழானேமீனம்
முத்தியையருளுமீசன் முதித்திடும்சித்தர்தன்னில்
பத்தியில்மிகுத்தவேளான் பாலகன்பகருமுன்னோன்
முத்தியின்முன்னாள்செய்கை முயர்வினையுரைப்பன்மாதே. 287

முன்னவனிருந்தசென்மம் மொழிகுவேன்கேளுமம்மா
பொன்னியின்தென்பாலாகப் புகழ்பெறுந்திருவந்தன்னில்
மன்னியவேளானுக்கு மகவெனவந்துதோன்றிப்
பொன்னெடுமனைவிமைந்தர் புரவிமேன்மாடியில்லம். 288

அந்நகர்தனக்குபின்னோன் அரசதுசெலுத்திவாழ்நாள்
பொன்னதால்பலவியாபாரம் பெருக்கதனால்செய்யலாடம்

தன்னினத்தவர்க்குமேலாய்த் தனியனாய்வாழும்நாளில்
கன்னியால்கலகம்வந்து கதையதைக்கழறுவேனே. 289

தன்னுடைமாமனீன்ற தையல்தாயாரைக்கேட்டுப்
பொன்னையும்பணிதியீந்து புகழ்பெறும்நாளும்வைத்தார்
அன்னவனழகைக்கண்டு வணந்திடமனத்திலுன்னி
கன்னிகைகளவுசெய்து காளைகூடாரம்ஞ்வைத்தான். 290

அன்னவள்போகம்வேண்டி அர்த்தராத்திரியில்சென்று
கன்னியைப்புணர்ந்துவின்பம் கண்டுபின்னில்லஞ்சேர்வான்
தன்னுடன்மாமன்மாமி தையலைத்தேடிக்காணார்
இன்னணஞ்செய்தாரோவென்று இரங்குநாளந்தநாளில். 291

பொன்னதைப்பணிதியீந்து புகழ்பெறும்வேளான்வந்து
கன்னியின்தந்தைதாய்க்குக் கழறிடக்கன்னிதன்னை
இந்நகர்தன்னில்யாரோ இருட்டினில்களவுசெய்தான்
அன்னவன்தனைவிசாரித் தரும்பொருள்தருவேனென்றான். 292

இவனுரைகேட்டன்னோர்கள் இசைந்திலார்மறியல்செய்தார்
அவ்வுரையிவனுங்கேட்டு அறைகுவார்நன்றேமாதே
ஒவ்வியமுமக்கேயீந்தோம் உறன்முறையாருங்காண
இவ்விதிதனக்கேயாங்கள் எய்திடும்கருமம்யாதோ. 293

என்றுமேகனிந்துகூவம் இரிதியுமவர்க்குநஷ்டம்
சின்முனையாளைச்சீறிச் செல்கனமொட்டிவிட்டான்
மனதுயரகன்றடைந்தான் மனமதுதவிழ்ந்ததாலே
சினத்துமேமுன்னர்க்கோதி செய்யலாதடைந்தானில்லம். 294

கன்னியுங்கருவுண்டானாள் கருவதையழிக்கச்சொன்னான்
அன்னையில்தன்னுற்றுன்பம் அடைந்ததுமெத்தவுண்டு
பின்னையுமவனைச்சேர்ந்து பெருஞ்சிகவர்க்கத்தோடு
அன்னவன்தன்னைச்சூழ்ந்து அரும்பிணிதன்னால்மாய்ந்தான். 295

சண்டனாருலகிற்சார்ந்து சாற்றுநாள்நறகரைந்து
முண்டகத்துறவோன்கையால் முதிர்விதியமைத்துவிட்டான்
கண்டெனும்மொழியினாளே காணவுமிவனாமின்னோன்
பண்டுசெய்பாவத்தாலே பாலகனிவன்கேளம்மா. 296

இந்தநற்சின்னாள்தன்னில் இணங்கிடுகுற்றங்களும்
சுந்தரமனைவிமைந்தர் சுகங்களைச்சோர்வுசெய்யும்
வந்திடும்பவத்தைநீக்கி வளம்பெறவேண்டுமானால்
வந்திடும்வன்னிதென்புல் வாஞ்சயமதனிற்சென்று. 297

அன்னமேகேளின் திங்கள் ஆதியின்வாரம்தன்னில்
சென்னியாருடையானுக்குச் சிறப்புடனபிஷேகித்து
மன்னியவெள்ளியாலே மதனைபோல்பலமுமொன்றாய்
நன்னயமாகச்செய்து நான்மறைகன்னிக்கீயே. 298

அந்தணர்நூறுபேர்க்கு அன்னமுமன்பாய்ச்செய்தால்
முந்தியபாவம்நீங்கும் உதித்தசேய்தீர்க்கமாகும்
சுந்தரமனைவிதீர்க்கம் சுகமுறுந்தந்தையாலும்
முந்தியதமையனாலும் உறுதியாய்ச்சுகமுண்டாமே. 299

அன்னைகேள்தந்தைதமூன்றில் ஆனதிற்றலைவன்தந்தை
தன்னுடைத்துணை நவத்து ளாணிரண்டரிவைமூன்றில்
முன்னுறுங்கன்னியொன்று ஊழ்வினைக்கின்னுள்மாயம்
மன்னியதந்தைதன்னால் மகிழ்பணிசெய்யுமுண்டாம். 300

இன்னிவள்குடும்பத்தோர்க்கே யியம்பிடக்கேளுமம்மா
உன்னிதவிருசிகப்பு உயர்ந்திடான்றாலமல்ல
நன்னயமிருதுவாகும் நயப்புளான்சமைத்திரேகம்
உன்னதக்கல்வியொன்றில் உரைப்பதில்சமர்த்தனாவான். 301

வித்தையுமற்பமாகும் வீண்வார்த்தைவம்பில்செல்லான்
புத்தியில்பெரியோர்நேயன் புகலுவனற்பகோபி
சுற்றத்தார்சேர்க்கையுள்ளான் சுகமிகுகுடும்பமாகும்
உற்றநற்றுணைவரோடும் உயர்ச்சியாய்வாழ்வாய்நன்றே. 302

சொல்லிடும்வசனமேலாம் சுத்தமாஞ்சொகுசுணுண்டான்
வெல்லுவனெதிரிதன்னை வீண்வழக்கோரஞ்சொல்வன்
அல்லலேயுடையாநல்ல யாவர்க்கும்நல்லோனாகும்
வல்லினன்றாதிநன்பால் விவேகவானிவனென்றோதே. 303

கைம்முதல்பிதாவாலுண்டாம் கணித்தநற்பணிசெய்யுண்டாம்
பொய்சொல்லான்பிதாவின் மேலாம்புகழ்பெறக்கீர்த்தியுண்டாம்
அல்லலையகற்றுமெங்கள் ஆத்துமத்தாலேசொல்லும்
வல்லவன்பலனையின்னம் வகுத்திடக்கேட்டிடாயே. 304

பண்டுநாள்பூமியுண்டு பலனுறுந்தானியங்கள்
வண்டணிகுழலாள்நேயன் வாஞ்சையுமெத்தவுண்டு
விண்டிடும்வேலைகேட்க வேண்டியமனிதருண்டு
கண்டிடும்பெரியோர்தன்மேல் கனவிசுவாசமுண்டே. 305

மனத்தினிற்கவடுவையான் மடவரைநல்லோர்க்கேதான்
இனத்தோர்களிவன்குணத்தை யியம்புவர்விவேகனென்று

கனத்திருவஸ்த நாளில் கண்டதுமோகங்கொள்வான்
இனத்தவர் துணைவர்கட்கு இவன்வெகுயோகவானே. 306

நந்தியும்பணைசேயில்லும் நற்பயர் அடில்திராவும்
வந்திடும்நிதியுஞ்சென்னல் வளமிகுதந்தையாலே
செந்திருகடாக்ஷமெய்தும் சேமநன்நிதியுமுண்டாம்
தந்தைமேற்பிரியனுவான் ஆணிரண்டரிவைமூன்றே. 307

அன்னைமேல்பிரியமுள்ளான் அன்னமும்பரிவாயீவான்
பொன்னெடுமுதலுண்டாகும் புதையலும்பூமிவைப்பான்
தன்னினத்தவர்க்குமேலாய்த் தணிகனாய்வாழ்வான்தந்தை
அன்னவன்கிருபையாலே அயிஸ்வரியமிவனுக்குண்டாம். 308

தந்தையின்சேயில்லாது தமையனல்பூமிகொள்வான்
வந்திடுமதனுலின்பம் வளமதுமெத்தவுண்டாம்
சுந்தரன்கட்டில்மெத்தை சுகம்பெறமனுபவிப்பான்
தந்தையர் இல்லஞ்செய்வான் தனமொடுவண்டியுண்டாம். 309

தந்தையின்புகழைக்கேளு தமமொடுசேயுமில்லும்
வந்திடும்பணிதிராவும் வளம்பெறுநந்தியாவும்
சுந்தரன்தன்னுல்போகம் சுகம்பெறவனுபவிப்பன்
சிந்தையிலெண்ணம்போலே செய்வதையறிந்துசெய்வான். 310

தன்னினத்தவர்க்குநல்லோன் தயவுளன்குணவானுகும்
பொன்னெடுபணிசேர்க்கை புரிகுவன்பொய்கள்சொல்லான்
நன்னயமின்சொல்மிக்கான் நல்லவர்பெரியோர்நேயன்
சொன்னசொல்பிசகான் நாவால் சொற்சோர்வுமுரைத்திடானே.

அன்னவனிருசிவப்பு அளவுறும்சமைத்திரேகம்
சொன்னமும் இவனுலுண்டு சொற்சோர்வுநாவிராது
உன்னதபுராணநூலின் உண்மையுமலக்கந்தேர்வான்
அன்னமும்சொகுசுநுண்பான் அரசனுக்குரியோனுமே. 312

அன்னியர்க்குதவிசெய்வான் அகதிகட்கன்புமுண்டு
பொன்னதுசேர்க்கையுண்டு பிதாநாளில்பொருளுமற்பம்
சொன்னசொற்பிசகிராது தொடுத்திடும்கருமம்வெல்வான்
சென்னலுமிராசிசேரும் செய்தொழில்பலிதமாகும். 313

கடன்கொளான் இடுக்கம்வந்து காரியமறிந்துசெய்வான்
உடன்படான்பிழைகளொன்று உபாயங்களதற்குச்சொல்வான்
விடவிரைப்பகரானுள்ளம் வெகுளிபோலெவர்க்குந்தோற்றும்
மடவரல்போகங்கொள்வான் மனமதுவிரக்கவானே. 314

வித்தையில்புராண நூலில் விவேகத்தாலுணர்ச்சியுள்ளான்
புத்தியில்ஞானந்தன்னைப் புகலுவன்குணவானாகும்
வெத்தியாந்தொடுவழக்கு விபகாரநேர்மையோர்வான்
உற்றநற்றுணைவருக்கும் உறுதியாய்ச்சேயிலீவான். 315

சொல்லிடும்வசனமேலாம் சுத்தமாம்வினோதமாகும்
வெல்லுவன்எதிரிதன்னை வீண்வழக்கோரஞ்சொல்லான்
அல்லலையுடையாநல்லன் யாவர்க்குநல்லோனாகும்
தொல்லையுமுன்னுலற்பந் தொலைந்திடுமருநாளென்றே. 316

அரனடித்தன்பர்தன்னை அர்ச்சித்துஅன்னமீவாள்
நரபதிசபையிற்சென்றால் நாவிலன்னங்கொள்வான்
விரவதாயூகத்தாலே வேண்டியவழக்கைவெல்வான்
அரசர்கள்மெச்சவாழ்வான் அரசனால்தயவுள்ளானே. 317

தந்தையின்புகழைச்சொன்னோம் தன்துணைமூத்தோனுக்குச்
சுந்தரமனைவிமைந்தர் சுகம்பெறுஞ்செய்யாலாபம்
வந்திடுங்கன்னிமூன்று வளம்பெறக்கணவனோடும்
சுந்தரமாகவாழ்வாள் சுகமுறும்புதல்வருண்டாம். 318

அன்னையுங்கற்பின்மிக்காள் வழகுளானன்னமீவான்
சொன்னமும்பணிநற்றாசும் சுகம்பெறுந்தந்தைதன்னால்
மன்னியமைந்தராலே மகிழ்ச்சியுஞ்செல்வமுண்டாம்
தன்னுடைத்துணையேழைந்துள் ஆணிரண்டரிவைமூன்றே. 319

## திசா பலன்

இந்நிலக்குடும்பச்செல்வம் இசைந்தனநவக்கோளாலே
நன்னியதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னியபூசம்நான்கில் மைந்தனில்அரவுபுத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 320

பணியொடுமன்னன்தன்னில் பருந்தந்தையன்னைநன்மை
பிணியருஞ்சிறியதந்தை பெரும்பகைசெய்வானுசம்
மணியெனச்சென்னலுண்டாம் மாதுலவர்க்கப்பீடை
துணிவுடன்வந்துநேரும் தொடுத்திடவின்னங்கேளே. 321

புந்தியுஞ்சிகியுஞ்சுன்றும் புகழுறும்வித்தையுண்டாம்
வந்திடுவர்க்கர்க்கரிஷ்டம் வளங்களுஞ்செய்யாலாபம்
தன்துணைதனக்குண்டாகும் தானியம்விர்த்தியுண்டாம்
தன்துணைதனக்கரிஷ்டம் தார்வொடுபணிதிகூடும். 322

அலரியனுலோனுரல் அற்புதச்செல்வமுண்டாம்
பலமதுஅற்பமுண்டாம் பலித்தவாண் தனக்குவேட்டல்
நலமுறும்வர்க்கவேட்டல் நற்பணிநளினதூசும்
பிலமுறுந்தந்தைதன்னைப் பெருங்கண்டஞ் சிலவுண்டாமே. 323

தந்தையின்துணைவன்கண்டம் தையலாள்பாகம்வேரும்
பிந்தியதந்தையாலே பெரும்பகைவந்துசேரும்
மைந்தரும்மக்களோடு மருபிருந்துணைவர் நன்மை
தந்தையால்வழக்கையெல்லாந் தனியருதலினுல்வெல்வான். 324

பணியொடுமன்னன்மைந்தன் பருந்துணைதனக்குவுந்தன்
அணிபணியாள்களாகவும் அமர்ந்திடும்வழக்குத்தீரும்
துணைவொடுதுணைக்குவேட்டல் துக்கமுமகன்றுபோகும்
மணிபொன்னுந்துணைக்குமைந்தர் மகிழ்தந்தைவாழ்வால்பீடை.

மைந்தனுக்கரிஷ்டபீடை மகிழ்கன்னிமங்கலங்கள்
சுந்தரசிகிமுற்பாகம் சுகமுறும்தலவாசங்கள்
வந்திடும்பணிதாராவும் வளம்பெறுநந்திதூசும்
தந்தையினரிஷ்டப்பீடை தாயவள்தனக்கரிஷ்டம். 326

அன்னமேதீர்த்தவாசம் அரும்பணிசெய்யாலாபம்
மன்னரால்நன்மையுண்டாம் மங்களந்தனக்குவேட்டல்
தன்னகர்தனக்குளாங்கர் தாரமும்வந்துசேரும்
பொன்னுறுஞ்சென்னல்தன்னுல் புதையலும்பின்னுலுண்டாம்.

மன்னியபிற்பாகத்தில் மாதுலவர்க்குக்கண்டம்
கன்னியும்பெறுவாள்பிள்ளை கனம்பெறுந்தந்தைவாயல்
அன்னியதலமுந்தீர்த்தம் அடைந்திடுஞ்செலவுண்டாகும்
அன்னமேஅமரர்லோக மடைகுவன்தந்தையென்றே. 328

சுங்கனுமலரிமாலோன் சுகமுறும்புதல்வர்கன்னி
இங்கிதமாகவெய்தும் எழிலுள்ளபூமிசேரும்
பங்கதுபாகமாகப் பகருவன்பலவாய்லாபம்
தங்கையாலரிஷ்டந்தந்தை தன்துணையருக்குக்கண்டம். 329

ஆரலுமரவோன்மன்னன் அற்புதச்செல்வமுண்டாம்
பேர்பெறுந்துணைவன்மூத்தோன் பிலமுறப்பாகமீவான்
சீர்பெறுமனைவிமக்கள் செம்பொன்னும்நந்தியாவும்
கார்பொழிசேயின்னுலுங் கனதனமுண்டாமென்றே. 330

மைந்தனுக்கினியவேட்டல் மகிழ்கன்னிதனக்குவேட்டல்
மைந்தனும்புந்திகேது மக்களால்செல்வமுண்டாம்

தந்துணை தனக்கரிஷ்டம் தாய்க்குலமடையுங்கண்டம்
செந்திருகடாக்ஷத்தாலே சேயில்லும்பலமாச்செய்வான். 331

அலரியில்தந்தைவர்க்கம் அடைந்திடுமவர்க்குக்கண்டம்
நலமிகுபுதல்வன்கண்டம் நற்றுணைவென்றுகண்டம்
கலகமுமதிகமாகும் கனதனச்செலவுண்டாமே
பிலமுறும்பிற்பாகத்தில் பிரபலதுணையரிஷ்டம். 332

தன்தனுவர்க்கில்பீடை தையலாள்தனக்கரிஷ்டம்
சுந்தரனல்ராகு சுகந்தரும்வர்க்கரிஷ்டம்
சுந்தரசுபங்களுண்டாம் சுகமுறுமைந்தனலே
தந்தையின்னருளால்செய்யால் தனமதுவுண்டாமென்றே. 333

மன்னனும்மைந்தன்புந்தி மரிவிடுமரிஷ்டகண்டம்
சென்னியாருடையான்தன்னல் சீக்கிரமகலவேண்டும்
மன்னியபுதல்வன்தன்னல் மகிழ்ச்சியையடைவான்தந்தை
முன்னுறுந்தமையன்கண்டம் முதித்தசேயரிஷ்டமாமே. 334

ஆரலின்திசையதன்னில் வற்புதசெல்வமுண்டாம்
பேர்பெறுங்கீர்த்தியுண்டாம் பேருளபுதல்வன்றன்னல்
சீர்பெறும்பிற்பாகத்தில் சிறுமணிதனக்குண்டாகும்
கோரமாய்வாய்வால்திரேகம் குறுகிடுமனையவர்க்கும். 335

அன்னமேபிற்பாகத்தில் ஆவணித்திங்கள்தன்னில்
நன்னுகவாய்வாலிந்த நற்சுதன்சடம்விட்டாவி
பின்னுறும்பிதுர்வாழ்லோகம் புகழுறுமிருந்துபூமி
தன்னிலேவணிகன்சேயாய்த்தனுவது மெடுப்பானென்றே. 336

இந்தநற்பலனையாங்கள் இசைந்தனநவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழிந்தால்
சுந்தரசேயனுக்குச் சொல்லிடும்பலன்களாகும்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 337

எட்டாவது ஜாதகம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

# தனுசு லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| | | | ராகு சனி |
| | இராசி சக்கரம் | | சுக்ரன் |
| சந்திர | | | புதன் சூரியன் |
| லக்கின கேது | | குரு | செவ் |

சந்திரன்மானில்சுங்கன் சார்பெருங்கடகமேவப்
புந்தியும்மலரிசிங்கம் புகர்குருதுலேயில்மேறும்
மந்தனும்பணியும்வீணே மகிழ்தனுசிகியுங்கன்னி
சுந்தரஆரல்நின்று சுதன்தனுவுதிப்பானுகில். 338

## 9-வது தனுசு லக்கினம்

(வசனம்) குரு - சனி - மகரத்தில் - சூரியன்-சுக்கிரன்-ராகு கும்பத்தில் செவ்வாய் - புதன் - கடகத்தில் - கேது கன்னியில் சந்திரன்.

இந்தசேய்பிறந்தவீதி யியம்புவேன்கிழக்குமேற்கு
அந்தவில்தெற்குவாசல் அதன்குணக்கதனில்சந்தாம்
வந்திடும்புலியிலீசன் வளர்துலேசத்தியில்லிற்
சுந்தரசூழிகாரி சூழ்காரிமேடஞ்சத்தி. 339

இந்தநல்லடையாளங்கள் இலங்கியசித்தூர்தன்னில்
சுந்தரக்குலத்துவேளான் சூழ்தவக்சேயாமின்னேன்
வந்தவனென்னுட்செய்கை வருஞ்செயலின்னதென்று
சுந்தரநவக்கோளாலே சொல்லியபலனேக்கேளாய். 340

முன்னிவன்செனனந்தன்னே மொழிகிறேந்தெரியக்கேளாய்
சென்னியாருடையான்வைகும் திகழ்யெட்டிபதியதன்னில்

நன்னிதிமறையோனுக்கு நற்றவப்பலனுமின்னேன்
தன்னினத்தவர்க்குமேலாய்த் தணிகனுய்வாழும்நாளில். 341

நன்மறையொழுக்கந்தேருல் நடக்குநாள்விவேகமுற்றுத்
தன்மனைதனயர்சுற்றந் தழைத்திட நிதிகைமேலாய்ச்
சொன்மருந்துணையாநேயன் சூஸ்திரனொருவனேடு
பொன்மிகுவியாபாரங்கள் பொருந்தவேசெய்யும்நாளில். 342

அந்நகர்குலத்துதித்தோர் அவமாதுதனதுசேய்க்கு
நன்னயமானபூநூல் நகரதிபிறவுதன்பார்
பொன்னவரன்பாய்க்கேட்க பொருந்தியும்தனக்குநொந்து
இன்னவன் தனையழைத்து இம்மொழிபகரும்போது. 343

(வேறு விருத்தம்)

பொன்னதனைக்கேட்டவர்க்குமிவன்தனக்கும்
பொருந்தாதுகருமமதைமனத்துட்கொண்டு
அன்னவட்குஈயாதவசனங்கூற
அறிந்துகொண்டுவம்மாதுவாக்கிற்புக்குத்
தன்னுடையசுதன்தனையும்கையிற்பற்றித்
தடையன்றிபிவன்முன்னும்சார்ந்துநின்று
என்னகுறைசெய்தனுனக்கென்றன்சேய்க்கு
இடைஞ்சல்செய்யநீநொந்தாயென்றுகூறி. 344

மன்னவன்தன்னுட்குறையையறிந்துகூறப்
பார்ப்பணியையனுசரிக்கப்பத்திகையால்
நின்றவனினுடல்நோகபுடைக்கமாது
நீணிலத்தில்விழுந்தெழுந்துவாய்விட்டாற்றி
இன்றெனதுமகவுமணமுடிப்பதற்கு
இடரழித்தாயினிப்பிறவியெய்துந்தோறும்
நன்றியமகவின்றிப்பிணியுண்டாகி
நன்மனைவிசுகமடைவாளென்றுசென்ருள். 345

அம்மாதுகற்புடையாளிட்டசாபம்
அடைந்துபன்னுன்நறைகுறைந்துவதனைநீக்கி
வெம்மாதுக்கணவனுமேகருத்தாதிஷ்டி
விடவந்தானிவனேவிளம்பக்கேளு
தம்பிடையறியாததோஷத்தாலே
தாழ்ந்தகுலந்தனிலுதித்தாயேசொல்லும்

செம்மாதுமுகத்துடையான்முன்னுள்செய்த
தீங்குநுடைசெய்யும்வகைசெப்புவோமே. 346

மணிவிசெய்யும்துணை தானுமரிஷ்டங்காட்டும்
வரநிதியுங்குணமுண்டாமாதேசொல்லு
தனியரையுந்தீர்வதற்கு விபரம்பாங்கள்
சாற்றுகிறேமணம்புரிந்துதேவியோடு
இனியபவமகற்றுகின்றகேதுக்கேகி
இன்பமுறக்கடலாடிமெளியோனுகக்
கனியுடையதந்தையிலாச்சேயொன்றுக்குக்
களிப்புறவேபொன்பூனூல்கருத்தாயீந்து 347

தனத்தினிலடைந்துசும்மாதரொன்பான்
தையலருக்குபசரித்துத்தைலமீந்து
மனங்களிக்கவமுதளித்துக்கந்தமீந்து
வருந்தியவரடிபோற்றிவருமாண்டொன்று
தினமானகோயிலுக்குத்தீர்த்தத்தாலே
சிறக்கவொருதீபம்வைத்துத்தெரிசித்தேத்திச்
சினமறந்தபுண்ணியர்கள்நலத்தினோர்க்கும்
சிந்தையுறவமுதளித்தால்தீரும்பாரே. 348

பவமகலும்பிறவிகெடுஞ்சுதனுண்டாகும்
பவனபெருவன்ருதீரும்பகையில்லாது
குவலயத்திலெல்லோர்க்கும்நல்லோனுகும்
குலமாதுசெழித்திருப்பள்மோக்ஷமுண்டு
நலமுடையபெரியோர்கள்தயவினுலும்
தார்புனையுமரசனதுதயவினுலும்
நலமாகப்பலபூமியிவனுலெய்தும்
நற்றனமும்பணிசெய்யும்நலமுண்டாமே. 349

கைம்முதலுண்டாகுமரணங்கொள்வான்
கனம்பெரியகுடும்பமதுபெரியதாகும்
செயமுபசைவருங்காலமறிந்துசெய்வான்
செப்புமொழிதப்பாதுசெய்கைகுன்ருன்
மைவிழியார்பலமாதரின்பந்தன்னில்
மையல்கொள்வான்நவற்குகைமாறுவையான்பாரு
உய்யல்தாழும்மகருமற்பமுண்டு 350
ஒருவரையும்பொல்லாங்கொன்றுரைத்திடானே.

(வேறு விருத்தம்)

முந்தியபவத்தைச்சொன்னோ மொழிந்திடவிபரஞ்சொன்னோம்
வந்திவன்குடும்பச்செய்கை வழுத்திடக்கேளுமின்னம்
தந்தையின் துணைநலத்துள் ஆண் நாலுகன்னிரெண்டு
தந்துணையெட்டில்தீர்க்கம் ஆண்மூன்றுகன்னியொன்றே. 351

அன்னவனிருசிவப்பு வளவிலாச்சமைதிரேகம்
சொன்னமுமிவனுலுண்டு சொற்சோர்வுநாவுருது
உன்னதபுராணநூலின் உண்மையுமிலக்கந்தேர்வான்
அன்னமுஞ்சொகுசூனுண்பா னருந்துணைவிரோதியாமே. 352

அன்னியர்க்குதவிசெய்வான் அகதிகட்கன்புபூண்டு
பொன்னதுசேர்க்கையாகும் பிதுர்நாளில்பூமியற்பம்
சொன்னசொல்பிசகிராது தொடுத்திடுங்கருமம்வெல்வன்
சென்னலின்ராசிசேரும் செய்தொழில்பலனிதாமே. 353

கடன்கொடான் இடுக்கம்வந்து காரியமறிந்துசெய்வான்
உடன்படான்பிழைக்கோளொன்றுமுபாயங்களதற்குச்செய்வான்
விடவுரைபகரானுள்ளம் வெகுளிபோலெவர்க்குந்தோற்றும்
மடவரலனமேயெங்கள் மனமிவன்பிரீதியுள்ளான். 354

வாலிபஞ்செல்வஞ்சேரும் வளர்ந்திடுஞ்செய்யாலாபம்
பாலுரைத்தினமுமேவு பழவகைப்புளியிலிச்சை
யேலுளமாதர்க்கெல்லா மிவனிடம்பிரியமுண்டாம்
போவெனுமொழியால்செய்ய பாக்கியவானுமாவான். 355

அன்னைசொல்கடவனுவன் அன்புறுங்கனிஷ்டரிரண்டாம்
நன்னயவசனமுள்ளான் நாவலர்க்கிதம்யீவான்
மன்னியதமிழ்வேதாந்தம் மருவின்பமனதுரைப்பான்
பொன்னிறம்வருளபூசை புரிவனமனத்திலம்மா. 356

வித்தையின்புராணநூலில் விவேகத்திலுயர்ச்சியுள்ளான்
புத்தியில்ஞாலந்தன்னைப் புகலுவான்குணவானுகும்
சுற்றத்தார்சுகிக்கவாழ்வன் சுகமிகுகுடும்பமாகும்
உத்தமன் துணைவர்கட்கு வுண்மையாயுபசரிப்பான். 357

சொல்லிடும்வசனமெல்லாஞ் சுத்தமாம்விநோதமாகும்
வெல்லுவன்எதிரிதன்னை வழக்கோரமிவனுஞ்சொல்வான்
பலகவியுடையனுவான் யாவர்க்குநல்லோனுகும்
தொல்லையுமுன்னுலற்பம் தொலைந்திடுமிவனுரென்றே. 358

அடிமையோகுடிகளுண்டு ஆவொடுநந்திசெய்யும்
திடமதாயில்லுந்தூசு திருவொடுபணியுஞ்செம்பொன்
தடமதில்வைப்புமுண்டு கூட்டமாம்பிதுர்வர்க்கங்கள்
திடமதாய்வெவ்வேருகத் திருக்கறவாழ்வானென்றே. 359

தந்தைநாள்பூமியற்பம் தன்குணம்தரித்திராது
சிந்தையின்கவடிலாதான் செப்பியமொழிகுன்ருது
மைந்தர்மேல்பிரிதியுள்ளான் மனத்தினில்கவலையுள்ளோன்
விந்தையாயரசர்பக்கல் வியப்பினையறியவல்லான். 360

அடிமையுங்குடிகள்செய்யும் மாவொடுபணிதிசேரும்
திடமுறவில்வழுண்டாம் தீர்க்கஞ்சேயற்பமுண்டு
வடுவழிகன்னியென்று வளம்பெறத்தீர்க்கமாகும்
கொடுமைகள்மெத்தவுண்டு கொடுப்பது அற்பமாமே. 361

தானியம்விர்த்தியுண்டு தனமுரும்பலவியாபாரம்
ஆனதன்னுறவுகொள்ளான் எவர்க்களுக்குரைத்தபோதும்
பாலனம்பகர்தலற்பம் தைரியவசனனுகும்
தானமும்வித்தையற்பம் கணக்கில்யூகவானே. 362

தந்தையும்புத்திசாலி தயவுளான்எவர்க்குநல்லோன்
சிந்தையிற்கபடுமுண்டு செப்பியமொழிகுன்ருது
விந்தையாய்ப்பலவியாபாரம் வியப்பினையறியவல்லான்
சந்ததிதன்னுல்யோகம் சாம்பிராச்சியயோகவானே. 363

தன்னிடதுணைகள்மூன்று தனமொடுமனைவிமக்கள்
அன்னமும்பணிதாராவும் அழகியசெய்யுமில்லும்
அன்னவர்வேறுவேரு யழகுறவாழ்வானுதும்
கன்னிகளிரண்டுபேரும் கணவனுல்சுகமுண்டாமே. 364

அன்னையும்புத்திசாலி அன்புறஅன்னமீவாள்
சொன்னமும்பணிதாராவும் சுகம்பெறுங்கணவனுலே
தன்னுடைத்துணையேழைந்துள் ஆண்ஒன்றுகன்னிரெண்டு
அன்னவர்செல்வங்குன்றி யரும்பொருளற்பமாமே. 365

## திசா பலன்

இன்னலங்குடும்பச்செல்வ மிசைந்தனம்நவக்கோளாலே
நன்னியதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னியவோணம்ரெண்டில் மதிதனில்மன்னன்புத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்மாதே. 366

மன்னனும்மந்தன்புத்தி மாதொடுந்தந்தைநன்மை
நன்னயதந்தைவர்க்கம் நலம்பெறுஞ்சுபமுண்டாகும்
தன்னினத்தவர்களாலே தடையுறுந்துணையுண்டாகும்
மன்னியசிகிசுன்பானுள் மகிழ்தந்தை அன்னைகண்டம். 367

தந்தையின்துணைக்குநன்மை தாயதுகுலமுந்தீது
சுந்தரசெய்யலாபம் சுகமிகுங்குடும்பந்தன்னில்
வந்திடும்நன்மைசேயாம் நலம்பெறும்பூமிலாபம்
விந்தையாம்வழக்குண்டாகும் வித்தையுமுண்டாம்பாரே. 368

மங்களன்திசையதனில் மகிழ்தந்தைதனக்குமைந்தர்
இங்கிதசெய்யலாபம் இசைந்திடுந்துணையுண்டாகும்
தங்கள்தம்வர்க்கரிஷ்டம் தாய்குலமரிஷ்டப்பீடை
பங்கமும்கண்டுபின்னால் பலனுறுமில்லந்தன்னால். 369

பணியொடுமன்னன்மைந்தன் பாக்கியஞ்செய்யலாபம்
அணிபெறுவில்லஞ்செய்யால் அணுகியவழக்குத்தீரும்
பணியுறமாமன்கண்டம் பருந்தனங்கொடுக்கல்வாங்கல்
கணிதமாய்த்தொகையுண்டாகும் கனவழக்கற்பமுண்டாம். 370

தன்னிலேகடககோணம் தகித்திடும்மனத்தோன்மாதே
உன்னதப்பணிகளீந்து உயர்மணஞ்செய்வானாகும்
சொன்னமும்சென்னல்தன்னால் சுகம்பெறும்பலவிதத்தால்
மன்னிடுஞ்செல்வனாகும் மக்களால்பலனுண்டாமே. 371

புந்தியுஞ்சிகியுஞ்சுன்னும் புகழுறுந்துணைக்குவேட்டல்
தன்துணைவிரோதமுண்டாம் தந்தையால்நன்மையாகும்
தந்தையின்வர்க்கந்தீது தாயிடவர்க்கம்பீடை
செந்திருகடாக்ஷமுண்டாஞ் சிறுவனாவந்துதோன்றும். 372

முந்தியவினையொழித்தால் உதித்தசேய்தீர்க்கமாகும்
சுந்தரவலரியாளோன் சுகமிகுமாரல்தன்னில்
தன்துணைவிரோதமாகும் தந்தையால்பாகம்வேரும்
பிந்தியதுணைவரொன்று பிலமுறுஞ்சேர்ந்துவாழ்வான். 373

தந்தையின்பற்பங்கண்டம் தாய்தனக்கரிஷ்டபீடை
முந்தியதுணைவர்க்கங்கள் மொழிந்தனசுபாசுபங்கள்
வந்திடும்நிதிக்குச்செய்யும் வளமுறவாங்கிச்சேர்ப்பான்
மைந்தனும்வந்துதிக்கும் மகிழ்பவமுன்னாலேகும். 374

மன்னனும்மைந்தன்புந்தி மகிழ்ச்சியையடைவன்செய்யால்
சொன்னமுமதிகமுண்டாம் சொற்பமாய்நஷ்டமுண்டாம்

அன்னியர்பகையுண்டாகும் ஆவொடுபணிதிதூசும்
நன்னயப்புதல்வருண்டாம் நற்கதையரிஷ்டமுண்டாம். 375

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயம்பலவியாபாரம்
தொகையதாய்த்தனமுண்டாகும் துணைதனக்கின்பமைந்தில்
வகையதாய்வந்துதோன்றும் வளர்துணையரிஷ்டகண்டம். 376

சந்திரன்ஆரல்ராகு சகலசம்பத்துமுண்டாம்
மைந்தர்கள்தனக்குவேட்டல் மாதவர்தமக்குவின்பம்
சுந்தரவன்னைவாய்வால் சுகமிலாதரிஷ்டகண்டம்
தந்தையின்வர்க்ககண்டம் தையலாள்தனக்குக்கண்டம். 377

மந்தனும்புந்திகேது மக்களால்சம்பத்துண்டாம்
செந்திருகடாக்ஷமுண்டாம் சிறுவனால்சகடமுண்டாம்
சொந்தமாமனைவிபீடை சுகமுறுஞ்செய்யாலாபம்
வந்திடுமொருவன்செய்யால் வளமுறுநிதிக்குக்கொள்வான். 378

சுங்கனுமலரியாளோன் சுகமிகுமைந்தன்தன்னால்
அங்கதில்விவகாரத்தால் அற்பமாய்நஷ்டமுண்டாம்
மங்கையும்ஒன்றுநஷ்டம் மங்களசுபமுண்டாகும்
தங்கியநிதிகையோடு தானதுவாழ்வானுமே. 379

ஆரலுமரவுமன்னன் அற்புதச்செல்வமுண்டாம்
பேர்பெறக்கீர்த்தியுண்டாம் பேரனும்வந்துதோன்றும்
நேர்துணையொன்றுநஷ்டம் நீத்திதியிவனைச்சேரும்
வார்பெறும்புந்திகேது வளமிலைதேகவாதை. 380

தன்னுடைப்பொருளையெல்லாம் தனயனுக்களிப்பானுகும்
அன்னமும்வெறுப்புத்தோன்றும் ஆடியும்நவமிகூடில்
மன்னியசடம்விட்டாவி மகிழ்பிதுருலகஞ்சென்று
பின்னையும்பூமியுற்றுப் பெருமறைக்குலத்துதிப்பான். 381

இந்தநற்பலனையாங்கள் இசைத்தனம்நவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 382

ஒன்பதாம் ஜாதகம் முற்றிற்று.

---

பத்தாவது

# மகர லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | இராசி | | ராகு |
| லக்கின | சக்கரம் | | சந்திர |
| | | புதன் செவ்வா சுக்ரன் | சூரியன் குரு கேது |

சந்திரன்புவியில்நிற்கச் சனியவன்மீனம்பத்த
புந்திமாரல்சுங்கன் புகழ்துலை அலரிமன்னன்
விந்தையாய்க்கன்னிகேது விளங்குமன்பணியும்நண்டில்
இந்தவாறுநவக்கோள்நின்று இலக்கினமகரமுற்ருல். 383

வீதியுங்கிழக்குமேற்கு விளங்கிடும்தெற்குவாசல்
ஓதுவோம்ஒருபால்வீடு உயரில்லங்கூரையென்ப
சீதளச்சூழிமேல்பால் சிருநனிமாயன்மானில்
காதலால்கார்யசித்தி கதித்தமீன்யானையென்றே. 384

இவ்வகையடையாளங்கள் இலங்கியசித்தூர்தன்னில்
முந்துசெய்தவத்துவேளான் உதவியப்புதல்வனின்னேன்
முந்துசெய்தவத்தின்செய்கை முதிர்வினையின்னதென்று
வந்திடும்நவக்கோளாலே வரும்பலனுரைப்பேன்மாதே. 385

கன்னியாகுமரித்தென்பால் காவலாற்றூதைதன்னில்
மன்னியவேளானுக்கு மகவதாய்பிறந்துதோன்றி
நன்னயவன்னைதந்தை நன்மனைமக்கள்சேயும்
பொன்னெடுபரியான்ரேளி புகழுறுமாடியில்லம். 386

இன்னவன்வாழுநாளில் யிவனதுவிளையஅன்னை
உன்னிதப்பணிதியொன்றே யுரிதினையிவன்கையீந்து

தன்னுடைநகரஞ்சார்ந்து தானதைக்கொள்ளைகொண்டான்
நின்னிவைதெரிந்துமாது வெழிற்பணிவாங்கவந்தாள். 387

வந்திவன் தன்னைநோக்கி வந்திடும்பணிகேட்கத்
தந்தென்னையதனுல்வென்றி தானுளவேக்கங்கூட்டித்
தந்திரஉபாயங்கற்றுச் சண்டாளனெவனோவந்து
அந்தரமாகியில்ல தரும்பொருள்கவர்ந்துபோனான். 388

இன்றுகைக்கேவாதில் யில்லையென்றிழுக்கஞ்சொல்லேல்
கன்றெனுமொழியாள்கேட்கக் கதறியேயழுதுவிம்மி
நின்றுவாயரற்றவிம்மி இவனெடுஞாயமேறி
வெற்றிபெற்றிடுவேனென்று வீண்பலவசைகள்சொன்னாள். 389

ஆங்கதைமைந்தன்கேட்டு ஆக்கரித்தெழுந்திருந்து
சீங்கலிகட்டைகொண்டு திடுக்கிடப்புடைத்தானந்த
மாங்குயில்மொழியாள்மேனி வருத்தமுற்றிடவழிந்தி
தீங்கறக்கற்பின்மிக்காள் செப்பியமொழியைக்கேளே. 390

உன்னிடம்வைத்துவைத்த வுயர்நிதிபணியைக்கேட்க
உன்னையும்வருத்தங்கொள்ள இவ்விதம்புடைத்தாய்பாவி
மன்னியபிறவிதோறும் வாங்காதமணியனுகி
நின்னிலந்தன்னில்நன்மை மடிந்தமாம்காலமீவார். 391

மரிப்பனென்றுரைத்தமாது வாசமாதன்னெறுத்தான்
முருப்பெருங்கற்பின்மிக்கா ளுரைசாபமிவனைச்சூழ்ந்து
குருப்புறகாசநோவு கண்டந்தச்சடலம்நீங்கித்
தருப்பெரும்நரகம்புக்குத் தான்திரைப்பலனும்போக்கி. 392

அயன்வரிலக்கம்புக்கு அவனியிற்பெருமையாக
நயமுறும்வேளான்செய்ய நற்றவபலன்கட்கம்மா
செயம்பெறவந்துசேயும் செப்புவோம்இவன்பலத்தை
வயம்பெறும்புகழுங்கீர்த்தி வண்மையுமுரைப்பேன்கேளே. 393

முன்னுறுஞ்சாபம்நீங்க மொழிகுரேம்சிதம்பரத்தில்
பன்னகமணிந்தானுக்குப் பண்புடனர்ச்சித்தேத்திப்
பொன்னம்பலமொன்றுலே புகழ்வித்தனமுஞ்செய்து
நன்னயமாகச்சாற்றி நான்மறைக்கன்னமீய்வே. 394

முந்தியபவங்கள்நீக்கும் மொழிகுவோம்குடும்பச்செய்கை
தந்தையின்துணைகள்மூன்று தனயனின்பிதாவும்ஒன்று
தந்துணைநவத்திற்தீர்க்கம் ஆணென்றுகன்னியொன்று
தந்தைதாய்சுகங்களற்றும் தந்தையின்துணையால்நன்மை. 395

வந்தவனிருசிவப்பு வளர்த்தியில்சமதிரேகம்
சுந்தரவடிவனுகுஞ் சுற்றத்தார்மெத்தவுண்டு
தந்தைதாயோகமற்பந் தாய்குலம்விர்த்தியில்லை
தந்தையாயில்லுஞ்சேயுந் தானியந்தனமுண்டாமே. 396

விந்தையுமொன்றுதீர்க்கம் விநோதமாய்உரைப்பான்வார்த்தை
சத்தியவசனனாகும் சஞ்சலம்புத்தியில்லான்
புத்தியுமதிகமுண்டு புகழெங்குங்கீர்த்தியுண்டு
வைத்தியாந்தொடுவழக்கு வெகுநிதிபின்னுண்டாமே. 397

வாலிபந்தன்னில்வேறு மாதரைப்போகஞ்செய்வான்
பாலுளபசுக்கள்நந்தி பலித்திடும்செப்பாலையும்
ஏருளதந்தைநாளே யெழில்பெருஞ்செல்வமுண்டாம்
சீலனுமிவனுள்தன்னில் செய்யினுற்பொருளுண்டாமே. 298

நல்லவன்நல்லவர்க்கும் லண்டற்குமிண்டனவன்
புல்லர்க்குவிரோதியாவான் புகழ்பூமிதன்னுற்செல்வம்
சொல்லுவன்வனிதைகூடும் சொற்சோர்வுபிசகுசொல்வான்
மல்லுரைதமக்குஅஞ்சான் மாற்ருனையெதிர்த்துவெல்வான். 399

பணையொடுஏர்பெருக்கம் பாக்கியம்பகற்பிகாடி
யிணைசுகம்சயனமெத்தை யிகலுறுபணிதிகூடும்
பணைதுயல்புதையலுண்டாம் பொருந்தியசெய்யாலாபம்
இணைமுகல்மாதுராலே யெழிலனஞ்சாஸ்தியுண்டே. 400

## வேறு விருத்தம்

பூமியல்லால்வேறுதொழிலிவனுக்கில்லை
புண்ணியனும்பிறந்தபிள்ளைபூமிசேரும்
காரியத்தில்வெகுவாகமுயற்சிசெய்வான்
கனமானகாரையினுலில்லமுண்டாம்
நேமியிலேமானிடரும்நேயமுண்டாம்
நெஞ்சிரக்கமுடையனுமாம்மீதலுண்டு
ஆமிவனுக்கற்பகண்டமணுகிடாது
மணுகுவதுமேகமொன்றுமணுகும்பாரே. 401

நிதிபணிகள்வண்டியொடுசெய்யுமாவும்
நிலையானதானியங்க ளதனுலாபம்
நதிகள்பலசிவஸ்தலமும்வசித்துப்போற்றி
நல்லடியார்மறைவோர்க்குமன்பனுகும்

பதியானசிவஸ்தலமும்வணங்கிக்கொள்வான்
பாராளும்மன்னவனுற்பலனுண்டாகும்
சதியெவர்க்குஞ்செய்யாதநேசனுதும்
சாஸ்திரமும்புராணமதைச்சாருநெஞ்சம். 402

## வேறு விருத்தம்

அந்தணரும்அரசன்யோகி யரும்பொருளுள்ளோரெல்லாம்
சுந்தரன்தன்னைக்கண்டால் சுகம்பெறவுபசரிப்பான்
சிந்தனைப்படியேயெய்தும் செய்தொழில்தனைமுடிப்பன்
சுந்தரமணியைப்போலே சூழ்சபைஞாயந்தேர்வான். 403

## வேறு விருத்தம்

அற்பர்தமையுறவுகொள்ளானிவனேயாகும்
அரசரதுவுதவியினுலதிகயோகம்
நெற்பொதியும்வண்டி யொடுபுதிதானில்லம்
நகையுனதுதாரையெனநிரைகாணுது
நற்பதியும்வண்டியொடுகீர்த்தியுண்டு
நெடுநாளும்மவியசிறுநோயுமுண்டு
நிற்பகவிருக்ஷமொடுபொழலுமற்பம்
நீள்வரையும்தருமநிலைநிலைக்கும்பாரே. 404

அகதிகட்குஅன்னமீவான்நேமமுண்டு
நற்பதத்தைசேராதாஞன்மைகூருன்
தர்மமுஞ்செய்யிடமறிந்துசெலவுசெய்வான்
தான்யங்கள்ராசியுண்டுதளர்வெய்தாது
வெகுகபடன்வேலைதனில்லேவலாளா
விரும்பியிரப்பவர்க்குவியப்பாகச்செய்வன்
சொகுசூணன்தித்திப்புபுளிப்பிலதியிச்சை
சுகமனையாளன்றிபிறமாதுண்டாமே. 405

## வேறு விருத்தம்

பலபலவியாபாரங்கள் பலிப்பதுசெய்யலாபம்
நலமுறும்செய்கையாது நடத்துவன்வம்பிற்செல்லான்
குலமகன்றத்தாலாபம் குறைவற்றசெல்வமுண்டாம்
நலமுறுசெய்யால்நந்தி நற்றூசுசெய்யாலுண்டாம். 406

மித்திரர்தம்மைச்சார்ந்து விவேகமுந்தெரிந்துகொள்வான்
புத்திரவாஞ்சைமிக்கான் புகழ்தயவுடையான்தந்தை

தந்தையர்க்கன்பனுவன் தாயாதிபலமாய்வாழ்வன்
சித்தமுங்கீர்த்தியொப்பான் சிவனடிக்கன்பனுமே. 407

தன்னுடையினத்தாருக்குத் தனிகனுய்வாழ்வானும்
பொன்னெடுமணியுஞ்சேர்ப்பான் புகழதுமிகவுங்கொள்வான்
நன்னயச்செய்யலாபம் நம்பினர்க்குதவிசெய்வான்
மன்னமுமன்பாயீவன் வருந்தனமிகவுண்டாமே. 408

வண்டியும்நந்தியுண்டு வழக்கதுவற்பமுண்டு
தெண்டமுமற்பமுண்டு திரவியஞ்செய்யலாபம்
கண்டவர்க்கீதலுண்டு கடன்கொளான்முதலுமுண்டு
அண்டினபேருக்கெல்லா மருநிதிசேர்ப்பானென்றே. 409

தந்தையின்முன்னேன்செய்கை தராதலம்புகழவாழ்வான்
சந்ததிமிகவேயுண்டு சாஸ்திரபுராணமோர்வன்
செந்திருகடாக்ஷமுள்ளோன் செய்யினுல்செல்வம்பெற்றேன்
தந்தைக்குஅவனுற்செய்யும் தனமொடுவளிக்கப்பெற்றேன். 410

இன்னெருதந்தையுண்டு இன்பமுமடைதலற்பம்
பொன்னெடுபொருளுமுண்டு புகழ்பெரியோர்க்குநேயன்
அன்னியர்க்குதவிசெய்வான் அருந்துணைபகைவிரோதம்
நன்னயமைந்தனற்ப னருந்துணைமைந்தன்சேயாம். 411

அன்னையுங்கற்பின்மிக்காள் வழகுளான்அன்னமீவான்
மன்னியகணவனேடு மருவியும்பலமாய்வாழ்வாள்
தன்னுடைத்துணைகள்ஏழில் ஆணிரண்டரிவைமூன்று
தன்னுடைமைந்தர்தீர்க்கம் ஆணென்றுகன்னியொன்றே. 412

## திசா பலன்

இன்னலங்குடும்பச்செய்கை யிசைந்தனம்நவக்கோளாலே
நன்னியதிசாபலத்தின் நயந்தனையுரைக்கக்கேளாய்
மன்னியபூரம்ரெண்டில் மகிழ்சுங்கன்அறவின்புத்தி
தன்னிலேயுதித்தசேயின் தவத்தினையுரைப்பேன்கேளே. 413

பணியொடுமன்னன்மைந்தன் பருஅன்னைதந்தைநன்மை
பிணியதுவற்பமுண்டாம் பெருஞ்செல்வம்பிதுர்வாலெய்தும்
அணிபணியாடையுண்டாம் வலங்கிர்தநந்தியுண்டாம்
மணியொடுவெங்கலங்கள் மருவியவர்க்கவேட்டல். 414

புந்தியுஞ்சிகியதன்னில் புகழுறவித்தையோதல்
நந்தியுமாவுமுண்டாம் நற்றனஞ்சென்னலுண்டாம்

பின்துணைகன்னியுண்டாம் பிதுர்வுக்குப்பீடையுண்டாம்
முந்தியதுணைவர்க்கத்தில் முதிர்சுபசுபங்களுண்டாம். 415

அலரியின்முற்பாகத்தில் அன்னையுமடைவாள்கண்டம்
நலமிலைசெய்யாலாபம் நற்பிதுரடைவன்கண்டம்
குலமதிலுற்றோர்கேடு கொம்பனால்தனக்குப்பீடை
நலமுறும்பெரியதந்தை நன்னயமாமனாலும். 416

சுந்தரன்தனக்குச்செல்வம் சூழ்ந்திடவுபசரிப்பான்
பிந்தியவருளிதன்னால் பெருஞ்செல்வஞ்செய்யாலெய்தும்
வந்திடும்வழக்குசண்டை வலுவிலைவிரையமுண்டாம்
முந்தியபிதுர்வால்யோகம் முயற்சியையடைவனாகும். 417

சந்திரன்ஆரல்ராகு சார்குருமங்கைசொத்து
சொந்தமாய்முதலுமீந்து சுகமதையனுபவிப்பான்
தந்தனம்பெரிதாயீவான் தாய்துணைதனக்குவேட்டல்
சொந்தமாய்பரியுங்காடி சுகம்பெறச்சேகரிப்பான். 418

சந்திரனாரல்ராகு சாற்றுவோம்ஞாங்கள்கன்னி
தன்னுடையினத்தோர்க்கன்றித் தனிமணஞ்செய்வானாகும்
அன்னவன்வந்துபின்னால் அணிபணியாடையாலும்
சொன்னமும்பணிநற்றாசும் சுகமுறுஞ்செய்யாலாபம். 419

மன்னவன்மைந்தன்புந்தி மகிழ்புதன்ஒன்றுண்டாகும்
முன்னுறும்பவத்தைநீக்கி முதித்தசேய்தீர்க்கமாகும்
கன்னியுந்தீர்க்கமுண்டு கனத்தசேய்பின்னாலுண்டாம்
நன்னயசெல்வஞ்செய்யால் நற்பொருள்வரத்துண்டாமே. 420

சிகியொடுசுன்னும்பானுள் சிவதலந்தீர்த்தவாசம்
நகையொடுவெங்கலங்கள் நாணயம்நந்திகாடி
பகையினைத்துணைக்குவேட்டல் பணியொடுவர்க்கம்வேட்டல்
இகலுறுமற்பபீடை யேழையாள்சுதனும்பீடை. 421

தந்தையின்துணையரிட்டந் தையலாள்தனக்குப்பீடை
வந்தராவின்முற்பாகம் வளர்பிதுர்துணைவன்கண்டம்
சுந்தரத்துணைவர்க்கங்கள் சுகமுறுஞ்செய்வந்தெய்தும்
மைந்தரும்வந்துதிக்கும் மலினமாய்வழக்குண்டாமே. 422

தந்தியபாகந்தன்னில் பெரும்பரிசேயுண்டாகும்
மந்தனுமொன்றுநஷ்டம் மருவிடுந்தந்தைபீடை
செந்திருகடாக்ஷமுண்டாம் சேயினாற்பலனுண்டாமே
நந்தியும்பரியுந்தூசும் நற்பணியுண்டாமென்றே. 423

பனியொடுமன்னன்மைந்தன் பாக்கியந்தந்தைகண்டம்
அணிபணியாடையாவும் அலங்கிர்தசேயிலுண்டாம்
மணியொடுவெங்கலங்கள் மருவிடுமங்கைபீடை
கணிதமாம்தொகையுஞ்சென்னல் கனபொருளுண்டாமென்றே.

புந்தியுஞ்சிகியுஞ்சுன்னும் புகழொடுகீர்த்தியுண்டாம்
சுந்தரமனைவியுண்டாம் சுகமுறுமதிகலாபம்
தன்துணைவர்க்கமைந்தர் தந்திடுஞ்செய்யாலாபம்
வந்திடுமொருவன்செய்யில் வாங்குவன்விலக்குவம்மா. 425

அலரியின்மாலோனுரல் அற்புதச்செல்வமுண்டாம்
நலமுறும்மைந்தன்வேட்டல் நற்றனஞ்சென்னலாபம்
பிலமுறும்பலவியாபாரம் பெருந்தொகைசெய்யாலாபம்
கலகமும்மற்பநஷ்டம் காரிகைதனக்குப்பீடை. 426

மன்னவன்மைந்தன்புத்தி மக்களால்சம்பத்துண்டாம்
நன்னயவில்லந்தன்னில் நற்பரிநந்திநாடி
சொன்னமுஞ்சென்னலுண்டாம் சுகமுறும்பெரியோனுலே
நன்னயசிகிசுன்பானுள் நற்பலனுண்டாமென்றே. 427

மைந்தனுலதிகயோகம் மக்களுஞ்சம்பத்துண்டாம்
செந்திருகடாக்ஷத்தாலே ஜெயம்பெறநினைத்தவெல்லாம்
வந்திடும்வாழ்வுண்டாகும் வணிகனுற்றெண்டமுண்டாம்
தந்தனங்கொடுக்கல்வாங்கல் தனிகனும்வாழ்வானென்றே. 428

சந்திரன்ஆரல்ராகு சகலரும்புகழவாழ்வான்
தந்தனுவரிஷ்டபீடை தையலாள்தனக்கரிஷ்டம்
மந்திரதந்திரங்கள் மைந்தனுலதிகயோகம்
தந்தையின்யோகமேலாய்த் தனிகனுய்வாழ்வான்மைந்தன். 429

மைந்தனின்சடத்தில்ரோகம் மருவிடுமாடித்திங்கள்
இந்துரைநவமிதிதியில் இச்சடமர்விநீத்து
இந்திரலோகமெய்தி யின்பமுமடைந்துசின்றுள்
பந்தமாய்ப்பூமியுற்றுப் பருமறைக்குலத்துதிப்பன். 430

இந்தநற்பலனையாங்க ளிசைந்தன்னவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிப்பமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெல்லாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 431

பத்தாவது ஜாதகம் முற்றிற்று.

---

பதினொன்ருவது

# கும்ப லக்கினம்

—∘∘⁂∘∘—

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| லக்கின | இராசி | | குரு |
| | சக்கரம் | | செவ் சூரியன் புதன் |
| | சந்திர சனி | சுக்ரன் கேது | |

சந்திரன்மந்தன்தேளில் சார்ந்திடமேடராகு
புந்தியுமலரியாரல் புகழ்சீயங்கடகமன்னன்
விந்தையாஞ்செட்டிதன்னில் வாழ்சுங்கன்சிகியுநிற்க
வந்திடச்சாடிதன்னில் வளர்சுதனுதிப்பாறுகில். 432

சுந்தரனுதித்தவீதி சொல்லுவோஞ்சூரியவாஸ்து
வந்தவிற்கிருபால்வீடு வடக்கிலந்தெற்குவாயில்
சுந்தரன்முகத்துமாரி தரித்திடுங்கோயில்ஞாங்கள்
தெந்திரகுற்றகோயில் இருப்பதுமிடனந்தானே. 433

மானதைக்காத்தான்கோயில் வடபாலில்தன்றென்பொய்கை
பானிவைமரைத்தேன்கோயிற் படைராசிபகரலாகும்
மீனலக்கினத்தின்பின்னுல் இருந்திடுந்துர்க்கைகோயில்
ஆனதிநந்தியூசி யமர்குளம்பள்ளிவாசல். 434

கன்னியிலுடையவாவி கரும்புவில்லுடையானுனைக்
கன்னியிற்கன்னிராசி கயமுகன்கோயிலுத்தம்
முன்னிதவளக்காசாறு முயர்நதியுள்ளவேழும்
தன்னிலேயடையாளங்கள் தன்னிலம்பிறந்தானென்னே. 435

## வேறு விருத்தம்

சனனமுன் னிவனிருந்த செல்வத்துண்மை
சாற்றுகிறேமதன் விவரந்தாமேயிந்தச்
சனன மெடுத்தனுபவிக்கும் பாலரூழைத்
தானகற்றிவினையொழிக்கத் தரணிதன்னில்
சனனமுன்னுள்பழநிமலைக் குடபாற்பாடிச்
சம்பாரிகுலமறையோ னெனுவன்றுன்பச்
சனனமறத்தவமகவா யுதித்துவென்று
தன்மையறமலையனத்துந் தனியேயோதி. 436

தந்தைமொழிக்கிடருரையா துள்ளன்போடும்
தளவிரண்டுசேய்களோடு தழுவும்போக
தந்தைபலநன்றிமறு பாறியீன்றாய்
தானெனுவுமுளத்துறுதி தவறுனியாரும்
தந்தையன்னையெனவொழுக்கந் தவறுவாஞ்சை
சற்குணமுமினிக்கொள்ளுஞ் சருவசீவ
தந்தைநுகற்கண்ணளவாற் பொடிபட்டாலோ
தனுதனக்குமிவனழகுந் தனைக்கண்டேங்க. 437

அளகர்நிதிபெருகாமுப் பணைகளோங்கி
வயசுவரியமளகேசந் தன்னைப்போலே
யளக்கநிரையரியாத செல்வஞ்செய்ய
வகிலமதிற்பிரபுவனென் றியாருங்கூற
மளக்கறவமதிசூடி யுலகையேந்தும்
மலனிருகஞ்சரணநித மடையஞானம்
மளக்கமதியுடையவனு மாயவன்றாள்
மறவாமல்பூஜைசெய்து வருகக்கேளே. 438

மன்றல்புரிமாதினையா டனக்குநங்கை
மாதொருவின்மதிவதன மமிசப்பேறு
மன்றலுரைகேசமதாலே டாதவில்லு
வாரீசநரையறிந்து வண்டுநோக்கு
மன்றறியாசரணமடைய மனத்திலின்பம்
மவளங்கிபேருடையான் தஞ்சைமஞ்சு
மன்றல்துயவாருமிவ் வடக்குமீடுமாகத்
தாளசலனிவனுடைங் கானமோகம். 439

## வேறு விருத்தம்

மங்கலனுனெனக்கிடுவ திவனேயன்றி
மற்றதேவர்க்குமுன்மதியேன் மறுப்பாராயின்
மங்கலங்கைநாவியெதிர் விளங்கலொற்ற
வாரெருநுமெனகடில மதிப்பிராதே
மங்கலனன்மணிபெறினும் ரூபமிக்கான்
மகிழ்நர்முயத்தணையுகிலேன் வருந்தியீன்ருய்
மங்கலுருமதியுரைத்தேன் னவாறவனீர்க்க
மனமகிழ்ந்துவிடைகொடுக்க மாதேநீபோய். 440

## வேறு விருத்தம்

வந்தனைசெய்திவையுரைத்தே னென்றன்ருய்க்கு
வருத்தமுறவகையருளி மகிழ்ந்தேன்பாலில்
வந்தெனையேயென்கவலை மாகும்நீயான்
வணங்குகுலதெய்வமென வணங்கிக்காக்க
வந்தனையேயெனவெனக்கு வருமவர்க்கு
வாரிசத்தில்வருகதியும் நின்னுமவைப்பேன்
வந்தனையைப்போலவாவென் பாங்கிநீயும்
மனதிரங்கியிவைமுடிப்பா மாதேயென்று. 441

மதிமயக்கத்துடையனுக்கு வுபசாரச்சொல்
வணங்கியனைக்கருதனுப் பவந்தாளாச்சு
மதிமயக்கத்தோடுமவள்பால் வைக்கச்செங்கை
வாய்புதற்றுத்தெண்டனிட்டு மகடான்கூறு
மதிமயக்கத்துரையனத்து வளங்கக்கேட்டு
மருத்தெவையும்பகராளாய் மாதையாரோ
மதிமயக்கஞ்செய்தனனென் றுள்ளத்தெண்ணி
வந்தவக்கொழுந்துதனை மடியிலேற்றி. 442

செங்கனிவாய்முத்தமிட்டு வணைத்துக்கஞ்சி
திருவினையாலீன்றவொரு செல்விநீயச்
செங்கனிவாய்ச்செட்டியொடு வுரைத்தசெய்தி
சிகத்திலும்நற்குலத்துதித்தார்க் கேச்சாமேற்றச்
செங்கனிவாயுண்டதனுட் குணமுருவாடேறல்
திடமூன்றசமுரைத்தமர வவனிசெய்கை
செங்கனிவாய்க்குருகாத செய்கையொப்பான்
செப்பினவையிப்படியே சேர்க்குமானே. 443

எந்தனையுமிவையுரைக்க வவையுட்கொள்ளாற்
திருமருத்துக்கூறுவனிவ் வையத்தார்கட்
கெந்தனையும்லபியென்ப தியற்கையாறு
லெழில்மறையும்பொய்யாதே யிங்குநல்லோர்
கொன்றனையுங்கதியுடதேன் றில்லையென்று
மிருவசனங்கூறுவதே யெந்தாய் நின்னை
யென்றனையென்னுள்ள மருவாதிருக்கமுன்னு
விச்சென்மம்வந்தவகை யியம்பக்கேளு. 444

## வேறு-விருத்தம்

ஆயிரங்கொடுமையொன்றாய் மைத்தனங்கன்னியோரு
ராயிரம்பொய்யான்முகை யமைக்குவர்வையுமூவா
ராயிரங்களவுகொண்டா றணகிலன்புணரவன்ற
மாயிரங்குலைகளொன்றில் மங்கலமாவாரென்று. 445

பேசுவதுண்மைவேதப் பெற்றிவையறிந்தநல்லோர்
பேசுவதுண்மையல்ல பிறர்களால்பிதற்றுவார்கேள்
பூசுவதுண்மைசாந்தம் போலவாங்கேளுநீதான்
பூசுவதுண்மையென்று புலால்வடி நாறுமேனி. 446

மந்திரஞானஞ்செல்வம் வையகத்திவைகண்மூன்று
மந்திரமறிஞர்பொய்யை யறிந்தவையடையவேண்டும்
மந்திரஞ்சொரூபஞான மான்மாமருவையேயாகும்
மந்திரவிரவியாலே மனனனேகண்டுகொள்ளே. 447

தந்தனமெய்ம்முயற்சியாலே சகலமுமடையவர்வப்பு
தந்தனமரித்தார்வந்து தனயனுக்கெடுதிவார்போற்
தந்தனமுறையானுக்குச் சம்மதமுறையேநீயுந்
தந்தனமதியே;நின்னந் தலைவனுலெறனுயென்றான். 448

## வேறு விருத்தம்

சொல்லியநன்மகவுரையை யன்னைகேட்டுச்
சுயமதியேயிவையன்றிப் பிறர்களியாருஞ்
சொல்லியல்பாலுருளல்ல வென்றிவ்நன்னி
தொடுக்கவலைமிகவுள்ளாய் தந்தையொடுஞ்
சொல்லிபவருடனல்லா யோதத்தீன்ற
தோகைமுனம்பிறந்தவனு மதற்குநேபிச்
சொல்லியவன்மகிழ்னுள தறியவிந்தச்
சுந்தரனுமதற்கிசையே னினிவேறென்ன. 449

அந்தமொழிகேட்டவனு மன்னைதந்தை
வசத்தியங்கொண்டானெனவு நன்னேன்னேல
அந்தமொழியிம்மாதுஞ் செவியிற்கேட்டு
அவனைமணம்புரியெனக்கு சூக்ஷித்தேர்ந்தே
யுந்தன்மொழிதெரியவரும் பின்னுல்நீங்கள்
உவமையுடனிருப்பீரென் றடிகள்போற்றி
அந்தமொழிக்கசத்தியங்க ளணுகாவண்ண
மரிவையுளமியோசனைக்கு ளழிந்தியம்மா. 450

இருக்கின்றசமயத்தி லவனுமின்னு
னிருக்குமில்லம்வந்தடைந்தா னிவைதான்கேட்டு
மருமலருங்குழலாளே யறிகில்கூவி
மனங்கொண்டதென்பிரிதி வையா நீயுஞ்
சருவகுலமாத ரிவ்வாருரைத்திடார்கள்
தப்பிலியென்றவனுரைக்கத் தையல்சொல்வாள்
அருமையெனதுளமறியாத சத்தியவார்த்தை
யறைந்தன்னிபிறவி தொறுமருமையாக. 451

மைந்தரின்றிக்கொள்ளி மருமைந்தன் வைகை
மரிப்பன்னவழங்கிடவு மைந்தன்கேட்டுச்
சிந்தையுமைந்திருகையனு புடக்கையென்ரு
நீள்சுனையில்விழுந்திறந்தாள் நேமியோர்கள்
சிந்தைமிகநொந்தார்கள் சிறந்தாய்தந்தை
திகிலிட்டுநொந்திருந்தார் தேவிகேளு
அந்தவினைசூழ்ந்திவனை யாவிநீத்து
அருநரகம்புக்குவெகு துன்பம்நொந்து 452

பிரமன்கையிலக்கத்தில் புக்குஊந்த
புத்திரனுவந்தவனு வவனேயின்னேன்
பரமனுடைச்சமயத்து வணிகனின்ற
பாலகனுமிவனெனப் பகர்ந்தோமந்தக்
கரவுமதிநாலுடையா னிட்டசாபம்
வந்திந்தசனனத்தில் செய்யக்குற்றம்
திறமதனையின்னதென்றே தேவிகேளு
சேய்களொன்றுமணுகாது செப்பினேமே. 453

அந்தவினைப்பழிக்கிதனையிதன்
விபரமதை யறையக்கேளு

சிந்தையுறும்சேதுபுக்குச் சிறுமதலைக்
  காஞ்சினத்தால் மறையோமாது
கந்தமரதுயிலடைக்கா வேமத்தோடு
  மளித்தவளின்பதம்போற்றி னென்னுல்செய் ந
வந்தகுறையோதியவள் வாக்கினுலே
  மைந்தருண்டாமெனவுரைப்பாள் மகிழத்தானே. 454

பழநிமலைக்கேகியங்கண் சாமிதானைப்
  பணிந்தெங்கள்குலம் விளங்கச்சேயுண்டானுல்
பிழையகலத்தங்கத்தால் வடிவேல்சாத்திப்
  பிறந்தசேய்க்கறைவதுநின் னுமமென்று
குடையுடையதேவியொடு சஷ்டிநோன்பு
  குறித்திருந்துமுறைப்படியே முடிப்பாயானுல்
விழநுசுப்புக்கன்னியொன்று மாண்சேயொன்று
  மிணங்குமிவைசெய்யானே னில்லையெண்ணே. 455

இந்தவகைமுன்செனனத் தியற்கைசொன்னேம்
  இனிக்குடும்பபலனனைத்து மியம்பக்கேளே
தந்தையொடுபிறந்தார்க ளாண்பால்மூன்று
  தானதினிலின்னேனுந் திரியோனுகும்
வந்தவனுக்கிருதார மைந்தன்தாயும்
  வகுத்தனங்கேள்தலைவியே மருதாரத்துஞ்
சிந்தையுறும்வான்சேயும் தீர்க்கஞ்சொல்லத்
  திடமிலதுமிவன்துணைவர் செய்யக்கேளே. 456

கன்னியோர்நான்குண்டு ஆண்பால்மூன்று
  காணதிலேயிவன்றறியோன் காளவெண்ப
சொன்னதந்தைதன்னுலும் பூமியில்லை
  சொல்வதற்குஞாதிகளும் சுகத்தைக்காணேம்
வின்னமுறநிதிகுணங்க ளிருந்திடாது
  விருத்திபலவியாபாரம் பொருள்கைகூடும்
தன்னயச்செய்சிவப்புடையாள் வளர்த்தியல்ல
  நற்றமிழ்உலகவாதி மிலக்கந்தேர்வாள். 457

சுதன்தனக்குப்பூமியில்லை பலசரக்குத்
  தொடுமுயற்சிசெய்வதனுல் சுகமாமெத்த
இதமுடையமெதுவசனம் வற்பவுண்டு
  இன்பமிகுபாலிச்சை யின்பங்கொள்வான்

மதினுதலிபரதார யோகமுண்டு
மரியாதைதகுணமுடைய வசனமுள்ளான்
கதியடையதவமுயற்சி கருத்துள் வைப்பான்
காசொன்றுபகுதிகட்குக் கருத்தாயீவான். 458

ஒக்கன்மிகவுடையனுமாம் நல்லோர்நேயன்
உண்டாகும்வெகுகுடும்ப முறைகாலாகும்
தக்கநிதிதேடுதற்குச் சமர்த்தன் மிக்க
சயனசுகமுடையனுமாய்க் கபடாநெஞ்சம்
மிக்கநலம்பெறுதற்குக் கரத்தினுலும்
விரும்புசஷ்டியுடன்புந்தி மூன்றுங்கூடி
நக்கநடுதொழும்புடையார் தவத்தினேர்க்கு
நயந்தசனமிகுவதனுல் பலனைக்கேளு. 459

## தீசாவருடப் பலன்

சிவகளையும்முகத்துண்டாஞ் சிறுநோயில்லை
சேரிலவைவெகுவாகத் தீரும்பாரு
நவமியாதுமற்பசெல்வம் நாங்களீதிற்
வரைக்குகில்லோமசுபத்தைச் சொன்னேம்பாரு
தவமுடையபாலனுக்கு எந்தநாளும்
தாழ்வொன்றும்வாராது செல்வமிக்கான்
துவப்புடையபலன்னத்தும் வருடந்தன்னில்
சொல்லுகிறேம்மதன்விவரம் சுளுவிற்கேளே. 460

அன்னையொருவாரத்தில் இவனைவைத்து
அரும்பதிவிபுகுந்திடுவா ளம்மாசொல்லு
பின்னுறையும்பிராயமது விருபானிரண்டு
பேசும்வரையனுப்பலன் பேசலாகும்
மன்னுமதற்காருண்டில் தேளுராசி
வருநாதமுன்னுக்குள் கன்னியொன்றை
நன்னயனன்மணம்புரிவா னவளுமம்மா
நவின்றமுறைப்படிசெய்யச் சேய்களுண்டே. 461

மணஞ்செய்தவருடமுதல் மளிகைத்தன்னுல்
வருஞ்செல்வமிகவெனவும் வகுக்கலாகும்
ஒன்னுமதில்முவ்வாண்டில் சிறக்கஇல்லை
யுயர்வாகச்செய்திடுவாள் முப்பான்ரெண்டில்
நண்ணுதந்தைபதம்புகுவா னைரெண்டில்
நயந்தவ்வூர்தனில்வணிக னெருவனேடு

ஒண்ணியொருசெங்குளத்தாய் வியாபாரத்தை
ஒத்துசெய்வான்வெகுநிதிய முடையோனுவன். 462

எண்ணணேழாண்டி லில்லம்வேருயல்லோ
இசைந்திடுவான்சவரிதுயி லிசையுங்கட்ட
உண்ணயந்தவதன்மேலாய்த தருமஞ்செய்வான்
உபகாரமெவர்களுக்கு முதவியுண்டு
நண்ணுவெகுகீர்த்திகளுமா யுள்மட்டும்
நயந்தமனேயிரந்திடுவா னன்பானெட்டில்
ஒண்ணுதலுமுடையனுமாய் வாழ்ந்துச்ஷ்டி
உயர்மூன்ருமாண்டிலிவ னடைவான்வானே. 463

இந்தநற்பலனையாங்க ளிசைத்தனனவக்கோளாலே
முந்தியகருமகாண்டம் முறைப்படிபவமொழித்தால்
சுந்தரன்தனக்குச்சொன்ன சுகமெலாமனுபவிப்பான்
இந்திரனிறைஞ்சுமாதே யெழில்சுதன்பலனிதாமே. 464

பதினொன்ருவது ஜாதகம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

# மீன லக்கினம்

| | | | |
|---|---|---|---|
| லக்கின ரா-சுக் புதன் | | | சனி |
| சூரியன் | இராசி சக்கரம் | | |
| | | | |
| செவ் சந்திர | | | குரு கேது |

சந்திரனாரல்தனுவில் சார்ந்திடவீணைமைந்தன்
சுந்தரசிகியுமன்னன் சூழ்கன்னிசாடிவெய்யோன்
புந்தியஞ்சுங்கன்ராகு புகழ்மீனில்வந்துநிற்கச்
சுந்தரன்மீனமுற்றால் இருநிலம்பிறந்தசேய்க்கே. 405

## (வேறு விருத்தம்)

வீதியதுசூரியவாஸ் தாகுமில்லம்
விளம்புகிறோம்தவவாசல் கடகநோக்கு
ஓதுவதில்லொருபாலில் கிரகமாகும்
முயர்மனைக்குக்கடகத்திற் றீர்த்தமுண்டு
வாதியுரைகோயிலதன் மேற்கிலம்மா
வன்புடையபலன்முன்னம் ஜனனந்தன்னைச்
சோதிமதிமுத்தமுதே யெங்கண்மாதே
சொல்லுகிறோமதன்விபரஞ் சுளுவாய்க்கேளே. 406

அவனியிலேகாஞ்சிநகர் கருகுதென்பால்
ஆயர்குலத்துதித்தநிதி யனேகம்பெற்றுத்
தவநிலையையுடையனுமாய் முகுந்தன்பாதம்
தரிசித்துமுப்போதுந் தாளைப்போற்றி
நவநீதமெனவுறுங்கோ இருந்துநிற்க
நற்கதியைப்பெறநண்ணி நயந்துகூறி

பவமதுவுஞ்சேராமற் பிறவிநீக்கிப்
பதமுறவேமனமுன்னே பரிந்தந்நாளில். 467

எப்போதுமரிவசன மொறுவார்கூறி
இசைசுரவிக்கம்மியமாய்ப் பூமிமேலாய்த்
தப்பாதுநவநிதியும் பெருக்கம்பெற்றுத்
தையலர்கள்பதிமூன்று தாரந்தொட்டு
மெய்ப்பாகவுலகவர்க்குக் கீர்த்தியுண்டாய்
விளங்கியேபுதல்வருடன் வாழுநாளில்
ஒப்பரியஇவ்வேளைக் காரியீன்ற
ஒளிவதனமுகத்துடையாள் விதவைமாதே. 468

இச்சைகொண்டுபோகித்துக் கருவுண்டாகி
யீன்றதனயவர்வதைக்க வுற்றபாவம்
நிச்சயித்துவந்தவனைச் சூழ்ந்துகொண்டு
நீள்நரகம்புக்கியபங்கு பலனுட்போக்கிப்
பச்சமயிலுடையவனே யீன்ருய்கேளு
பங்கயவாசவனைபுரை யோர்க்குச்செய்து
உச்சரித்துவொருநூறு பேர்களுக்கும்
உறுதியாய்ச்செய்யும்வகை யோதக்கேளே. 469

இன்பமுடன்இவர்களுக்கு அன்னமீந்தால்
இப்பிறவிநீங்கிவிடும் இனிமேற்கேளு
அன்புடையபாலனிவன் பிறந்துசெல்வம்
அனுபவிக்கஅந்தவகை அம்மாசொல்வோம்
பொன்பூமிநவநிதியும் முன்னுள்யோகம்
போனவனேயனுபவிக்க வந்தானென்று
தென்புறவேயிவன்பலன்க ளறியநன்ருய்த்
தெரிவிப்பேன்சூக்ஷமதாய்த் தேவிகேளே. 470

இவனுடல்மிகுசிகப்பு வளர்த்தியுள்ளான்
இனத்துணைகள்கன்னியொன்று இவனுேர்மூத்த
உவமையுளஅத்துவென்றே ஆண்பாலில்லை
வுருப்பதற்குப்பின்துணைகள் ஒன்றுமில்லை
தவமுடையபதிற்கிவன்றன் யோகந்தன்னைச்
சாற்றுகிறேமெங்களிட தாயேகேளு
பவந்தொடரப்பிறந்திந்தப் பாலனாலே
பாக்கியங்கள்வரும்பகையைப் பகர்வோமம்மா. 471

